Title :
ALFRED HITCHCOCK
MARMA KATHAIGAL
ALFRED HITCHCOCK

ISBN : 978-81-8476-544-1

விகடன் பிரசுரம்: 778

நூல் தலைப்பு:
ஆல்ஃப்ரட் ஹிட்ச்காக் மர்மக் கதைகள்

நூல் ஆசிரியர்:
ஆல்ஃப்ரட் ஹிட்ச்காக்

தமிழில்:
பெரு.முருகன்

அட்டை வடிவமைப்பு:
த.வினோத்

முதற்பதிப்பு : நவம்பர், 2013

விலை : ₹ 110

பதிப்பாளர்:
பா.சீனிவாசன்

முதன்மை உதவி ஆசிரியர்:
அ.அன்பழகன்

முதன்மை வடிவமைப்பு:
மு.ராம்குமார்

வடிவமைப்பு:
ப.ஷங்கர்



விகடன் பிரசுரம்
757, அண்ணா சாலை, சென்னை-600 002.

எடிட்டோரியல் பிரிவு போன்: 044-28524074 / 84
விற்பனை பிரிவு போன்: 044-42634283 / 84
e-mail: books@vikatan.com

# பதிப்புரை

திரையரங்குகளை நோக்கிவரும் ரசிகப் பெருமக்கள் திரைப்படத்தை பார்த்து ரசிக்க வேண்டும் அல்லது வயிறு வலிக்கச் சிரிக்க வேண்டும் அல்லது திரைப்படத்தைப் பார்த்து ஒருவன் திருந்த வேண்டும்... இப்படித்தான் திரைப்பட இயக்குநர்கள் தாங்கள் இயக்கும் திரைப்படங்கள் குறித்துச் சொல்கிறார்கள்... சொல்வார்கள்!

ஆனால், தன்னுடைய திரைப்படத்தைப் பார்த்துப் பார்வையாளர்கள் அலறியடித்துக்கொண்டு ஓட வேண்டும் என்று ஆல்ஃப்ரட் ஹிட்ச்காக் கூறினார்! "திரைப்படம் என்ன சொல்லவருகிறது என்பதைப்பற்றி எனக்குக் கவலையில்லை. பார்வையாளர்களை அலறவைக்கும் யுக்தியைப் பற்றித்தான் எனக்கு அக்கறை. ஒரு படம் நேர்த்தியாக அளிக்கப்படுவதன் மூலம் பார்வையாளர்கள் ஜப்பானில் இருந்தாலும் சரி, இந்தியாவில் இருந்தாலும் சரி அவர்கள் ஒரே விதமாக திகிலுற வேண்டும்" என்றார் அந்த திகில் மன்னன்.

ஆல்ஃப்ரட் ஹிட்ச்காக்கின் கதைகள் அனைத்தும் ஒரு கொலையையோ அல்லது திகில் சம்பவத்தையோ மையப்படுத்தி இருக்கும். சின்னஞ்சிறிய கதையை மர்ம சினிமாவாக எடுத்து ரசிகர்களை மிரட்டியவர் அவர். தமிழ்ப் படங்களில் கதாநாயகனை போலீஸ் அல்லது வில்லன் துரத்தும் போது வழியில் ஆட்டு மந்தையோ, மாட்டு மந்தையோ வாத்துக் கூட்டமோ வழிமறிக்கும். இந்தக் காட்சியை முதன்முதலில் அறிமுகப்படுத்தியவர் ஹிட்ச்காக்தான்.

தொடக்கக் காலத்தில் மௌனப் படங்களுக்கு டைட்டில் கார்டுகள் எழுதிவந்த சிறந்த ஓவியர் ஹிட்ச்காக். இங்கிலாந்தில் பிறந்த அவர், உலக சினிமா ரசிகர்களின் மனதில் இடம் பிடிக்க மர்மக் கதைக் களம் பேருதவி புரிந்தது.

சினிமாவில் புதுமைகளைப் புகுத்திய திகில் மன்னன் ஹிட்ச்காக்கிடம் "சிறந்த திரைப்படம் எடுக்க என்ன செய்யவேண்டும்?" என்ற கேள்வி கேட்கப்பட்டது. அதற்கு ஹிட்ச்காக் சொன்னது மூன்று அம்சங்கள். ஒன்று திரைக்கதை,

இரண்டு திரைக்கதை, மூன்று திரைக்கதை.

ஆம்! கதையை மட்டுமே நம்பி ஹிட்ச்காக் சினிமா எடுத்தார். அவருடைய ஒவ்வொரு மர்மக் கதையும் நிச்சயம் திகிலை ஏற்படுத்தும்; வாசிப்பதற்கு சுவாரசியம் நிறைந்தது. வாசகர்களின் குதூகலத்துக்காக ஆல்ஃப்ரட் ஹிட்ச்காக் மர்மக் கதைகளில் சிறப்புடைய சிலவற்றை இந்த நூலில் தொகுத்துத் தந்துள்ளோம்.

இனி, திகிலோடு உறவாடுங்கள்!

# மொழிபெயர்ப்பாளர் முன்னுரை

இந்தத் தொகுதியில் வரும் 11 கதைகளும் ஆல்ஃப்ரட் ஹிட்ச்காக்கின் வெவ்வேறு நூல்களில் இருந்து எடுக்கப்பட்டவை. அவர் குறைந்தது முன்னூறுக்கும் மேற்பட்ட நூல்களை எழுதியுள்ளார். எழுதியுள்ளார் என்றால் அவர் எழுதியது அல்ல. மாறாகப் பலர் எழுதிய சிறுகதைகள், நாவல்கள் ஆகியவற்றைத் தணிக்கை செய்து தன் பெயரிலேயே வெளியிட்டார்.

1899-ல் இங்கிலாந்தில் பிறந்து, பின் அமெரிக்கா சென்று பல திகில் படங்கள் தயாரித்த பின்னர் 1980-ல் கலிஃபோர்னியாவில் இயற்கை எய்தினார். 'மாஸ்டர் ஆஃப் சஸ்பென்ஸ்' என்ற சொற்றொடர் அவரை மட்டுமே குறிக்கும். அந்த அளவு அவர் வெளியிட்ட முந்நூறுக்கும் மேற்பட்ட கதைத் தொகுதிகள், ஐம்பதுக்கும் மேற்பட்ட படங்கள் யாவும் அவற்றைப் படிக்கின்ற அல்லது பார்க்கின்றவர்களை மர்மத்தில், திகிலில், படபடப்பில், பயங்கரத்தில் ஆட வைப்பவை. திகில் - இந்தச் சொல்லின் பொருளை அவருடைய உருவம் மட்டுமே கூறும்.

அவர் தயாரித்த பெரும்பாலான படங்கள் யாவும் முன்னரே கதைகளாக வந்திருக்கின்றன. அவற்றில் சைக்கோ, பேர்ட்ஸ், 39 ஸ்டெப்ஸ் முதலான படங்கள் குறிப்பிடத்தக்கன. தவிர ஆம்ப்ரூஸ் பியர்ஸ் என்பவர் 1909-ல் எழுதிய 'ஆன் அக்கரன்ஸ் அட் ஔல் க்ரீக் பிரிட்ஜ்' என்ற சிறுகதையைப் பின்னாளில் அவர் தன் தொகுப்பில் வெளியிட்டார். அந்தக் கதை சிறிதுகூட மாற்றமின்றி ஒரு குறும்படமாக வெளியில் வந்து இன்றும் பார்வையாளர்களை, கலைஞர்களை பாதித்துக் கொண்டிருக்கிறது.

இந்தத் தொகுப்பிலுள்ள 'நீல பேப்பர்' என்ற கதை, ஒருவனது வாழ்க்கை விநாடி நேரத்தில் பறிக்கப்படும்; அதற்கான காரணமும் தெரிவதில்லை என்ற உண்மையை சொல்வதாகும். 'பெண்ணா, புலியா?' என்ற சிறுகதையை சில ஆண்டுகளுக்கு முன்னர் எழுத்தாளர் சுஜாதா அவர்கள் குறிப்பிட்டுள்ளார். மற்றும்

இந்தக் கதைகள் சொல்லும் திகிலை நான் கூறப்போவது இல்லை; படிக்கின்ற வாசகர்களே தீர்மானிக்கட்டும்.

மற்றும் வாசகர்களுக்கு ஒரு வேண்டுகோள். ஹிட்ச்காக்கின் கதைத் தொகுதி ஆங்கிலத்தில் இருந்தால் என்னைத் தொடர்புகொள்ளும்படி கேட்டுக்கொள்கிறேன்.

இந்தக் கதைத் தொகுப்பைக் கொண்டுவரும் விகடன் பிரசுரத்துக்கு எனது ஆழ்ந்த நன்றிகள். ஆல்ஃப்ரட் ஹிட்ச்காக் படங்களின் வாயிலாக அவருடைய எழுத்துகளை இனம் காட்டிய ஆனந்தவிகடனில் பணிபுரியும் நண்பர் மோ.ராஜேந்திரனுக்கும், இணையதளத்தில் எனக்காக போராடி சில கதைகளை எடுத்துத் தந்த 'குங்குமம் தோழி' வள்ளிதாசனுக்கும் எனது நன்றிகள்.

- பெரு.முருகன்

செல்: 99402 56596

இமெயில்: perumurugan6@gmail.com

# உள்ளே...

# 1

## பறவைகள்

என்னவாயிற்று அவற்றுக்கு? வெயிற் காலத்தின் திருப்தியின்மையும் சோகமும் அவற்றை என்னமோ செய்திருக்க வேண்டும். குளிர்காலம் வருவதற்கு முன்பே இதுபோன்ற அசைவுகளை ஏற்படுத்திச் சஞ்சாரம் செய்யலாம்.

ஒருவேளை வெயிற் காலத்தில் ஏதேனும் எச்சரிக்கை பறவைகளுக்கு செய்யப்பட்டிருக்கலாம் என நாட் நினைத்தார். குளிர்காலம் வரப்போகிறது. அவற்றில் பெரும்பாலானவை அழிந்துபோகும். வருகிற மரணத்தை புரிந்துகொள்ளும் மக்கள் வேலையிலோ மடத்தனத்திலோ மூழ்குவதைப்போல், இந்தப் பறவைகளும் செய்கின்றனவோ என்னவோ? நாளை நாமும் இறந்து போவோம்.

பறவைகள் எப்போதுமில்லாமல் இந்த வருட இறுதியில் ஓய்வு ஒழிச்சலின்றி அலைகின்றன. அவற்றின் துடிப்பு நன்றாகவே தெரிந்தது.

மிஸ்டர் டிரிக்கரின் டிராக்டர் மேற்கத்திய மலைப் பிராந்தியத்தில் மேலும் கீழும் ஓடியது. அப்போது அந்த இயந்திரம் பறவைகள் மேகம்போல் வந்து முட்டியதால் நின்றுபோனதை நாட் கவனித்தார்.

நாட் மிஸ்டர் டிரிக்கரிடம் அந்த நாள் வேலை முடிந்து போனதாகக் கூறிப் பறவைகளைக் கை காட்டினார்.

"ஆம், வழக்கத்தைவிடப் பறவைகள் அதிகமாகத்தான் உள்ளன. கால நிலை மோசமாகத்தான் இருக்கப்போகிறது. வரப்போகும் குளிர்காலம் கடுமையாக இருக்கப்போகிறது. அதனால்தான் பறவைகளெல்லாம் அமைதியற்று காணப்படுகின்றன."

அந்த விவசாயியின் வார்த்தைகள் சரியாகிப்போனது. அன்றிரவு கால நிலை மாறியது.

வீட்டின் படுக்கையறை கிழக்குப் பார்த்திருந்தது. நாட் இரவு இரண்டு மணிக்கு கண் விழித்தபோது, கிழக்கிலிருந்து அடித்த காற்று குளிராகவும் ஈரமாகவும் இருப்பதைக் கண்டார். புகைபோக்கியில் காற்று வீசியதால் எழுந்த சத்தத்தையும், கூரையில் தகரம் ஒன்று ஆடிய ஓசையையும் கேட்டார்.

இன்னும் உற்றுக் கேட்டபோது அலைகள் ஆர்ப்பரிப்பதையும் கேட்டார். அவர் போர்வையை நன்றாக போர்த்திக்கொண்டு, ஆழ்ந்த உறக்கத்திலிருந்த மனைவியின் பக்கம் திரும்பிக்கொண்டார். பிறகு ஜன்னலை ஏதோ தட்டும் ஓசையைக் கேட்டார். அது தொடர்ந்து ஒலித்து இறுதியில் எரிச்சலாகி, படுக்கையிலிருந்து எழுந்து ஜன்னலைத் திறந்து பார்த்தார்.

அவர் திறந்ததும் எதோ ஒன்று கைகளை உரசி, மணிக்கட்டைத் தேய்த்துத் தோலைக் கிழித்தது. பின் சிறகுகள் அடிக்கும் ஓசையையும் அவை வீட்டுக்கு பின்னே மாடியை நோக்கிப் போவதையும் உணர்ந்தார்.

அது ஒரு பறவை. என்ன வகையான பறவை என்று அவரால் சொல்ல முடியவில்லை. காற்று வேகமாக அடித்ததில் அந்த பறவை இந்த இடத்தை புகலிடமாககொண்டிருக்க வேண்டும்.



அவர் ஜன்னலை மூடிவிட்டுப் படுக்கையை நோக்கி சென்றபோது கை மூட்டுகளில் ஈரத்தை உணர்ந்து, வாயருகே கொண்டு போனார். பறவைதான் ரத்தத்தை வரவழைத்து விட்டிருக்கிறது.

பயந்துபோயோ தடுமாறிப் புகலிடம் தேடியோ வந்த அந்தப் பறவை இருட்டில் அவரைக் கொத்திவிட்டிருக்கும். ஒருவழியாக அவர் திரும்பவும் தூங்கத் தயாரானார்.

அப்போது திரும்பவும் தட்டப்படும் ஓசை கேட்டது. இந்த முறை பலமாக விடாப்பிடியாகக் கேட்டது. இதனால் அவருடைய மனைவி கண்விழித்துப் படுக்கையில் புரண்டபடி அவரிடம், "நாட் ஜன்னலைப் பாருங்கள். யாரோ தட்டுகிறார்கள்" என்றாள்.

"நான் முன்பே அதைச் சோதித்துவிட்டேன். அங்கே சில பறவைகள் உள்ளே வர முயற்சிக்கின்றன" என்று நாட் சொன்னார்.

"அவற்றை அப்பால் விரட்டிவிட்டு வாருங்கள். என்னால் அந்தச் சத்தத்தில் தூங்க இயலாது."

இரண்டாவது முறையாக அவர் ஜன்னலருகே சென்று அதைத் திறந்தபோது ஒன்றுக்குப் பதிலாக அரை டஜனுக்கு மேல்

பறவைகள் இருந்தன. அவை முகத்துக்கு நேராகப் பறந்து வந்தன.

அவர் கத்திக்கொண்டே கைகளால் அவற்றைத் தாக்க முயன்றார். பின் சிதறடிக்க முயன்றார். உடனே முதல் பறவையைத் தொடர்ந்து மற்றெல்லாப் பறவைகளும் கூரையில் சென்று மறைந்தன.

திடீரென்று நடையைக் கடந்து எதிர் அறையிலிருக்கும் குழந்தைகள் பயத்தால் அலறுவது கேட்டது.

"அது ஜில்" அவர் மனைவி சொல்லிக்கொண்டே படுக்கையிலிருந்து எழுந்தாள்.

இரண்டாவது முறையும் அலறல் கேட்டது; இந்த முறை இரண்டு குழந்தைகளிடமிருந்தும். தடுமாறியபடி அவர்களின் அறைக்குள் நுழைந்த நாட், இருளில் இறக்கைகள் தன்மீது படுவதை உணர்ந்தார். ஜன்னல் அகலத் திறந்திருந்தது. அதன் வழியாக உள்ளே நுழைந்த பறவைகள் முதலில் மேல் விதானத்தையும் சுவர்களையும் அடித்த பின்னர் குழந்தைகளிடம் பாய்ந்திருக்கிறது.

"பயப்படாதீர்கள் நான் இங்கே இருக்கிறேன்" என்று கூக்குரலிட்ட நாட்டைக் குழந்தைகள் பாய்ந்து கட்டிக்கொண்டனர். அதே நேரம் இருளில் அலைந்த பறவைகள் மீண்டும் அவரை நோக்கி வந்தன.

"என்ன ஆனது நாட்" மனைவி குரல் கொடுத்தாள். சடாரென்று குழந்தைகளை அறைக்கு வெளியே தள்ளிய நாட் கதவை உட்பக்கமாகச் சாத்தி தாளிட்டார். எனவே பறவைகளோடு அவர் மட்டுமே இருப்பார்.

அருகில் இருந்த படுக்கையிலிருந்து போர்வை ஒன்றை எடுத்துக்கொண்டவர் அதை ஆயுதமாகப் பயன்படுத்தி இடது, வலது என சுழற்றினார்.

உடல்கள் மோதும் சப்தத்தையும், இறக்கைகள் படபடவென அடிப்பதையும் கேட்டார். ஆனால், பறவைகளை இன்னும் வீழ்த்த முடியவில்லை. அவை திரும்பத் திரும்ப அவர் மேல் பாய்ந்து தாக்கிக் கை, தலை ஆகியவற்றைக் கொத்திவிட்டன. அவற்றின் சின்னஞ்சிறு அலகுகள் கத்தியைப்போல் இருந்தன.

போர்வை தற்காப்பு ஆயுதமாக மாறியது. தலைக்கு மேலாக அதைப் பிடித்தபடி சூழ்ந்த இருளில் பறவைகளை வெற்றுக் கைகளால் தாக்கினார். அதே சமயம் கதவின் மேல் விழுந்துவிடாதபடி எச்சரிக்கையாக இருந்தார். அது திறந்து கொண்டால் பறவைகள் வெளியில் வந்துவிடும்.

அந்த இருள் சூழ்ந்த வேளையில் பறவைகளோடு எவ்வளவு நேரம் சண்டை போட்டார் என்பதை அவரால் சொல்ல இயலவில்லை. ஆனால், இறுதியில் இறக்கைகள் படபடப்பது குறைந்துபோய் நின்றேவிட்டது. அடர்த்தியான போர்வையின் ஊடே மங்கலான வெளிச்சத்தை உணர்ந்தார்.

அவர் காத்திருந்தார்! அமைதியாகக் கவனித்தார். படுக்கை அறையிலிருந்து பயந்துபோன குழந்தைகளின் கத்தலைத் தவிர வேறொன்றும் கேட்கவில்லை.

போர்வையை விலக்கிவிட்டுத் தன்னைத்தானே கவனத்துடன் வெறித்தார். மங்கலான விடியற்காலை ஒளி அறையைக் கோடிட்டுக் காட்டியது.

வெளிச்சமும் திறந்திருந்த ஜன்னலும் பறவைகளை அழைத்தன. செத்துப்போன பறவை ஒன்று தரையில் கிடந்தது. ஜுரம் வந்தவர்போல நாட் ஜன்னலருகே சென்று தோட்டத்தையும் அதற்கு அப்பால் தெரிந்த விளை நிலத்தையும் வெறித்தார்.

குளிர் படு பயங்கரமாக இருந்தது. கிழக்கிலிருந்து அடிக்கும் காற்று கொண்டு வந்த பனி, தரையின்மீது கறுப்பாக படர்ந்திருந்தது. கடல், முன்னரைவிட ஆக்ரோஷமாக நுரை கக்கி கரையின்மீது மோதியது. பறவை மட்டுமே காணோம்.

நாட் ஜன்னலையும் கதவையும் சாத்திவிட்டு நடந்து தன் அறைக்குள் நுழைந்தார்.

அவருடைய மனைவி படுக்கையில் அமர்ந்திருக்க ஒரு குழந்தை அவள் அருகில் தூங்கிக்கொண்டிருந்தது. மற்றொருவன் வயதில் இளையவன். அவன் முகத்தில் கட்டுப் போட்டிருக்க மனைவியின் கையில் இருந்தான்.

"அவன் தூங்கிக்கொண்டிருக்கிறான்" கிசுகிசுப்பான குரலில் அவள் சொன்னாள். "ஏதோ ஒன்று அவனை அறுத்து விட்டிருக்க

வேண்டும். அவன் கண்களின் ஓரம் ரத்தக் கறை இருந்தது. 'ஜில்' அந்தக் கறை பறவைகளால் ஏற்பட்டதெனச் சொன்னாள். தன் அறையில் பறவைகள் வந்து எழுப்பிவிட்டதாகக் கூறினாள்."

அவருடைய மனைவி அவருடைய முகத்தைப் பார்த்து தான் சொன்னதை அவர் ஒப்புக்கொள்வார் என எதிர்பார்த்தாள். அவள் பயந்துபோய் மிரட்சியுடன் இருந்தாள். கடந்த சில மணி நேரமாகத் தானும் ஸ்தம்பித்து ஆடிப்போயிருந்ததை அவள் அறியக் கூடாது என நாட் நினைத்தார்.

"அங்கே பறவைகள் இருந்தன. குறைந்தபட்சம் ஐம்பதாவது இருக்கும்" என்று நாட் சொன்னார். அவர் படுக்கையில் மனைவிக்கு பக்கத்தில் அமர்ந்துகொண்டார்.

"பருவ நிலை மோசமாக ஆகிவிட்டிருக்கிறது" என்றாள்.

"ஆம், அதுதான். மோசமான பருவ நிலை. ஒருவேளை அவை இங்கிருக்கும் பறவைகளாக இருக்க முடியாது. நாட்டின் வேறு பக்கத்திலிருந்து வந்திருக்கும்" நாட் சொன்னார்.

"ஆனால், நேற்றிரவுதான் பருவ நிலை மாறியது. அவற்றுக்குப் பசி எடுத்திருக்காது. எடுத்திருந்தாலும் விளை நிலத்தில் தேவையான உணவுப் பொருள் இருக்கிறது" மனைவி ரகசியமாகக் கூறினாள்.

"இல்லை பருவச் சூழ்நிலைதான் காரணம்" என நாட் கூறினார்.

அவருடைய முகமும் அவளுடையதைப்போலவே தொங்கிப் போய்க் களைப்படைந்து காணப்பட்டது. அவர்கள் இருவரும் ஒருவரை ஒருவர் சற்று நேரம் வரை வெறித்துப் பார்த்துக்கொண்டனர்.

நாட் ஜன்னலருகே சென்று வெளியில் பார்த்தார். வானம் வெறுமையாகப் பழுப்பு நிறத்தில் இருக்க, முந்தின நாளில் பிரவுன் நிற மலைகள் சூரிய ஒளியில் பளிச்சிட்டது இப்போது வெறுமையாகக் கருமையுடன் காணப்பட்டன. கருத்த பருவ காலம் ஒற்றை இரவிலேயே இறங்கி விட்டிருக்கிறது.

குழந்தைகள் இப்போது விழித்துக்கொண்டுவிட்டன. ஜில் ஏதோ உளறிக்கொண்டிருக்க சிறு குழந்தை ஜானி மறுபடியும் அழ ஆரம்பித்தான். நாட் படிகளில் இறங்கியபோது, அவர் மனைவி

குழந்தைகளை ஆறுதல்படுத்த முயன்றது கேட்டது. அவர்கள் கீழிறங்கி வந்தனர்.

அவள் காலை உணவைத் தயார் செய்துவிட்டிருந்தாள்.

"பறவைகளை நீங்கள் துரத்திவிட்டீர்களா?" ஜில் கேட்டாள்

"ஆமாம். அவை போய்விட்டன. கிழக்கு திசை காற்றே அவற்றைக்கொண்டு வந்து விட்டிருக்கும்" நாட் பதில் அளித்தார்.

"அவை திரும்பவும் வராது" நம்பிக்கை தெரிவித்தாள் ஜில்.

"பேருந்து நிறுத்தம் வரை நான் உன்னுடன் வருகிறேன்" நாட் அவளிடம் சொன்னார்.

முந்தின நாள் இரவில் நடந்த அனுபவங்களை ஜில் மறந்துவிட்டதுபோல் தெரிந்தது. அவள் அவருக்கு முன்னே நடனமாடிக்கொண்டே, பறக்கும் இலைகளைத் துரத்திக் கொண்டே போனாள். அவளுடைய முகம் ரோஜா நிறத்தில் இருக்க, தேவதைபோல் காணப்பட்டாள்.

அதே சமயம் நாட், பறவைகள் உள்ளதா எனப் புதர்களை சோதனையிட்டார். விளை நிலத்துக்கு அப்பால் பார்த்தார். கேக்டாஸ் பறவைகளும் காகங்களும் தென்பட்ட சின்னஞ்சிறு காட்டை நோக்கினார். ஒன்றுமே தென்படவில்லை. விரைவில் பேருந்து வந்து அவளை ஏற்றிக்கொண்டு மலைப் பக்கத்தில் ஏற ஆரம்பித்தது.

நாட் தன் பண்ணையை நோக்கி நடக்க ஆரம்பித்தார். அந்த நாள் அவருக்கு வேலை நாள் அல்ல. எனினும் எல்லாம் சரியாக இருக்கிறதா எனச் சோதனையிட வேண்டும். அவர் பண்ணை வீட்டின் பின் கதவு அருகே போனார். திருமதி டிரிக்கர் பாடுவதையும் அவளுடைய பாடலுக்கு பின்னணி இசையாக ஒயர்லெஸ் கருவி சத்தமிட்டுக்கொண்டிருந்ததையும் கேட்டார்.

"திருமதி டிரிக்கர்" நாட் உரக்க அழைத்தார்.

திருமதி டிரிக்கர் கதவருகே தோன்றினாள். அவள் அகலமாக இருந்த தோரணையான மனுஷி.

"ஹல்லோ திரு. ஹாக்கன், இந்த மாதிரியான குளிர் எங்கிருந்து வந்தது? ரஷ்யாவிலிருந்தா? இது போன்ற மாற்றத்தை நான் எதிர்பார்க்கவில்லை. இது மேலும் தொடரும் என ஒயர்லெஸ் கருவி சொல்கிறது. ஆர்க்டிக் பிரதேசத்துடன்

இதற்கு ஏதோ தொடர்பு உள்ளது" என்று டிரிக்கர் கூறினார்.

"இன்று காலை ஒயர்லெஸ் கருவியை இயக்கவில்லை. ஏனெனில் நேற்றிரவெல்லாம் ஒரே தொல்லை" நாட் பதிலளித்தார்.

"குழந்தைகள் தொல்லையா?"

"இல்லை."

எப்படி விளக்குவது என்று அவருக்குத் தெரியவில்லை. இரவில் பறவைகளோடு சண்டை போட்டது பகலில் சிறு பிள்ளைத்தனமாகத் தெரிந்தது.

திருமதி டிரிக்கரிடம் நடந்ததைச் சொல்ல முயன்றார். ஆனால், டிரிக்கரின் கண்களில் அளவுக்கு மீறிய சாப்பாட்டால் உண்டான கனவு இது என்று தெரிந்ததை உணர்ந்து கொண்டார்.

"நிச்சயமாக அவை எல்லாம் பறவைகள்தானா?" சிரித்துக் கொண்டே அவர் கேட்டார்.

"திருமதி டிரிக்கர், மொத்தம் ஐம்பது செத்த பறவைகள் - செம்பறவைகளும் குயில்களும். பருவ சூழ்நிலைதான் அவற்றைக்கொண்டு வந்திருக்கும் என நான் நம்புகிறேன். படுக்கையறையில் என்னை அவை தாக்கின. அது தவிர ஜானியின் கண்களையும் கொத்த முயன்றன."

திருமதி டிரிக்கர் அவரை பயத்துடன் பார்த்தார். "நல்லது பருவநிலை மாற்றத்தால் அவை வந்திருக்க வேண்டும் படுக்கையறையில் நுழைந்த அவற்றுக்கு தாம் எங்கிருக்கிறோம் என தெரிந்திருக்காது. ஆர்க்டிக் பிரதேசத்திலிருந்து வந்த பறவைகளாக இருக்கும்."

"இல்லை, நீங்கள் இங்கே தினந்தோறும் பார்க்கும் பறவைகள்தான் அவை."

"ஐயே, என்ன சொல்வதென்றே தெரியவில்லை. தலைமை அதிகாரிக்கு எழுதிக் கேட்க வேண்டும், அவருக்கு தெரிந்து இருக்கும். நல்லது நான் போக வேண்டும்."

நாட் தன் வீட்டுக்குப் போகும் பாதையில் நடந்தார். அவர் தன் மனைவி, ஜானியுடன் சமையலறையில் இருந்ததைப் பார்த்தார்.

"யாரையாவது பார்த்தீர்களா?" என்று அவள் கேட்டாள்.

“திருமதி டிரிக்கரைப் பார்த்தேன். நான் சொன்னதை அவள் நம்பவில்லை. எனினும் அங்கே பிரச்னை ஒன்றும் இல்லை.”

“அந்தப் பறவைகளை நீங்கள் வெளியில் துரத்த வேண்டும். நீங்கள் செய்து முடிக்கும் வரை நான் படுக்கையறைக்குள் செல்ல மாட்டேன். எனக்கு அச்சமாக இருக்கிறது.”

“பயப்படுவதற்கு ஒன்றுமில்லை. அவை செத்துப் போய்விட்டன இல்லையா?”

அவர் சாக்குப் பை ஒன்றை எடுத்துக்கொண்டு விறைத்துப்போய்க் கிடந்த பறவை உடல்களை ஒவ்வொன்றாகப் போட்டார். ஆம், மொத்தம் ஐம்பது பறவைகள். எல்லாம் சாதாரண செம்பறவை வகையைச் சேர்ந்தவை. பாடும் பறவையான திரிஷின் அளவுக்குக்கூடப் பெரிதாக இல்லை. அவற்றை ஏதோ ஒன்று பயமுறுத்தி இருக்க வேண்டும் அதனால்தான் இப்படி நடந்து கொண்டன.

தோட்டத்தில் சாக்குப் பையுடன் நடந்தபோது வேறொரு சிக்கல் எழுந்தது. பனி பொழியவில்லை என்றாலும் தரை கரடு தட்டிப்போயிருந்தது. சென்ற சில மணி நேரத்தில் ஒன்றுமே நிகழவில்லை என்றாலும், கிழக்குப்புற காற்று அடித்திருக்கிறதே. அது இயற்கைக்கு மீறிய வித்தியாசமான ஒன்று. கரையில் வந்து மோதிய அலைகளில் வெண்ணிற நுரையைப் பார்த்தார். இப்போது பறவைகளைக் கடற்கரையில் புதைத்துவிடுவதெனத் தீர்மானித்தார்.

அவர் கடற்கரையை அடைந்தபோது, கிழக்குக் காற்று வலுகொண்டு வீச நிற்கக்கூட முடியவில்லை. கடல் நீர் பின்வாங்கும் நேரம் அது. அவர் கூழாங்கற்களின் மேல் பலமாக நடந்து மணல் பரப்பை அடைந்து, காற்று அடிக்கும் பக்கத்துக்கு முதுகைக் காட்டிக்கொண்டு, சாக்குப் பையைத் திறந்தார்.

தன் கால்களைக்கொண்டுக் குழி தோண்டி பறவைகளை அதற்குள் போட்டுவிட எத்தனித்தார். ஆனால், அதை செய்ய முயன்றபோது, காற்று வலிமையுடன் வீச, பறவைகளின் உடல்கள் எல்லாம் கடல் பக்கமாகத் தூக்கிச் செல்லப்பட்டு நீரில் விழுந்தன. கடல் நீர் ஏறும்போது அவை இழுத்துச் செல்லப்படும் என அவர் தனக்குத்தானே சொல்லிக்கொண்டார்.

கடலைப் பார்த்தபோது, அலைகளில் வெண் நுரையும்

கொஞ்சம் பச்சையும் தெரிந்தன. அவை உறுதியாக எழுந்து, மடிந்து பிறகு தடாலென்று விழுந்தன. கடல் பின்வாங்குகிறது. அலைகளின் சப்தம் தூரத்தில் கேட்டது.

அப்போதுதான் அவற்றை அவர் பார்த்தார். கடற் காகங்கள். கடலின் மேல் அவை தாண்டவமாடின. முதலில் அவற்றைக் கடலின் வெண் நுரை என்றே நினைத்தார். பிறகுதான் கடற் காகங்கள் என அறிந்தார். நூறு, ஆயிரம், பத்தாயிரம்... எண்ணிக்கையில் அதிகரித்துக்கொண்டே வந்தன.

காற்றுக்குத் தலைகளைக் காட்டிக்கொண்டே, நங்கூரமிடப் பட்ட கப்பலென கடல் நீர் முன்னேறும் சமயத்துக்காக காத்திருந்து, அவை எழுவதும் விழுவதுமாக இருந்தன.

நாட் திரும்பி, வீட்டுக்கு செல்லும் சரிந்த பாதையில் நடந்தார்.

இதைப் பற்றி யாருக்காவது தெரிந்திருக்க வேண்டும். அவர்களிடம் இதைச் சொல்ல வேண்டும். கிழக்கு காற்று மற்றும் கால நிலையால் என்னவோ நடந்துகொண்டிருக்கிறது அவருக்கு ஒன்றும் புரியவில்லை.

வீட்டை நெருங்கியபோது மனைவி வெளியே வந்தாள். உணர்ச்சி கொந்தளிக்க அவரிடம், "நாட், ஒயர்லெஸ்ஸில் சொன்னார்கள், அதுவும் புதிய செய்தி. அவை இங்கே மட்டும் வரவில்லை. லண்டன் மற்றும் நாடு முழுக்க வந்திருக்கிறதாம். பறவைகளுக்கு என்னமோ ஆகிவிட்டிருக்க வேண்டும். நீங்கள் அதைக் கேட்க வேண்டுமே! அவர்கள் அச்செய்தியைத் திரும்பத் திரும்பச் சொல்கிறார்கள்."

அவர்கள் இருவரும் அறிவிப்பைக் கேட்க சமையல் அறைக்குச் சென்றார்கள்.

"உள் துறை அமைச்சகத்திலிருந்து ஒரு முக்கிய அறிவிப்பு. நேரம் காலை பதினோரு மணி. நாடு முழுவதும் பறவைகள், டவுன், கிராமம், நகரம் ஆகியவற்றை முற்றுகையிட்டிருப்பதாக செய்தி வந்துகொண்டிருக்கின்றன. அவை இடைஞ்சல் செய்வதோடு மட்டுமில்லாமல் சிலரைத் தாக்கியும் இருக்கின்றன.

பிரிட்டிஷ் நாட்டை நோக்கி வரும் ஆர்க்டிக் காற்றே, ஏராளமான பறவைகளை இங்கே கொண்டு வந்து விட்டிருக்க

வேண்டும். பசிகொண்ட இந்த ஜந்துக்கள் மனிதர்களை தாக்கக் கூடும். யாவரும் தங்கள் ஜன்னல்கள், கதவுகள் புகைப்போக்கிகள் ஆகியவற்றைக் கவனமுடன் பார்த்துக்கொண்டு தம் குழந்தைகளையும் முன்னெச்சரிக்கை நடவடிக்கையாகப் பாதுகாத்துக்கொள்ள வேண்டும்.

மேற்கொண்டு வரும் தகவல்கள் அவ்வப்போது உங்களுக்குத் தெரிவிக்கப்படும்."

இதைக் கேட்டு நாட் உணர்ச்சி வசப்பட்டுவிட்டார். வெற்றியாளன்போல் மனைவியைப் பார்த்துக்கொண்டே, "பார்த்தாயா, எங்கேயோ தவறு நேர்ந்திருக்கிறது என்று சொல்லிக்கொண்டே இருந்தேன். அதேபோல் கடற்கரையில் ஆயிரக்கணக்கான கடற் காகங்கள் எதற்கோ காத்திருக்கின்றன."

"அவை எதற்காகக் காத்திருக்கின்றன, நாட்?" அவள் கேட்டாள்.

அவர் அவளை வெறித்துப் பார்த்தார். பிறகு மெள்ள "எனக்கு தெரியாது" என்றார்.

அவர் மேஜைக்குச் சென்று இழுப்பறையைத் திறந்து சுத்தியல் மற்றும் இதரக் கருவிகளை எடுத்துக்கொண்டார்.

"என்ன செய்யப்போகிறாய் நாட்?"

"ஒயர்லெஸ்ஸில் சொன்னதுபோல் புகைபோக்கி மற்றும் ஜன்னல்களைச் சரிபார்க்கப் போகிறேன்."

"மூடியிருக்கும் ஜன்னல்களைக்கூட அவை உடைக்கும் என நினைக்கிறாயா? அதுவும் ரென், ராபின் பறவைகளால்கூட! அவற்றால் எப்படி முடியும்?

அவர் பதில் சொல்லவில்லை. ரென், ராபின் பறவைகளை அவர் நினைக்கவில்லை. அவர் யோசித்தது கடற் காகங்கள் பற்றி.

அவர் மாடிக்கு சென்று அன்று காலை முழுவதும் ஜன்னல்களையும் புகைபோக்கியையும் ஒழுங்குபடுத்தினார்.

"சாப்பாடு தயார்" மனைவி சமையல் அறையிலிருந்து கூவினாள்.

"இதோ வந்தேன்."

சாப்பிட்டு முடிந்ததும் அவருடைய மனைவி பாத்திரங்களை

கழுவினாள். நாட், ஒரு மணி செய்திக்காக ஒயர்லெஸ்ஸை நோண்டினார். ஒயர்லெஸ்ஸில் பழைய செய்தியே போட்டுக்கொண்டிருந்தார்கள். ஆனால், அதில் புதியதொரு விஷயமும் சொல்லப்பட்டது.

'எல்லா இடங்களிலும் பறவைக் கூட்டம் ஸ்திரமற்ற தன்மையை ஏற்படுத்திவிட்டன. லண்டனில் இன்று காலை பத்து மணி அளவில் பறவைக் கூட்டம் அடர்த்தியாக பெரிய கருமேகம் சூழ்ந்துகொண்டு இருந்ததைப்போல இருந்தது.

பறவைகள் மொட்டை மாடிகளிலும், ஜன்னல்களிலும் புகைபோக்கிகளிலும் அமர்ந்திருந்தன. அப்பறவைகளில் கரு நிறப் பறவை, செம்பறவை, சிட்டுக்குருவிகள் மற்றும் லண்டன் ஆற்றில் அடிக்கடி காணப்படும் கரு நிறத் தலையுள்ள கடற் காகங்களும் உள்ளடக்கம்.



இதுபோன்ற காட்சியை எப்போதும் காண முடியாததால் வாகனங்கள் அப்படியே நிற்கின்றன. வேலை நடக்கும் இடங்களிலும் அலுவலகங்களிலும் யாருமே வேலை செய்யவில்லை. தெருக்களிலும் நடைபாதைகளிலும் மக்கள் எல்லோரும் நின்றுகொண்டே இக்காட்சியை

பார்த்துக்கொண்டிருக்கின்றனர்.'

செய்தி அறிவிப்பவன் குரல் அமைதியுடன், சாந்தத்துடன் ஒலித்தது. அவன் இக்காட்சியை ஒரு நகைச்சுவையாக எடுத்துக்கொண்டிருக்கிறான் என நாட் அனுமானித்தார். இருளில் பறவைகளோடு மோதுவது என்பது எவ்வளவு பெரிய போராட்டம் என்று அறியாதவர்களாக இன்னும் இவனைப்போல நூறு பேர் இருப்பார்கள்.

நாட் ஒயர்லெஸ்ஸை அணைத்தார். எழுந்து சென்று சமையலறையின் ஜன்னல்களை சரி செய்ய ஆரம்பித்தார். அவர் மனைவி இதையெல்லாம் பார்த்துக்கொண்டிருக்க குழந்தை ஜானி நிற்க ஆரம்பித்தான்.

"அவர்கள் ராணுவத்தை அழைத்து இப்பறவைகளைச் சுட்டுத் தள்ள வேண்டும்" மனைவி கூறினாள்.

"முயன்று பார்க்கட்டும். ஆனால், அவர்கள் இதை எப்படிச் செய்வார்கள்" நாட் கேட்டார்.

"தெரியவில்லை. ஆனால், எதையாவது செய்ய வேண்டும்... அவர்கள் எதையாவது செய்ய வேண்டும்."

நாட் தனக்குள்ளேயே, 'அந்த 'அவர்கள்', இந்தச் சிக்கலைத் தீர்க்க எதையாவது யோசித்துக்கொண்டிருப்பார்கள். ஆனால், முந்நூறு மைல் தள்ளி உள்ள லண்டனிலும் மற்றும் பெரும் நகரங்களிலும் அவர்கள் என்னதான் செய்ய முயன்றாலும் அதற்குப் பலனிருக்காது' எனச் சொல்லிக்கொண்டார்.

"மளிகைப் பொருட்களின் இருப்பு எவ்வளவு உள்ளது?" நாட் கேட்டார்.

"நாளைக்குப் பொருட்கள் வாங்க வேண்டும். அதே சமயம் சமைக்காத பொருட்களை நான் வைக்க மாட்டேன் என்பது உங்களுக்கே தெரியும். இறைச்சி விற்பவனும் இன்னும் வரவில்லை. எனினும் நாளை கடைக்கு சென்று ஏதேனும் வாங்கி வருகிறேன்."

நாட் அவளை பயமுறுத்த விரும்பவில்லை. அவரே சமையலறை மாடத்துக்கு சென்று அவள் வைத்திருந்த மளிகை டின்களை சோதித்தார். இன்னும் இரண்டு மூன்று நாட்களுக்கு தேறும்.

அவர் சமையலறையின் ஜன்னல்களின் மேல் பலகைகளை வைத்து ஆணியை சுத்தியலால் அடித்தார். மெழுகுவர்த்திகளின் இருப்பும் குறைவாகவே உள்ளது. அதையும் நாளைக்கு வாங்க வேண்டும். இன்றிரவு சீக்கிரமாகத் தூங்க வேண்டும்.

அவர் எழுந்து பின் பக்கம் சென்று தோட்டத்தில் நின்ற படி கடலை உற்றுப் பார்த்தார்.

இன்று முழுக்க சூரியனைக் காணவில்லை. இப்போது மணி மூன்றுதான். இருந்தாலும் ஒருவித கருமை சூழ்ந்திருந்தது. உப்புத் தூளைப்போல வானம் நிறம் ஏதும் இன்றிக் காணப்பட்டது. அலைகள் பாறைகள் மேல் தாளமிட்டுக்கொண்டிருந்தது கேட்டது.

அவர் கடலை நோக்கிச் செல்லும் பாதையில் நடந்தார். பிறகு சட்டென நின்றார். கடல் அலைகள் முன்னேறிக்கொண்டிருந்தன. கடற் காகங்கள் மேலே எழுந்தன. லட்சக் கணக்கில் இருந்த அவை காற்றுக்கு எதிராக இறக்கைகளை விரித்துக்கொண்டிருந்தன.

கடற் காகங்கள்தான் வானத்தை இருளாக்கிவிட்டன. அவை அமைதியாக இருந்தன. மேலே எழுந்தும், சுற்றியும், கீழே இறங்கியும், காற்றுக்கு எதிராகவும் அலைந்துகொண்டிருந்தன. நாட் திரும்பி, வீட்டை நோக்கி ஓடினார்.

தன் மனைவியிடம், "ஜில்லை அழைத்து வரப்போகிறேன்" என்றார்.

"என்ன ஆனது? உங்கள் முகமும் வெளுத்துப்போய் இருக்கிறதே!"

"ஜானியை உள்ளேயே வைத்திரு. கதவை நன்றாகச் சாத்தித் தாழிடு. திரைச்சீலைகளை இழுத்துவிட்டு விளக்கை ஏற்று."

"மணி மூன்றுதானே ஆகிறது?"

"அதைப் பற்றிக் கவலைப்படாதே நான் சொன்னதைச் செய்."

அவர் கருவிகளிலிருந்து மண்வெட்டியை எடுத்துக்கொண்டார். பேருந்து நிறுத்தத்துக்குச் செல்லும் பாதையில் நடந்தார். அவ்வப்போது கழுத்தை திருப்பி பார்த்தபோது கடற் காகங்கள் பறப்பது தெரிந்தது. அவை இன்னும் உயரமாகவும் பரந்தும் வானம் எங்கும் ஆரவாரமின்றிப் பறந்தன.

உடனே நடையை துரிதப்படுத்தினார். பேருந்து வருவதற்கு மணி நான்கு ஆகும். எனினும் அவர் அவசரமாக நடந்தார். மலை உச்சியை வந்தடைந்தார். இன்னும் அரை மணி நேரம் இருக்கிறது. கீழைக் காற்று நிலங்களின் மேல் அறைந்தது. தூரத்தில் களிமண் காடுகள் வெண்மையாகவும் சுத்தமாகவும், கரு நிற வானின் பின்புலத்தில் தெரிந்தன.

அவற்றின் பின்னே கறுப்பாக ஏதோ ஒன்று எழுந்தது. முதலில் அவை கறுப்பாகவும், பின்பு அகல விரிந்தும் அதன்பின் ஆழ்ந்தும் காணப்பட்டது. இப்போது கறு நிற அழுக்கானது மேகமாக மாறியது. அந்த மேகம் பகுதிகளாகப் பிரிந்து சகல திசைகளிலும் பரவியது. ஆனால், அவை மேகங்கள் அல்ல, மாறாகப் பறவைகள்.

இருநூறு அல்லது முன்னூறு அடிகளுக்கு மேலே அவை வானம் எங்கும் வியாபிப்பதைப் பார்த்தார். அவை பறக்கிற வேகத்தைப் பார்த்து உள்ளூரில் இறங்கப்போகின்றன என்று உணர்ந்தார். அவற்றுக்கு இந்த தீபகற்ப மக்களோடு எந்த ஒட்டு உறவும் இல்லை. அவை ரூக், காகங்கள். ஜாக்டாஸ், மேக்பை ஜேஸ் பறவைகள். அவை சின்னஞ்சிறு பூச்சி புழுக்களை மட்டும் உண்ணும். ஆனால், இன்றைய பொழுதில் அவற்றின் நோக்கம் வேறு எதிலோ உள்ளது.

உடனே அவர் அருகிலிருந்த டெலிபோன் பூத்துக்குச் சென்று ரிசீவரை எடுத்தார். மறுமுனையில் இருப்பவர் தான் கூறும் செய்தியை உரிய இடத்தில் சேர்த்துவிடுவார்.

"நான் நெடுஞ்சாலையில் இருக்கும் பேருந்து நிறுத்தத்தின் அருகிலிருந்து பேசுகிறேன். எனக்கு ஒரு விஷயத்தைத் தெரிவிக்க வேண்டும். இங்கே பறவைகளின் எண்ணிக்கை அதிகரித்துக்கொண்டே போகிறது. தவிர கடற் காகங்கள் கடலின் மேல் அலைகின்றன."

"நல்லது" எதிர்முனையிலிருந்து ஒலித்த குரல் சுருக்கமாகவும் களைப்புற்றும் காணப்பட்டது.

"நான் சொன்னதை உரிய இடத்தில் சேர்ப்பித்துவிடுவீர்கள் அப்படித்தானே?"

"ஆம், ஆம்" பொறுமையின்மையோடு சொன்ன அந்தக் குரல் ரிசீவரை வைத்துவிட்டது.

“அவருக்குக் கவலையேதுமில்லை” நாட் சொல்லிக் கொண்டார்.

பேருந்து, மலைப் பாதையில் தள்ளாடிக்கொண்டே வந்தது. ஜில் இறங்கினாள்.

“அப்பா மண்வெட்டி எதற்கு?”

“வேலை ஒன்றை முடிப்பதற்காக எடுத்து வந்தேன், வா சீக்கிரமாக வீட்டுக்கு போகலாம். ஒரே குளிராக இருக்கிறது. அங்கேயும் இங்கேயும் ஆடக் கூடாது. ஒரே ஓட்டமாக ஓடி வீட்டை அடைய வேண்டும்.”

கடற் காகங்கள் அமைதியாக மேலே சுற்றிக்கொண்டு, நிலங்களை நோக்கி நகர ஆரம்பித்தன.

“ஐயோ, அப்பா, எவ்வளவு கடற் காகங்கள்.”

“ஆமாம், சீக்கிரம் நட.”

“அவை எங்கே போவதற்காகப் பறக்கின்றன?”

“வெப்பமாக இருக்கும் வேறு ஏதோ நாட்டுக்கு.”

அவர் அவள் கையைப் பிடித்தபடி வேக வேகமாக நடந்தார்.

“ஐயோ, வேகமாகப் போகாதீர்கள். என்னால் முடியாது.”

கடற் காகங்கள், ரூக் பறவைகளையும் காகங்களையும் பின்பற்ற ஆரம்பித்தன. அவை இன்னும் தலைக்கு மேலே சுற்றிக்கொண்டிருந்தன. அதே நேரம் உயரத்திலும் பறக்க வில்லை. அவை ஏதோ ஒரு சைகைக்காக, ஏதோ ஒரு முடிவுக்காகக் காத்திருக்கிறதைப்போல் தோன்றியது.

“இப்போதே கடற் காகங்கள் எல்லாம் போய்விட வேண்டும்” ஜில் அழத் தொடங்கினாள், “அவற்றை எனக்குப் பிடிக்கவில்லை. அவை நாமிருக்கும் பாதையருகே வருகின்றன.”

உடனே அவர் ஜில்லை முன்னே போகவிட்டு பின்னால் ஓடினார். பண்ணையை நோக்கிச் செல்லும்போது, அந்த விவசாயி காரினில் செல்வதைப் பார்த்தார். உடனே நாட் கூப்பிட்டார்.

“எங்களை வீட்டில் விட முடியுமா?”

திரு. டிரிக்கர் தலையைத் திருப்பி அவர்களைப் பார்த்தார். உடனே மலர்ந்திருந்த முகத்தில் சிரிப்புத் தோன்றியது. “ஏதோ

வினோதமாக நடந்துகொண்டிருக்கிறது. கடற் காகங்களைப் பார்த்தீர்களா? ஜிம்மும் நானும் சேர்ந்து அவற்றைச் சுட்டு வீழ்த்தப்போகிறோம். எல்லாப் பறவைகளுக்கும் பைத்தியம் பிடித்துவிட்டிருக்கிறது. நேற்றிரவு நீங்கள் ஏதோ தொல்லையில் மாட்டிக்கொண்டதாக கேள்விப்பட்டேன். துப்பாக்கி வேண்டுமா?"

வேண்டாம் என்பதுபோல் நாட் தலையாட்டினார்.

அந்த சின்னஞ்சிறு கார் முழுக்கப் பொருட்கள் நிரம்பி இருந்தன. ஆனால், பின் இருக்கையில் ஜில் உட்கார இடமிருந்தது.

"எனக்குத் துப்பாக்கியெல்லாம் வேண்டாம், ஆனால், ஜில்லை வீட்டில் விட்டுவிட வேண்டும். அவளுக்கு பறவைகள் என்றாலே அலர்ஜி."

"ஓ.கே. நான் அவளை வீட்டில் விட்டு விடுகிறேன். நாங்கள் நடத்தப்போகும் ஷூட்டிங் மேட்சில் நீங்களும் கலந்து கொள்ளலாமே, இறக்கைகளை எல்லாம் பறக்க விடுவோம்."

ஜில் உள்ளே ஏறிக்கொள்ள கார் பறந்தது. நாட் அவர்களைப் பின் தொடர்ந்தார். டிரிக்கருக்குப் புத்தி பேதலித்துப் போயிருக்க வேண்டும். வானம் முழுக்க நிறைந்திருக்கும் பறவைகளை ஒரே ஒரு துப்பாக்கி என்ன செய்துவிட முடியும்? அவை வானில் தாழ்வாக வட்டமிட்டபடி பண்ணையை நெருங்கிவர ஆரம்பித்தன. பண்ணையே அவற்றின் இலக்கு எனத் தெரிந்துபோனது. நாட் வீட்டை நோக்கி எட்டி நடை போட்டார். அவர் விவசாயியின் கார் பாதையில் நிற்பதைக் கண்டார்.

"குழந்தை வீட்டுக்குள் விரைந்து ஓடிவிட்டது." விவசாயி சொன்னார்.

"உங்கள் மனைவியும் கண்காணித்துக்கொண்டிருந்தார். விஷயம் தெரியுமா? ரஷ்யாவில் பறவைகளை விஷம் வைத்துக் கொன்றுவிட்டார்களாம்."

"எப்படிச் செய்தார்கள்?"

"என்னைக் கேட்காதீர்கள். எல்லாம் சொல்லக் கேள்வி. உங்கள் வீட்டு ஜன்னல்களை பலகையால் மூடி விட்டீர்களா?"

"இல்லை. அதைவிட எனக்கு முக்கியமான வேலைகள் உள்ளன?"

“நானாக இருந்தால் முதலில் அதைத்தான் செய்து இருப்பேன்.”

“நீங்கள் வித்தியாசமாக இருக்கிறீர்கள். இன்றிரவு எங்கள் வீட்டில் தூங்குகிறீர்களா?”

“இல்லை, எல்லா இடமும் ஒரே மாதிரிதான்.”

“நல்லது காலையில் பார்க்கலாம். கடற் காகங்கள் கதவைத் தட்டினால் உணவிடுங்கள்.”

விவசாயி இளித்துக்கொண்டே பண்ணைக்குச் செல்லும் வழியில் காரைத் திருப்பினார். உடனே நாட் விரைந்தார். அந்தச் சின்னஞ்சிறு காட்டைக் கடந்து வேலியை ஒட்டி இருந்த படிக்கட்டில் ஏறியபோது இறக்கைகள் அடிக்கும் ஓசை கேட்டது. கடற் காகம் வானிலிருந்து அவருக்காக இறங்கியது. அது அவரைத் தவறவிட்டபின் திரும்பவும் வானில் பாய்ந்தது. நொடியில் பல பறவைகள் அதனுடன் சேர்ந்துகொண்டன. ஒரு டஜன் பறவைகள்.

மண் வெட்டியால் பயனில்லை எனக் கண்ட நாட் அதைக் கீழே போட்டார். கைகளால் தன் தலையை மூடிக்கொண்டே வீட்டை நோக்கி ஓடினான்.

அவை காற்றைக் கிழித்துக்கொண்டே அவரை நோக்கி வந்தன. சப்தமின்றி அமைதியாக இறக்கைகள் கீழும் மேலும் ஆட கீழறிங்கின. இறக்கைகள் பயங்கரமாகவும் கொடூரமாகவும் இருந்தன. அவர் கைகளிலும், மணிக் கட்டுகளிலும், பின்னங் கழுத்திலும் ரத்தத்தை உணர்ந்தார். இப்போதைக்குக் கண்களை மட்டுமே பார்த்துக்கொள்ள வேண்டும். அதைத் தவிர்த்து வேறு எதைப் பற்றியும் கவலைகொள்ளக் கூடாது.

ஒவ்வொரு பாய்ச்சலிலும் ஒவ்வொரு தாக்குதலிலும் அவை இன்னும் தைரியம்கொண்டன. தவிர அவை நகங்களைப் பற்றிக் கவலைகொள்ளவில்லை. பாய்ச்சலைத் தவிர வேறு எதைப் பற்றியும் கவலைகொள்ளக் கூடாது.பாய்ச்சலைத் தவறவிட்ட போது தரையில் மோதி காயம் பட்டன. சில செத்துப்போயின.

அவற்றின் உடல்கள் காலில் தட்டுப்பட அவற்றை நாட் எட்டி உதைத்தார்.

இறுதியாக வீட்டை அடைந்ததும் ரத்தம் வழியும் கைகளால்

கதவை அறைந்தார். "நான்தான் நாட், கதவைத் திற."

அப்போது வானில் ஒரு வல்லூறைப் பார்த்தார். அது பாய்வதற்குத் தயாராக இருந்தது. கடற் காகங்கள் சுற்றி வந்து காற்றுக்கு எதிராகப் பின் வாங்கின.

அந்த ஒற்றை வல்லூறு மட்டுமே தலைக்கு மேல் வானத்தில் பறந்தது. அது சடாரென்று இறக்கைகளை மடித்துக்கொண்டு ஜிவ்வென விழ ஆரம்பித்தது.

நாட் அலற உடனே கதவு திறந்தது. அவர் வீட்டினுள் தடுமாற, மனைவி கதவைச் சாத்திவிட்டாள். அவர்கள் வல்லூறு தட்டென்று தரையில் மோதிய சப்தத்தை கேட்டனர்.

அவர் மனைவி காயங்களுக்கு கட்டுப் போட்டாள். காயங்கள் ஒன்றும் பெரிதாக இல்லை. கைகளின் பின்புறமும் மணிக்கட்டுகளிலும்தான் கொஞ்சம் அதிகமாக இருந்தது. அவர் தொப்பி மட்டும் போடாமலிருந்தால் பறவைகள் தலையைப் பதம் பார்த்துவிட்டிருக்கும். அந்த வல்லூறு தலையைக் கிழித்துவிட்டிருக்கும்.

தம் தந்தையின் கைகளில் ரத்தத்தைப் பார்த்த குழந்தைகள் அழுதன.

"காயம் ஏதுமில்லை. அழுவதை நிறுத்துங்கள்" என்று நாட் அவர்களை சமாதானப்படுத்தினார்.

அவர் மனைவி முகம் வெளுத்திருந்தாள். "அவை தலைக்கு மேலே வருவதைப் பார்த்தேன். திரு. டிரிக்கருடன் ஜில் ஓடிவரும்போதே அவை ஒன்று சேர்ந்தன. வேறுவழியின்றி கதவை வேகமாகச் சாத்தத் தாழ்பாள் சிக்கிக்கொண்டது. அதனால்தான் நீங்கள் தட்டும்போது அதைச் சட்டெனத் திறக்க முடியவில்லை."

"பறவைகள் சற்றுத் தாமதித்துவிட்டன. நன்றி. ஜில் மட்டும் அவற்றிடம் மாட்டிக்கொண்டிருந்தால் அவ்வளவுதான்! ரூக், கடற் காகங்கள் முதலான பெரிய பறவைகள் ஆயிரக்கணக்கில் நம்மிடத்துக்கு பறந்து வருகின்றன. பேருந்து நிறுத்தத்திலேயே அவற்றை பார்த்தேனே."

"ஆனால், அவற்றால் என்ன செய்ய முடியும் நாட்?"

"தெருவில் செல்லும் மனிதர்களின் மேல் பாயும், கொத்திக்

கிழிக்கும். தவிர ஜன்னல், புகைபோக்கிகளின் வழியாக வீட்டினுள் நுழைய முயற்சி செய்யும்."

"ஆட்சியாளர்கள் ஏதேனும் செய்யக் கூடாதா? ராணுவம் மெஷின் கன்கள் முதலானவை உள்ளனவே."

"அவர்கள் இதை எதிர்பார்க்கவில்லை. அதனால்தான் தயாராக இல்லை, ஆறு மணி செய்தியில் அவர்கள் என்ன செய்யப்போகிறார்கள் என்பதைக் கேட்கலாம்."

"பறவைகள் வரும் சப்தம் கேட்கிறது" ஜில் கூறினாள்.

நாட் ஊன்றிக் கவனித்தார். கதவு அருகேயும் ஜன்னல்களிலும் அமுங்கிய சப்தம் கேட்டது. உள்ளே வர முயற்சிக்கும் இறக்கைகளின் ஒலி கேட்டது. அப்பறவைகளின் உடல்கள் நெருக்கமாக அழுத்தும் சப்தம் கேட்டது. அவ்வப்போது பொத்தென்று பறவைகள் விழுவதும் ஒலித்தது.

அவை தற்கொலை செய்துகொள்கின்றன, ஆனால், இது போதாது.

"சரி சரி, ஜன்னல்களின் மேல் இன்னும் கொஞ்சம் பலகைகளை அடிக்கப்போகிறேன். எனவே அவற்றால் உள்ளே வர முடியாது" நாட் சொன்னார்.

அவர் ஜன்னல்களைப் பரிசோதித்தார். பின்னர் பழைய தகரங்களை ஜன்னல்களின் எல்லா பக்கங்களிலும் வைத்து ஆணி அடித்தார். இதனால் ஜன்னல்களின் மேல் இறுக்கப் பட்ட தகரத்தின் உதவியால் பறவைகளின் ஒலி குறைந்தது.

பிறகு அவர் மாடிக்குச் சென்று படுக்கையறை ஜன்னல்களை சோதித்தார். அச்சமயம் மொட்டை மாடியில் பறவைகள் கால்களால் நடக்கும் சப்தம் கேட்டது.

அவர் வேறுவழியின்றித் தன் மொத்தக் குடும்பமே சமையலறையில் கணப்பு அடுப்பு, வெளிச்சத்தில் தூங்க வேண்டுமெனத் தீர்மானித்துக்கொண்டார். படுக்கையறை மேல் திறப்பை நினைத்தால் அவருக்கு பயமாகத்தான் இருக்கிறது. அங்கே அவர் வைத்த பலகைகள் திறந்து கொள்ளலாம். சமையலறை என்றால் அங்கே நெருப்பின் பாதுகாப்பு வசதி உள்ளது.

அவர் விளையாட்டுத்தனமாக குழந்தைகளிடம் பேசினார்.

அதாவது நாம் எல்லோரும் கூடாரம் அடித்துத் தங்கப் போகிறோம் என்றார். படுக்கையறை மேல் திறப்பு வழியாகப் பறவைகள் உள்ளே நுழைந்தாலும், கதவை உடைக்க நாட் கணக்கில் ஆகலாம். இவ்வாறு அதனுள்ளே அவை சிறைப்பட்டு போகும். அவை ஒன்றும் செய்ய முடியாமல் நெரிசலால் இறந்துபோகும். அவர் மாடியிலிருந்து படுக்கைகளைக் கீழே எடுத்து வந்தார். இதைக் கண்ட அவர் மனைவியின் விழிகள் விரிந்தன.

அதைக் கண்டு அவர் உற்சாகமாக, "இன்றிரவு நாம் சமையலறையில் உறங்கலாம். குளிருக்கு இதமாக வெப்பம் உள்ளது. தவிர ஜன்னலைத் தட்டிக்கொண்டிருக்கும் சிறிய பறவைகளின் தொந்தரவு இல்லாமல் நிம்மதியாகத் தூங்கலாம்" என்றார்.

பின் மரச் சாமான்களை நகர்த்தும்படி குழந்தைகளிடம் சொல்லிவிட்டு, ஜன்னலுக்கு எதிராக டிரஸ்சிங் டேபிளை நகர்த்தி முட்டுக் கொடுத்தார்.

இந்த அறை இப்போது பாதுகாப்பாக உள்ளது என்று அவர் நினைத்துக்கொண்டார். உணவுப் பற்றாக்குறைதான் இப்போது இருக்கும் ஒரே ஒரு கவலை. உணவு மற்றும் கணப்புக்கு கரி இரண்டும் மூன்று நாட்களுக்கு தேறும். பிறகு? அதைப் பற்றிக் கவலைகொள்வதில் எவ்வித பயனுமில்லை. ஒருவேளை ஒயர்லெஸ்ஸில் சொல்லக்கூடும்!

பல சிக்கல்களுக்கு நடுவே, நடன இசை மட்டுமே ஒலிப்பதை அவர் உணர்ந்துகொண்டார். வழக்கமாகப் போடப்படும் நிகழ்ச்சிகள் போடப்படவில்லை. இவை எல்லாம் அசாதாரண வேளைகளில் மட்டுமே நிகழும்.

சரியாக ஆறு மணிக்கு நடன இசை நிறுத்தப்பட்டு, செய்தியாளன் செய்திகளை வாசிக்க ஆரம்பித்தான். அவனுடைய குரல் மயானத்தில், ஆழ் கிணற்றில் ஒலிப்பதுபோல் அமுங்கலாகச் சோகமாகக் கேட்டது.

'லண்டன் செய்திகள். இன்று மாலை நான்கு மணியளவில் தேசிய நெருக்கடி அறிவிக்கப்பட்டது. ஒவ்வொரு குடி மகனையும் பாதுகாக்கும் ஏற்பாடுகள் செய்யப்பட்டு இருக்கின்றன, எனினும் இந்த ஏற்பாடுகளை உடனடியாக அமல்படுத்தும் நிலையில்

இல்லை. காரணம் இயற்கையின் உபாதையே. எனவே ஒவ்வொரு குடிமகனும் தன்னுடைய கட்டடத்தை பாதுகாத்துக்கொள்ள வேண்டும். ஹோட்டல்களிலும் மற்றும் ஃபிளாட்டுகளிலும் தங்கியிருக்கும் மக்கள் ஒன்று சேர்ந்து பறவைகள் உள்ளே நுழைவதைத் தடுக்க வேண்டும்.

இன்றிரவு எல்லோரும் அவரவர் இடத்திலேயே தங்கும்படி அறிவுறுத்தப்படுகிறார்கள். பறவைகள் மனிதர்களையும் வீடுகளையும் தாக்கத் தொடங்கி இருக்கின்றன. மக்கள் யாவரும் அமைதியுடன் இருக்கும்படி கேட்டுக் கொள்ளப் படுகிறார்கள். இயற்கையின் இந்த பெரும் உபாதை காரணமாக நாளை காலை ஏழு மணிவரை எவ்வித செய்தியோ நிகழ்ச்சியோ இருக்காது.'

பிறகு 'அரசியைக் கடவுள் காக்கட்டும்' என்ற பாடலோடு நிகழ்ச்சி முற்றுப்பெற்றது.

ஒயர்லெஸ்ஸை அணைத்த நாட் அவர் மனைவியை வெறித்துப் பார்த்துக் கண் சிமிட்டினார். எப்படியாவது அவளை தேற்ற வேண்டும்.

"நாம் இரவு உணவை இப்போதே முடித்துவிடலாம்" என்ற நாட், அவ்வுணவைத் தயாரிப்பதற்கு அவளுக்கு உதவி செய்தார். அப்போது அவர் விசில் அடிப்பதும் பாட்டுப் பாடுவதுமாக இருந்தார். அதே சமயம் பறவைகளின் ஒலியும் நின்றுபோனது. மாடிக்கு விரைந்தார். மொட்டை மாடியிலும் சப்தம் எதும் இல்லை.

இந்த இடத்தை உடைக்க முடியாது என அவற்றுக்குத் தெரிந்து போயிருக்கும். ஒருவேளை வேறு எங்கேயாவது முயற்சி செய்யும்.

எவ்வித வார்த்தையும் இன்றி அவர்கள் உணவை அருந்தி முடித்தார்கள். அப்போது வெளியில் பழக்கப்பட்ட இரைச்சல் கேட்டது. அவளுடைய முகத்தில் புதியதொரு பிரகாசம் தோன்ற அவரைப் பார்த்தாள்.

"விமானங்கள்! பறவைகளுக்கு எதிராக அவர்கள் விமானங்களை ஏவிவிட்டிருக்கிறார்கள். அவை நிச்சயமாகப் பறவைகளை அழித்துவிடும். அதோ கேளுங்கள் துப்பாக்கிகள் சுடும் சப்தத்தை" மனைவி சந்தோஷமாகக் கூவினாள்.

“கடலுக்கு மேலே துப்பாக்கிகள் சுடும் ஓசையாக இருக்கலாம்.” நாட்டால் உறுதியாக சொல்ல முடியவில்லை. கடற் படையால் கடற் காகங்களை அழிக்க முடியும். ஆனால், பறவைகள் அங்கில்லையே, இங்கே கரையில்தானே உள்ளன. அவர்கள் கரையை நோக்கிச் சுட முடியாது. காரணம் வசிப்பிடம் இங்கேதான் உள்ளது.”

“அப்பாடா! துப்பாக்கிகள் சுடும் ஓசையை கேட்பதற்கு ஆனந்தமாக உள்ளது.” மனைவி சிரித்தாள்.

அவளுடைய உற்சாகத்தைக் கண்டு ஜில்லும் ஜானியும் எம்பி எம்பிக் குதித்தனர். “ஆமாம், விமானங்கள் பறவைகளைக் கொன்று விடும்”

அச்சமயம் இரண்டு மைல் தூரத்தில் ஏதோ நொறுங்கும் ஓசை கேட்டது. அதைத் தொடர்ந்து மற்றொரு முறை நொறுங்கும் சப்தமும், பிறகு மற்றொன்று எனத் தொடர்ந்து கேட்டது. கடலின் சப்தத்தால் நொறுங்கும் சப்தம் ஈன சுவரத்தில் கேட்டது.

“என்ன அது?” என்று மனைவி வினவினாள்.

“தெரியாது.”

நொறுங்கிய சப்தம் விமானங்களுடையது என்று சொல்ல நாட்டுக்கு விருப்பமில்லை.

பறவைகளுக்கு எதிராக விமானங்களை அனுப்புவது தற்கொலைக்கு நிகராகும் என ஆட்சியாளர்களுக்குத் தெரியாதா என்ன? தரையில் அதுவாகவே மோதி சாகும் பறவைகள், விமானங்களின் மீது மோதாமல் சும்மா இருக்குமா?

“அப்பா, விமானங்கள் எங்கே போய்விட்டன?” ஜில் கேட்டாள்.

“விமான தளத்துக்கு. சரி சரி நேரமாகிவிட்டது. படுக்கைக்கு போகலாம், வா”

விமான ஓசை கேட்கவில்லை. கடற் படையின் துப்பாக்கி சுடும் ஓசையும் அடங்கிவிட்டது. எல்லாம் வீண் முயற்சி என்று நாட் தனக்குதானே சொல்லிக்கொண்டார். அவற்றை இந்த வழியில் அழிக்க முடியாது. செலவுதான் அதிகமாகும். அதைவிட வாயுவை உபயோகப்படுத்தலாம். ஒருவேளை அவர்கள் கடுகு வாயுவை பயன்படுத்தலாம். பயன்படுத்தும் முன் நமக்கு

எச்சரிக்கை தருவார்கள். அநேகமாக இன்றிரவு நாட்டின் தலைசிறந்த அறிவாளிகள் எல்லோரும் ஒன்றுகூடி இதை விவாதிப்பார்கள்.

மேலே உள்ள படுக்கையறைகள் நிசப்தமாக இருந்தன. ஜன்னல்களில் உரசும் சப்தமும் இல்லை. போர்க்களத்தில் சற்றே அமைதி. அதேசமயம் காற்று மட்டும் அடங்கவே இல்லை. புகைபோக்கியில் அது மோதும் சப்தம் கேட்டது. தவிர கடல் அலைகளின் ஒலியும் கேட்டது.

அப்போது அவர் கடலின் ஏற்ற இறக்கத்தை பற்றி ஞாபகப்படுத்திக்கொண்டார். அலைகள் இன்னும் மேலே ஏறும். அமைதி நிலவும் இச்சூழ்நிலை அலையின் இறக்கத்தால் இருக்கலாம். இயற்கையின் ஏதோ விதிக்கு அவை கட்டுப்பட்டிருக்கலாம். கிழக்குப்புறக் காற்றும், ஏற்ற இறக்கமுமாகக்கூட அவை இருக்கலாம்.

கைக் கடிகாரத்தை பார்த்தபோது இரவு மணி எட்டைக் காட்டியது. இன்னும் ஒரு மணி நேரத்தில் கடல் நீர் ஏறும்! ஆக கடலின் இறக்கம்தான் பறவைகள் அமைதியாக இருப்பதற்குக் காரணம். அது ஏறும்போது பறவைகள் தாக்கும்.

மனதுக்குள்ளாகவே நேரத்தைக் கணக்கிட்டுப் பார்த்தார். மொத்தம் ஆறு மணி நேரமாகத் தாக்குதல் இல்லை. இன்று காலை ஒன்று இருபதுக்கு அலை ஏறும்போது பறவைகள் திரும்ப வரும்.

அவர் தன் மனைவியின் காதில், "நான் சென்று பண்ணையைப் பார்த்துவிட்டு, அப்படியே தொலைபேசி வேலை செய்கிறதா என்று பார்த்துவிட்டு வருகிறேன்" எனக் கிசுகிசுத்தார்.

"இல்லை, என்னையும் குழந்தைகளையும் தனியாக விட்டுவிட்டு நீங்கள் போகக் கூடாது. என்னால் முடியாது." அவள் மறுத்துப் பேசினாள்.

"சரி, சரி. காலையில் எழுந்து பார்த்துக்கொள்கிறேன். அப்போது ஏழு மணி செய்தியை ஒயர்லெஸ்ஸில் கேட்கலாம். அலை இறக்கத்தின்போது நான் பண்ணைக்குச் சென்று வருகிறேன். ஒருவேளை அங்கே ரொட்டியும் உருளைக்கிழங்கும் கிடைக்கலாம்."

அவருடைய மனம் நெருக்கடி நிலைக்கு எதிராகப் பல திட்டங்களைப் போட்டது. இன்று மாலையில் பசுக்களிடமிருந்து பால் கறந்திருக்க மாட்டார்கள். பசுக்கள் யாவும் வாயிலில் நின்றபடி காத்துக்கொண்டிருக்கும். வீட்டுக்குத் தேவையான சாமான்கள் யாவும் அலமாரியில் வைக்கப்பட்டிருக்கும்.

இவை எல்லாமே அவர்கள் முன்னெச்சரிக்கை நடவடிக்கை எடுத்திருந்தால் மட்டுமே சாத்தியம்.

மெதுவாக அவர் பின் கதவைத் திறந்து வெளியே நோக்கினார். மை இருட்டு. காற்று முன்பு வீசியதைவிடப் படுவேகமாகக் கடற்புறத்திலிருந்து ஜில்லென்று வீசியது.

அவர் படிகளில் உதைத்தார். அங்கெல்லாம் பறவைகளாகத் தென்பட்டது. அவை தற்கொலை செய்துகொள்ளும் எண்ணத்துடன் கழுத்து உடைபட்டு இங்கே வீழ்ந்திருக்கும். அவர் சுற்றிப் பார்த்த இடங்களிலெல்லாம் பறவைகளின் உடல்கள் இருந்தன. உயிர் தப்பிய பறவைகள் கடலின் இறக்கத்துடன் சென்றுவிட்டிருக்கும். கடற் காகங்கள் மட்டும், இன்று காலையில் பார்த்தேனே அதுபோல், கடலின் மேலே பறந்துகொண்டிருக்கும்.



தொலைவில் தெரிந்த மலையில் ஏதோ ஒன்று எரிந்துகொண்டிருந்தது. விமானம் ஒன்று அவ்விடத்தில் நொறுங்கி விட்டிருக்கிறது. அது காற்று விசிறிவிட படுவேகமாக எரிந்தது.

அவர் பறவைகளின் செத்த உடல்களைப் பார்த்தார். ஜன்னலுக்கு எதிராக அவ்வுடல்களை ஒன்றன் மேல் ஒன்றாக அடுக்கி வைத்தார். அடுத்த தாக்குதலைச் சற்று நேரம் தள்ளி வைக்க முடியும். சற்றுநேரம் வரைதான். ஜன்னல்களை அவை தாக்கும் முன்னர் செத்த உடல்களை முதலில் அகற்ற வேண்டும்.

இருளில் அவர் வேலை செய்ய ஆரம்பித்தார். செத்த உடல்களைத் தொடுவதில் வெறுப்புதான் எனினும் மும்முரமாக வேலை செய்தார். ஒவ்வொரு ஜன்னல் கண்ணாடிகளும் உடைக்கப்பட்டிருந்ததை சோகத்துடன் கவனித்தார். அடித்திருந்த பலகைகள் மட்டுமே பறவைகள் உள் நுழைவதைத் தடுத்துவிட்டிருக்கின்றன.

அவர் ஒவ்வொரு ஜன்னல் கண்ணாடி ஓட்டைக்குள்ளும் செத்த

பறவைகளின் உடல்களைத் திணித்தார். வயிறு புரண்டு குமட்டிக்கொண்டு வந்தது. அந்த வேலை முடிந்ததும், நேராகச் சமையலறைக் கதவருகே சென்று அதை இன்னும் பலப்படுத்தினார்.

அவர் மனைவி கோக்கோகோலாவை அளிக்க, தாகத்துடன் இருந்த நாட் சட்டென்று அதைக் குடித்தார். அவர் மிகுந்த களைப்பில் ஆழ்ந்துபோயிருந்தார். "கவலைப்படாதே எல்லாம் சரியாகிவிட்டது" என்று சிரித்தார்.

அவர் படுக்கையில் வீழ்ந்து கண்களை மூடிக்கொண்டார்.

அரைகுறை தூக்கத்தில் அவருக்குக் கனவு ஒன்று வந்தது. ஏதோ ஒன்றை மறந்தது போலவும், ஏதோ வேலையை முடிக்காதது போலவும், அது எரிந்துகொண்டிருந்த விமானத்தோடு தொடர்புடையதாகவும் அந்தக் கனவு இருந்தது. அவர் மனைவி தோள்களைக் குலுக்கி உறக்கத்தைக் கலைத்தாள்.

"அவை திரும்பவும் தாக்குதலை ஆரம்பித்துவிட்டன" அவள் தேம்பினாள். "சென்ற ஒரு மணி நேரத்தில் அவை தொடங்கிவிட்டன. அவற்றை என்னால் தாங்க முடியவில்லை. அங்கே பாருங்கள் கெட்ட வாடை அடிக்கிறது, ஏதோ எரிகிறது."

அப்போதுதான் அவருக்கு ஞாபகம் வந்தது. கணப்பு அடுப்பில் நெருப்பை எரியவிட மறந்துவிட்டிருக்கிறார். ஏறத்தாழ அணையும் நிலைக்கு நெருப்பு வந்துவிட்டிருந்தது. அவர் சட்டென்று எழுந்து விளக்கை ஏற்றினார்.

ஜன்னல்களிலும் கதவிலும் பறவைகள் கொத்தும் ஓசை கேட்டது. ஆனால், அதைப்பற்றிக் கவலைபடவில்லை. மாறாக எரிந்துபோன, எரிகிற இறகுகளின் மோசமான வாசம்தான்.

சமையலறை முழுவதும் அந்த வாசம் அடித்தது. அவருக்கு விஷயம் விளங்கிவிட்டது. புகைபோக்கியின் வழியாகப் பறவைகள் சமையலறையில் நுழைய முயற்சி செய்திருக்கின்றன.

அவர் சின்னஞ்சிறு சுள்ளிகளையும் பேப்பர்களையும் கணப்பில் விட்டெறிந்து மண்ணெண்ணெய்க்காக கையை நீட்டினார்.

"கொஞ்சம் தள்ளிப் போ" என்று மனைவியைப் பார்த்துக்

கூறிவிட்டு மண்ணெண்ணெயை அடுப்பில் ஊற்றினார்.

உடனே தீ, கொழுந்து விட்டெறிந்து புகை போக்கிக்குள் இருந்த பறவைகளின் உடல்களை கரியாக்கி தரையில் விட்டெறிந்தது.

குழந்தைகள் விழித்துக்கொண்டு அழ ஆரம்பித்தன. "என்ன? என்ன ஆயிற்று?" ஜில் கேட்டாள்.

நாட்டுக்கு பதில் சொல்ல நேரமில்லை. அவர் புகை போக்கியில் இருந்த உடல்களை நீண்ட கழிகொண்டு தரையில் விழ வைத்தார். புகைபோக்கியின் உச்சியிலுள்ள பறவைகளைத் தீ விரட்டிவிடும். நடுவில் மாட்டிக்கொண்ட பறவைகள் பற்றி எரிய ஆரம்பித்தன.

ஜன்னல்களிலும் கதவிலும் தொடர்ந்த தாக்குதல்களை அவர் கண்டுகொள்ளவில்லை. அவை சிறகுகளை அடித்துக் கொள்ளட்டும், அலகுகளால் கொத்தட்டும், பிறகு முதுகு முறிந்து சாகட்டும். ஆனால், அவற்றால் வீட்டுக்குள் நுழைய முடியாது.

"அழக் கூடாது. பயப்படுவதற்கு ஒன்றுமில்லை. அழுகையை நிறுத்துங்கள்" என்று குழந்தைகளிடம் சொன்னார்.

அவர் கணப்பு அடுப்பைக் கிளறி, நெருப்பில் விழுந்த உடல்களை நன்றாக எரியச் செய்தார்.

'புகைபோக்கி எரியாததால்தானே அவை உள்ளே நுழைந்தன, இப்போது பார்க்கலாம். கணப்பில் நெருப்பு உள்ளவரை கவலையில்லை' என்று தனக்குத்தானே சொல்லிக்கொண்டார்.

ஜன்னல் பலகைகள் குதறி எடுக்கப்படும் ஓசைக்கு நடுவே சமையலறை கடிகாரம் சப்தமிட்டது. மணி மூன்று. இன்னும் நான்கு மணி நேரம் கழிய வேண்டும். கடலின் ஏறு முக நீரின் சமயத்தைப் பற்றி அவருக்கு சரியாக தெரிந்திருக்கவில்லை. அநேகமாக ஏழரை மணிக்கு முன்பாக அது நிகழாது.

அவர் பொறுமையுடன் காத்திருக்க நெருப்பு அணைந்து கொண்டே வந்தது. ஆனால், மேலேயிருந்து பறவை உடல் எதுவும் விழவில்லை அவர் கொம்பைக்கொண்டு குத்திப் பார்த்தார். ஆனால், பறவை இல்லை.

புகைபோக்கியில் எழுந்த அபாயம் உடனடியாகத் தீர்ந்து விட்டது. பகலிலும் இரவிலும் தொடர்ந்து நெருப்பை

எரியவிட்டால் நிர்பயமாக இருக்கலாம்.

'பண்ணையிலிருந்து அதிக அளவு எரிபொருள் கொண்டுவர வேண்டும். கடல் இறக்கத்தின்போது அது நடக்கும். அப்போது நமக்குத் தேவையானதை எடுத்துக்கொண்டு வந்துவிடலாம்' என நாட் நினைத்தார்.

காலை ஏழு மணி வரை இப்படியே இருந்துவிட்டு, ஒயர்லெஸ்ஸில் செய்தியைக் கேட்கலாம் அவர்கள் ஏதேனும் சொல்வார்கள்.

"புகை பிடித்தால் நன்றாக இருக்கும். அது இறந்த பறவைகளின் நாற்றத்தைப் போக்கிவிடும்"

"மொத்தம் இரண்டு சிகரெட்டுகள் தான் உள்ளன. நாளை காலையில் தான் வாங்க வேண்டும்" மனைவி பதில் அளித்தாள்.

"ஒன்றே ஒன்று போதும்."

அவர் ஒரு கையால் மனைவியையும் மற்றொரு கையால் ஜில்லையும் அணைத்தபடி இருக்க, ஜானி மடியில் படுத்திருந்தான்.

கதவில், ஜன்னல்களில் தட்டும் ஓசை தொடர்ந்து கேட்டது. இப்போது அலகால் கொத்தும் ஓசை புதிதாகக் கேட்டது.

அவர் பறவைகளின் பெயர்களை ஞாபகப்படுத்திக்கொள்ள முயன்றார். எந்த வகைப் பறவை இதுபோல் முயற்சி செய்யும்?

மரங்கொத்தியின் கொத்தும் ஓசை அல்ல. அது என்றால் மென்மையாகவும் தொடர்ந்தும் கொத்தும். ஆனால், இது தீவிரமாக இருக்கிறது. இது தொடர்ந்தால் ஜன்னல் கண்ணாடிகள் உடைந்ததுபோல கதவும் பிளந்து கொள்ளும்.

அப்போது பருந்துகள் நினைவில் ஆடியது. ஒருவேளை கடற் காகங்களுக்குப் பதிலாகப் பருந்துகள் வந்துவிட்டனவோ? ஜன்னல் விளிம்புகளின் மேல் அமர்ந்து அலகுகளால் கொத்தும் சப்தம் தொடர்ந்தன. பருந்து, பஸ்ஸாரிட் பறவைகள் மற்றும் வல்லூறுகள். அந்தப் பறவைகளின் கால் நகங்கள் எந்த அளவுக்கு அழுத்தமாக இருக்கும். மூன்று மணி நேரம் செல்ல வேண்டியிருந்தன. அவர்கள் களைத்திருந்த வேளையில் பருந்துகள் பலகைகளைப் பிளக்கும் சப்தம் கேட்டது.

கதவை முட்டுக்கொடுக்க மரச் சாமான் ஏதேனும் இருக்கிறதா

என நாட் பார்த்தார். டிரஸ்சிங் டேபிளால் ஜன்னல் பாதுகாப்பாக இருந்தது. ஆனால், கதவைப் பற்றி நிச்சயமாகச் சொல்ல முடியாது. அவர் மாடிக்கு விரைந்து அதை அடைந்ததும், சற்று நிதானித்தார்.

குழந்தைகளின் படுக்கை அறையில் பறவைகள் இருப்பது தெரிய வந்தது. கண்ணாடிகள் உடைந்துவிட்டிருக்கும். மற்றொரு படுக்கையறை நிசப்தமாக இருந்தது.

அவர் மற்றொரு மரச் சாமானை எடுத்து வந்து குழந்தைகள் நுழையாமலிருக்க முட்டுக் கொடுத்தார்.

"அங்கே என்ன செய்துகொண்டிருக்கிறீர்கள்? கீழே வாருங்கள்" என மனைவி அழைத்தாள்.

"நான் இங்கே எல்லாவற்றையும் சரி செய்துகொண்டு இருக்கிறேன். நேரமாகாது."

அவள் மாடிக்கு வருவதை அவர் விரும்பவில்லை. அதுவும் குழந்தைகளின் அறையில் பறவைகள் புகுந்ததை அவள் அறியக்கூடாது.

காலை உணவைத் தயார் செய்யச் சொல்லிவிட்டு, மெதுவாக போய்க்கொண்டிருந்த கடிகாரத்தைப் பார்த்தார். அவர் எண்ணியது தவறாகப் போனால், அலை இறக்கத்தின் போது பறவைத் தாக்குதல் நிற்காமல்போனால் அவர்கள் கதி அவ்வளவுதான். காற்றின்றி, நெருப்பின்றி, ஓய்வின்றி அவர்களால் இனிமேலும் இங்கிருக்க முடியாது,

உறங்க வேண்டும் என்ற எண்ணம் திடீரென்று எழுந்த சப்தத்தால் கலைந்துபோனது. என்ன அது? ஒயர்லெஸ்!

இப்போது மணி ஏழாகப் போகிறதே. ஒயர்லெஸ்ஸின் சப்தம் அவர்களுக்குப் புத்துணர்ச்சியை ஊட்டியது. அவர்கள் காத்திருந்த வேளையில் சமையலறை கடிகாரம் ஏழு மணியை காட்டியது.

கொர் கொர்ரென்ற ஓசைதான் கேட்டது. செய்தியோ இசையோ கேட்கவில்லை.

ஏழே கால் வரை பொறுத்துப் பார்த்தார்கள். அப்போதும் செய்தி வாசிக்கப்படவில்லை.

"அநேகமாக எட்டு மணிக்கே செய்திகள் சொல்லப்படும் என்று நினைக்கிறேன்" என நாட் சொன்னார்.

அவர்கள் ஒயர்லெஸ்ஸை இயக்கத்தில் இருக்கும்படி விட்டுவிட்டார்கள். பேட்டரியின் சக்திவேறு குறைந்து கொண்டே வருகிறது. அதுவும் போய்விட்டால் செய்திகளை கேட்க முடியாது. நாட்டின் உதடுகளில் சோகம் படர்ந்தது.

"பகல் வெளிச்சம் வந்துவிட்டது, என்னால் பார்க்க முடியாவிட்டாலும், உணர முடிகிறது. நீங்களும் கேளுங்கள், பறவைகள் கதவைக் கொத்தும் ஒலி குறைந்துவிட்டது" மனைவி கிசுகிசுத்தாள்.

ஆம்! அவள் சொன்னது சரிதான். காலால் பிராண்டும், அலகுகளால் கொத்தும், இறக்கைகளை அடிக்கும் ஓசை குறைந்துதான் போயிருக்கிறது. அவர் போட்ட கணக்கு சரி. அலைகள் பின்வாங்கத் தொடங்கிவிட்டிருந்தன.

எட்டு மணிக்கு சப்தம் நின்றுபோய்விட்டது. காற்று மட்டுமே அடித்துக்கொண்டிருந்தது. குழந்தைகள் தூங்கிக்கொண்டிருந்தனர்.

எட்டரை மணிக்கு நாட் ஒயர்லெஸ்ஸை அணைத்தார்.

"செய்தியை தவறவிடப் போகிறோம்" மனைவி கூறினாள்.

"செய்திகள் இனிமேல் கிடையாது. நாம் நம்மை சார்ந்தே இருக்க வேண்டும்."

அவர் கதவைத் திறந்து வெளியிலிருந்த தடுப்பை எடுத்தார். பிறகு வெளியே குவிந்திருந்த பறவை உடல்களைக் காலால் உதைத்து அப்புறப்படுத்திவிட்டு, குளிர்ந்த காற்றை சுவாசித்தார்.

ஒட்டுமொத்தமாக ஆறு மணி நேரம் உள்ளது. அதில் ஒரு நொடிகூட வீணடிக்கக் கூடாது. உணவு, வெளிச்சம் மற்றும் எரிபொருள் - இவைதான் மிக அவசியமான பொருட்கள். இவற்றைப் பெற்றுவிட்டால் மற்றோர் இரவை நிம்மதியாகக் கழிக்கலாம்.

அவர் தோட்டத்தில் காலடி எடுத்துவைத்தபோது, உயிருடன் இருக்கும் பறவைகளைப் பார்த்தார். கடற் காகங்கள் வழக்கம்போல் கடலுக்குள் சென்றுவிட்டன. அவற்றுக்கு கடலில் கிடைக்கும் மீன்கள் தேவை. பிறகு கடல் ஏற்றத்தின்போது திரும்ப வரும்.

ஆனால், அவை உள்நாட்டுப் பறவைகள். அவை

காத்துக்கொண்டு, பார்த்துக்கொண்டிருந்தன.

புதர், நிலம், மரம், அவற்றுக்கு அப்பால் என வரிசையாகப் பறவைகள் அமர்ந்துகொண்டிருப்பதைக் கண்டார். பிறகு அவர் தோட்டத்துக்கு அப்பால் போனார். பறவைகள் அசையாமல் அவரையே பார்த்துக்கொண்டிருந்தன.

உணவை பெற வேண்டும். எனவே பண்ணைக்குச் செல்ல வேண்டும்.

அவர் வீட்டுக்குத் திரும்பி வந்து, கதவையும் ஜன்னல் களையும் பார்த்தார்.

"நான் பண்ணைக்குப் போகப்போகிறேன்."

அவள் அவனோடு ஒட்டிக்கொண்டாள். உயிருள்ள பறவைகளை அவள் ஏற்கெனவே பார்த்துவிட்டிருந்தாள்.

"எங்களையும் அழைத்துச் செல்லுங்கள். இங்கு தனியாக இருப்பதைவிட செத்துப் போய்விடுவதே நல்லது." அவள் கெஞ்சிக் கேட்டுக்கொண்டாள்.

"அப்படியெனில் வா. வரும்போது கூடைகளையும் ஜானியின் கை வண்டியையும் எடுத்து வா. நாம் அவற்றில் பொருட்களை நிரப்பலாம்."

காற்று வேகமாக அடிக்கவே அவர்கள் கனமான ஆடைகளை அணிந்துகொண்டனர். அவள் ஜானியைக் கை வண்டியில் அமர வைக்க, நாட் ஜில்லின் கையை பிடித்துக்கொண்டார்.

"பறவைகள் நிலத்தின் மேலே உள்ளன" ஜில் தேம்பினாள்.

"பகல் பொழுதில் அவை நம்மைத் தாக்காது" என நாட் சொன்னார்.

அவர்கள் வேலிகளைத் தாண்டிச் சென்றனர். அப்போதும் பறவைகள் அசையவில்லை. அவை எதற்கோ காத்துக்கொண்டிருந்தன. தலைகள் காற்று அடிக்கும் திசையைப் பார்த்துக்கொண்டிருந்தன.

பண்ணையை அடைந்ததும் நாட் தன் மனைவியிடம், "நீ குழந்தைகளுடன் இங்கேயே இரு" என உத்தரவிட்டார்.

"இல்லை, நான் திருமதி டிரிக்கரைப் பார்க்க வேண்டும். அங்காடியில் அவர்கள் நேற்றுப் பொருட்களை நிறைய வாங்கி

இருப்பார்கள். அவற்றை பெற வேண்டும்” என மனைவி மறுத்துப் பேசினாள்.

“இங்கேயே காத்திரு. நான் திரும்பவும் வருகிறேன்.”

பசுக்கள் அசெௌகரியமாகத் தலைகளைத் தாழ்த்தியபடி இருந்தன. ஆடுகள் வேலியைத் தாண்டி பண்ணைக்கு முன்புறமிருந்த தோட்டத்தில் நின்றுகொண்டிருந்தன.

புகைபோக்கியில் புகை ஏதும் வரவில்லை. நாட் அடி வயிற்றில் ஏதோ ஒன்று புரள்வதை உணர்ந்தார். மனைவியும் குழந்தைகளும் பண்ணைக்குள் வரக் கூடாது என்பதுதான் அவர் விருப்பம். அது நிறைவேறிவிட்டது.

அவர் தன்னந்தனியாகப் பசுக்களை அப்பால் விரட்டி தன் வழியில் முன்னேறினார்.

நிறுத்துமிடத்தில் அல்லாமல் கார் வெளியே நிற்பதைக் கண்டார்.

பண்ணை வீட்டின் எல்லா ஜன்னல்களும் நொறுங்கி இருந்தன. அதைச் சுற்றிலும் தரையெங்கும் செத்த கடற் காகங்களின் உடல்கள் கிடந்தன.

உயிருள்ள பறவைகள் பண்ணை மரங்களின்மீதும் கூரையின்மீதும் அமர்ந்திருந்தன. அவை அமைதியாகவும் நிசப்தமாகவும் இருந்தன. அவரையே பார்த்துக்கொண்டு இருந்தன.

வேலைக்காரன் ஜிம்மின் உடல் வழியிலேயே கிடந்தது. அவனுடைய துப்பாக்கி அருகிலேயே கிடந்தது.

பண்ணை வீட்டுக் கதவு உட்புறமாகத் தாழிடப்பட்டிருந்தது. இருப்பினும் உடைந்த ஜன்னலின் ஊடே அதைத் திறப்பது எளிது.

டிரிக்கரின் உடல் தொலைபேசியின் பக்கத்திலேயே இருந்தது. பறவைகள் தாக்கியபோது ஒருவேளை

எக்ஸ்சேஞ்சைத் தொடர்பு கொள்ள அவர் முயன்றிருக்கலாம். தொலைபேசியின் இணைப்பே துண்டிக்கப்பட்டிருக்க, ரிசீவர் தரையில் கிடந்தது.

திருமதி டிரிக்கரைக் காணோம். ஒருவேளை மாடியில்

இருக்கலாம். மேலே போவதில் ஏதேனும் பயனிருக்கிறதா? தலைசுற்ற நாட் படிகளில் ஏறினார்.

அவர்களுக்குக் குழந்தை இல்லை. அதுவரைக்கும் கடவுளுக்கு நன்றி.

வலுவை வரவழைத்துக்கொண்டு பாதி மாடி வரை ஏறிய நாட் பிறகு தடதடவெனக் கீழே இறங்கினார். அங்கே படுக்கை அறையிலிருந்து திருமதி டிரிக்கரின் கால் வெளியே நீட்டிக்கொண்டிருப்பதை மேலேயிருந்து கண்டுவிட்டார். தவிர கரு நிறக் கடற் காகங்களின் உடல்களும் அங்கே கிடந்தன.

வெளியே ஓடி வந்து மனைவியிடம், "இங்கே பயன்தரக் கூடிய காரியம் எதையும் நான் செய்யப்போவதில்லை. இன்னும் ஐந்து மணி நேரமே உள்ளது. திரு. டிரிக்கர் என் நிலையைப் புரிந்துகொள்வார். என்னென்ன கிடைக்கிறதோ அவற்றையெல்லாம் கொண்டு செல்ல வேண்டும்."

அவர் மனைவியை விட்டுவிட்டுக் குழந்தைகளிடம் ஓடி வந்தார்.

"நான் அந்த காரில் பொருட்களை நிரப்பப்போகிறேன். நாம் வீட்டுக்குச் சென்று திரும்பவும் வரலாம்."

"டிரிக்கரும் அவர் மனைவியும் எங்கே?" மனைவி கேட்டாள்.

"அவர்கள் நண்பன் வீட்டுக்குப் போயிருக்க வேண்டும்."

"அப்படியெனில் நான் வந்து உதவட்டுமா?"

"வேண்டாம். அங்கே பசுக்களும் ஆடுகளும் உள்ளன. நீ இங்கேயே காத்திரு. நான் காரை எடுத்து வருகிறேன். நீயும் குழந்தைகளும் அதில் உட்காருங்கள்."

அவர் பேசும்போது அவள் அவனையே கவனித்துக்கொண்டிருந்தாள். ஒருவேளை அவள் புரிந்து கொண்டு இருப்பாள். இல்லையெனில் ரொட்டிகளையும் மளிகைப் பொருட்களையும் எடுத்துத் தர நானும் வருவேன் என அடம் பிடித்திருப்பாளே.

அவர்கள் மொத்தமாக அந்தக் காரில் பண்ணைக்கும் வீட்டுக்கும் இடையே மூன்று தடவைகள் பயணம் செய்தனர். அவர்களுக்கு தேவையானவற்றை எல்லாம் பெற்றுவிட்டதில் அவருக்கு முழு திருப்தி. குறிப்பாக ஜன்னல்களுக்கும் கதவுக்கும் அடிக்கப் பலகைகள்.

கடைசிப் பயணத்தின்போது, மலையருகே இருந்த பேருந்து நிறுத்தத்தில் காரை நிறுத்தி டெலிபோன் பூத்தை நெருங்கினார்.

அவர் ரிசீவரை எடுத்துப் பார்த்தார். சத்தம் இல்லாமல் இருந்தது. எங்கேயோ வயர் அறுந்துவிட்டிருக்க வேண்டும். அவர் மலையில் இருந்தபடி சுற்றும் முற்றும் பார்த்தார். அவர்களைத் தவிர வேறு யாருமேயில்லை. பறவைகள் மட்டுமே பார்த்துக்கொண்டிருந்தன.

சில பறவைகள் தூங்கிக்கொண்டிருந்தன. அவற்றின் தலைகள் கீழிறங்கி அலகுகள் இறக்கைகளில் புதைந்து இருந்தன.

அவை நேற்றிரவு முழுவதும் உணவு உண்டிருக்க வேண்டும். அதனால்தான் காலையில் நகரக்கூட முடியாமல் அமர்ந்து இருக்கின்றன.

வானத்தை அண்ணாந்து பார்த்தார். வண்ணமற்று ஏதோ பழுப்பு நிறத்தில் காணப்பட்டது. மரங்கள் எல்லாம் கிழக்குப்புறக் காற்றுக்கு அடிபணிந்து வணங்கி நின்றன. குளிர்க் காற்று பறவைகளை ஒன்றும் செய்ய முடியவில்லை அவை நிலமெங்கும் குவிந்திருந்தன.

இப்போது வேண்டுமானால் அப்பறவைகளை சாகடிக்க ஏதேனும் முயற்சி செய்யலாம் என நாட் சொல்லிக்கொண்டார். இப்போது அவற்றை தாக்குவது எளிதாக இருக்கும். அவை நாடு முழுவதும் இதைப் போலவே இருக்கும். இச்சமயம் விமானங்கள் வந்து கடுகு வாயுவை பீய்ச்சி அடிக்கலாமே? ராணுவ வீரர்கள் என்ன செய்கிறார்கள்? அவர்களுக்குத் தெரியும். ஏதேனும் செய்வார்கள்.

அவர் காருக்கே திரும்பிச் சென்று ஓட்டுநர் இருக்கையில் அமர்ந்தார்.

"இரண்டாவது கேட் வழியாகச் சென்றுவிடுங்கள். தபால்காரன் உடல் அங்கே கிடக்கிறது. அதை ஜில் பார்க்க வேண்டாம்" மனைவி கிசுகிசுத்தாள்.

ஒரு மணி அடிக்க இன்னும் கால் மணி நேரம் பாக்கியுள்ள நிலையில் அவர்கள் வீட்டை அடைந்தனர். ஒரு மணி நேரம் தான் உள்ளது.

"மதிய சாப்பாட்டைத் தயார் செய். ஏதேனும் சூடாக -

குறிப்பாக சூப்பை உனக்கும் குழந்தைகளுக்கும் ஏற்பாடு செய். எனக்கு நேரமில்லை. நான் பொருட்களை எடுத்து உள்ளே வைக்க வேண்டும்" நாட் கூறினார்.

அவர் எல்லாப் பொருட்களையும் உள்ளே கொண்டு வந்து வைத்தார். பிறகு நேரம் உள்ளபோது அவற்றை ஒழுங்குபடுத்திக் கொள்ளலாம்.

வீட்டை சுற்றி நடந்து சென்று கதவையும் ஜன்னல்களையும் சோதித்தார். மொட்டை மாடியின் மீது ஏறி அங்கு அடைத்து இருந்த பலகைகளைச் சோதித்தார்.

குளிர் உள்ளும் புறமும், எங்கும் பரவி அவரை ஆட்டுவித்தது. ஆனால், வேலையை முடிக்க வேண்டுமே. அவ்வப்போது வானத்தில் விமானம் ஏதும் வருகிறதா எனப் பார்ப்பார். ஏதும் இல்லை. அவர் வேலை செய்யும்போதே, அதிகாரிகளின் மெத்தனத்தைக் கடிந்துகொண்டார்.

படுக்கையறைத் திறப்பில் வேலை முடிந்துவிட அவர் சற்று தாமதித்துக் கடலைப் பார்த்தார். அங்கே என்னவோ நகர்கிறாற்போல் தோன்றியது. கறுப்பு, சாம்பல் வண்ணத்தில் அது கரையை அடைய முடிகிறாற்போல் இருந்தது.

'கடற் படை வாழ்க. அவர்கள் நம்மைக் கைவிட மாட்டார்கள். அவர்கள் வேலையில் இறங்கிவிட்டார்கள்' நாட் உற்சாகமாக சொல்லிக்கொண்டார்.

அவர் நின்றபடி கண்களை சுருக்கி கடலையே பார்த்துக்கொண்டிருந்தார். அவர் நினைத்தது முற்றிலும் தவறு. அது கடற் படை இல்லை. மாறாக ஆயிரக்கணக்கான கடற் காகங்கள் கடலிலிருந்து எழுந்து, ஒன்றோடு ஒன்றாக இறக்கைகள் படபடவென அடிக்க வானத்தில் பறந்தன.

கடல் ஏற்றம் தொடங்கிவிட்டது.

நாட் சட்டென ஏணியில் இறங்கி வீட்டுக்குள் சென்றார். குடும்பமே சாப்பிட்டுக்கொண்டிருந்தது. அப்போது மணி இரண்டுக்கும் மேலிருக்கும். அவர் கதவைச் சாத்தி தாழிட்டு விட்டு, அதன்மீது பலகையை வைத்துவிட்டு விளக்கை ஏற்றினார்.

"ஆ, இரவு வந்துவிட்டது" ஜானி சொன்னான்.

அவருடைய மனைவி திரும்பவும் ஒயர்லெஸ்ஸை போட்டாள். ஆனால், அதில் கொர்ரென்று சத்தம்தான் வந்தது.

"ஸ்விட்சைத் திருகி எல்லா ஸ்டேஷன்களையும் கேட்டேன். ஆனால், வெற்று சப்தத்தைத் தவிர ஒன்றுமேயில்லை" மனைவி கூறினாள்.

"இதே பிரச்னை அங்கேயும் இருக்கும். ஒருவேளை ஐரோப்பா முழுவதும் பரவி இருக்கலாம்."

அவர்கள் அமைதியுடன் உணவு உண்டனர்.

தட்டுவது திரும்பவும் துவங்கியது. ஜன்னல்களைத் தள்ளித் திறக்க முயன்று அவை போராடின. தற்கொலைக்கும் அஞ்சாத கடற் காகங்கள் அவற்றிடையே இருந்தன.

உணவை முடித்ததும் எடுத்து வந்த பொருட்களை ஒழுங்காக அடுக்கி வைக்க நாட் தீர்மானித்தார். அடித்த பலகைகள் பறவைகளுக்கும் காற்றுக்கும் எதிராக வலிமையுடன் நிற்கும். வீடு முழுவதும் மளிகைப் பொருட்களால் நிரம்பி இருக்க, அடுத்த சில நாட்களுக்கு வெப்பம், உணவு அவர்களுக்குப் போதுமானது.

நாட் பொருட்களை எடுத்துவைக்க மனைவியும் குழந்தைகளும் உதவினர். அவ்வப்போது குழந்தைகள் களைப்படைவர். இப்படியே மணி இரவு ஒன்பதை நெருங்கியபோது நாட் படுக்கையை எடுத்துப்போனார். குழந்தைகள் களைப்பால் விடியற்காலை மூன்று வரை தூங்கும்.

ஜன்னல்களை மேலும் பாதுகாப்பாக்க அவரிடம் திட்டம் ஒன்று எழுந்தது. அது வேலிக் கம்பிகளைப் பலகைகளில் வைத்து அடிப்பதுதான். பண்ணையிலிருந்து முள் வேலிக் கம்பிகளை முன்னரே கொண்டுவந்துவிட்டிருந்தார். பிரச்னை என்னவென்றால் அந்த வேலையை இருட்டில் செய்ய வேண்டும். கடல் உள் முகமாக ஏறும்போது அதைச் செய்ய வேண்டும். அவர் அதை முன்னர் நினைக்கவில்லை. எனினும் மனைவியும் குழந்தைகளும் தூங்கும் இந்தத் தருணத்தில்தான் இதை முடிக்க வேண்டும்.

சின்னஞ்சிறு பறவைகள் எல்லாம் ஜன்னல்களில் வந்து அமர்ந்தன. இறக்கைகளின் மென்மையான ஒலி மற்றும்

அலகுகளின் மெல்லத் தட்டும் ஒலி ஆகியவற்றிலிருந்து அடையாளம் கண்டுகொண்டார்.

வல்லூறுகள் ஜன்னல்களை விட்டுவிட்டு, கதவில் தம் கவனத்தைச் செலுத்தின.

நாட் மௌனமாக கதவு பிளக்கப்படும் ஓசையைக் கேட்டுக்கொண்டிருந்தார். ஊடுருவும் விழிகள், கொத்துகிற அலகுகள் கொண்ட அவற்றின் சின்னஞ்சிறு மூளைக்குள் எத்தனை லட்ச வருடங்களாக மனித குலத்தை அழிக்கும் நினைவு பதிந்திருக்கிறதோ தெரியாது. அதுவும் இயந்திரங்களின் திட்டமிட்ட கணக்குப்படி அவை நடக்கின்றன.

"நான் கடைசி சிகரெட்டைப் பிடிக்கப்போகிறேன். என்ன முட்டாள்தனம், பண்ணையிலிருந்து அதை மட்டும் எடுத்துவர மறந்துவிட்டேன்" என்று நாட் மனைவியிடம் சொன்னார்.

அவர் கொர்ரென்று சப்தமிடும் ஒயர்லெஸ்ஸை ஆன் செய்தார்.

சிகரெட் பாக்கெட்டை கணப்பு அடுப்பில் விட்டெறிந்து அது எரிவதைப் பார்த்துக்கொண்டே இருந்தார்.

-டாப்னி டி மோரியர், 1952

# 2

## நீல பேப்பர்

சுமார் முப்பது வருடங்களுக்கு முன் என் கல்லூரித் தோழன் சொன்ன கதை இது. அவன் இக்கதையை ஒரு வயதான கனடிய மத குரு சொன்னதாகவும், ஒரு நாட்டுபுறக் கதை எனவும் கூறினார். என்னாலோ எனது வகுப்புத் தோழனாலோ இதை எழுதியது யார் எனக் கண்டுபிடிக்க முடியவில்லை. என்னுடைய வாய்மொழியைக் கேட்டு கிளீவ்லேண்ட் மொபட், எலிசபெத் ஜோர்டன் ஆகியோர் இதை எழுதியுள்ளனர். இக்கதையைப் படிக்கும் நீங்கள் ஒருவேளை இதன் மூலத்தை அறிந்திருக்கக்கூடும்.

-ஆல்பர்ட் பேஸன் டெர்ஹயுன்

ஜான் தானே என்பவன் வாழ்வில் நன்கு முன்னேறிய ஒரு அமெரிக்க இளைஞன். அவன் பணிபுரிந்துகொண்டிருந்த கம்பெனி தொழில் நிமித்தமாக அவனை ஃபிரான்சுக்கு அனுப்பிவைத்தது. அவன் இதற்கு முன் வெளிநாட்டுக்கெல்லாம் போனது கிடையாது. தவிர ஃபிரெஞ்சு பாஷையில் ஒரு அட்சரம்கூடத் தெரியாது.

ஒருநாள் காலையில் தாமதமாக பாரிஸை வந்தடைந்த அவன் ஒரு ஹோட்டலில் அறை எடுத்துக்கொண்டு, பின் வீதியோர உணவு விடுதிக்கு சென்றான். அப்போது அவன் அமர்ந்திருந்த மேஜைக்குச் சற்றுத் தள்ளி அமர்ந்திருந்த ஒரு ஃபிரெஞ்சு அழகி அவனைப் பார்த்து திரும்பத் திரும்பப் புன்னகைத்தாள். ஆனால், இவனோ சிரிக்காமலிருந்தான். உடனே அவள் தன் கைப் பையிலிருந்து ஒரு நீல நிற பேப்பரை எடுத்து ஏதோ ஒன்றை எழுதிவிட்டு தன் காலடியில் போட்டாள். பின்பு ஒருவித அர்த்தம் தொனிக்கும் முழுப் பார்வை பார்த்த அவள் சட்டென்று எழுந்து,

இரு பக்கங்களிலும் மரங்கள் நிறைந்த சாலையில், ஜனக் கூட்டத்தில் மறைந்தாள்.

ஆர்வம் கொப்பளிக்க, அதே சமயம் இவ்வளவு அழகு வாய்ந்த ஒரு பெண்ணை கைவிட்டோமே என்ற வருத்தத்தில் ஆழ்ந்த ஜான் தானே அந்த பேப்பரை எடுத்தான். அதில் ஃபிரெஞ்சு மொழியில் சில வார்த்தைகள் எழுதப்பட்டிருந்தன. அந்த ஃபிரெஞ்சுப் பெண் தனக்குத்தான் ஏதோ எழுதியிருக்கிறாள் என யூகித்து, தானே அங்கிருந்த தலைமை சர்வரை அழைத்து, விஷயத்தை மொழிபெயர்க்கும்படி சொன்னான். அந்த மனிதனோ பேப்பரில் இருந்த வாசகங்களை படித்தவுடன் முகம் விகாரமாகி ஜான் தானேவை உடனே அவ்விடத்தை விட்டுப் போகும்படி கட்டளை இட்டான்.

ஹோட்டலுக்கு திரும்பி வந்த ஜான், மானேஜரிடம் தனக்கு நேர்ந்த வினோத சம்பவத்தைக் கூறிவிட்டு நீல பேப்பரைக் காட்டினான். மானேஜர் அவனை அருவருப்புடன் பார்த்தபடி ஹோட்டலை உடனடியாக காலி செய்யும்படி கூறிவிட்டார். தவிர எந்த விளக்கமும் கூற மறுத்து விட்டார்.

அவமரியாதைப்பட்ட ஜான் தானே அந்த நீல பேப்பரை தன் சட்டைப் பையில் வைத்துக்கொண்டு, அந்த விசித்திர நகரத்தில் இதுபற்றி யாரிடமும் கேட்கக் கூடாது என்று சூளுரைத்துக்கொண்டான்.

அமெரிக்கா திரும்பியவுடன் தன் கம்பெனி முதலாளியிடம் நடந்த கதையை விவரித்தான். மூலத்தில் அவரொரு ஃபிரெஞ்சு மனிதர். ஜான் தானேவின் தந்தைக்கும் அவனுக்கும் வருடக் கணக்கில் நண்பராக இருப்பவர். அவர் அந்த விஷயத்தை ஏதோ கொடூர நோக்கமாக இருக்க வேண்டும் எனச் சொல்லி, அதைப் பற்றி அவனுக்கு விளக்குவதாகவும் ஒப்புக்கொண்டார். ஆனால், ஜான் தானே அந்த பேப்பரை அவரிடம் காட்டியதுதான் தாமதம், உடனே அவர் முகம் வெளுத்தது; உதடுகள் கோணிக்கொள்ள பேப்பரை முகத்தில் வீசி எறிந்தார். அடுத்து வேலையை ராஜினாமா செய்துவிட்டு வெளியேறும்படி உத்தரவிட்டார். இப்போது வேலையற்றுப் போய் வீதியில் தள்ளாடிய அவன் மனம் குழம்பிப்போனான். எல்லாமே போயிற்று - காரணம் சின்னஞ்சிறு பேப்பரில் எழுதப்பட்ட சில வார்த்தைகள் தான்.



கடைசியில் யோசனை ஒன்று உதித்தது. அவனுடைய குழந்தைப் பருவத்தில் தாதியாக இருந்து பார்த்துக்கொண்டவள் வயதான ஒரு ஃபிரெஞ்சு பெண்மணி. அவன் மேல் பேரன்பு கொண்டவள். நேராக அவள் வீட்டுக்குச் சென்றவன் தன் மனதில் இருந்ததை எல்லாம் கொட்டித் தீர்த்துவிட்டான். பின்பு அந்த மர்மம் நிறைந்த வார்த்தை களைத் தனக்காக மொழிபெயர்க்கும்படி கெஞ்சிக் கேட்டுக்கொண்டான்.



பின் அவன் நாற்காலியில் அமரும்போது மேஜையின் மேல் துப்பாக்கியை எடுத்துவைத்தான். "எளிமையான அதேநேரம் சரியான மொழி பெயர்ப்பு வேண்டும் அல்லது இந்த அறையை விட்டே நான் வெளியேறப் போவதில்லை" என்று திரும்பவும் வலியுறுத்தினான். அவள் தலையை அசைத்தபடி பேப்பருக்காகக் கையை நீட்டினாள்.

ஜான் தானே வழக்கமாக அந்த பேப்பரை வைக்கும் சட்டைப் பையில் கைகளால் துழாவினான். அடுத்து பைத்தியம் பிடித்தாற்போல் எல்லா பாக்கெட்டுகளிலும் தேடினான். அந்தப் பேப்பர் எங்குமே இல்லை. ஜான் தானே அதை பிறகு அத்த பேப்பரை என்றுமே பார்க்கவில்லை.

-ஆல்பர்ட் பேஸன் டெர்ஹயுன், 1941

# 3

## புயல்

அவள் பூட்டில் சாவியை நுழைத்துக் குமிழைத் திருகினாள். மார்ச் மாதத்துக் காற்று, அவள் பிடியிலிருந்து கதவைப் பிடுங்கி சுவரின் மீது அறைந்தது. அந்தக் கடுங்காற்றுக்கெதிராக கதவைச் சாத்த கடுமையாக முயற்சி செய்ய வேண்டியிருந்தது. பின் கதவை மூடிய அடுத்த நொடி கடும் மழை பெய்யத் தொடங்கி அவளை வீட்டிக்குள்ளேயும் தொடர முயற்சிப்பது போல் ஜன்னல்களின் மீது மோதிப் பெருத்த ஓசையை உண்டு பண்ணியது. அப்போது வீட்டுக்கு வெளியே ஒரு டாக்ஸி புறப்பட்டு, பிரதான சாலைக்கு விரைந்த சப்தத்தை அவள் கேட்கவில்லை.

சரியான நேரத்தில் வீடு வந்து சேர்ந்துவிட்டதற்கான மகிழ்ச்சியை பெருமூச்சின் வாயிலாக வெளிப்படுத்தினாள். இதுபோல் மழை பெய்யும் சமயங்களில் சாலை சந்திப்புகளில் நீர் மட்டம் அதிகரித்துவிடும். அவள் வந்த கார் அரை மணி நேரம் தாமதித்திருந்தால் பிறகு வீடு வருவதற்கு வேறு பாதையே கிடையாது.

வீட்டினுள் விளக்குகள் போடப்பட்டிருக்கவில்லை. காரணம் அப்போது பென் அங்கிருக்கவில்லை. அவள் சோபாவின் அருகே இருந்த விளக்கைப் போட்டபோது, ஒருவிதமான மன நிலையை உணர்ந்தாள். அவள் தன் சகோதரியின் வீட்டுக்குச் சென்றுவிட்டுத் திரும்பிய வழியெல்லாம் எங்கணும் விளக்குகள் போடப்பட்ட வீட்டுக்குள் நுழைவதாகவும் அங்கே கணப்பு அடுப்பு அருகே பென் மாலை நாளிதழுடன் அமர்ந்துகொண்டு இருப்பதாகவும் நினைத்துக்கொண்டாள்.

அப்போது அவன் தான் எதிர்பார்த்ததற்கு மாறாக ஒரு வாரம்

முன்னதாகவே அவள் வந்துவிட்டதைக் கண்டு அவன் முகத்தில் தெரிந்த சந்தோஷமும் ஆச்சர்யமும் கலந்த சங்கதியை இனம் கண்டுகொள்கிறாள். அவளைக் காணும் போது அவனுடைய வட்ட முகம் எப்படிப் பிரகாசிக்கும், கண்ணாடிக்கு பின்புறம் உள்ள கண்கள் எவ்விதமாக ஜொலிக்கும், அவன் சட்டென எழுந்து வந்து அவள் தோள்களை எவ்விதமாகப் பிடிப்பான்? ஒரு மாத காலப் பிரிவு அவளுடைய முகத்தில் என்ன மாற்றங்களை ஏற்படுத்தியிருக்கிறது என்பதைக் காண எப்படியெல்லாம் பார்ப்பான்? அதன்பின் ஃபிரெஞ்சு ராணுவ அதிகாரி ஒருவன் அலங்காரத்தை ஆராதிப்பதுபோல அவளுடைய இரண்டு கன்னங்களிலும் அன்புடன் எப்படி முத்தமிடுவான் என்பதையெல்லாம் அவள் அறிவாள். பிறகு அவள் காபியை தயார் செய்து துண்டு கேக்கை எடுத்துக்கொள்ள, அவர்கள் இருவரும் கணப்பு அடுப்பு அருகே ஒன்றாக அமர்ந்து பேசுவார்கள்.

ஆனால், பென் இப்போது அங்கில்லை. அவள் மாடத்திலிருந்த கடிகாரத்தைப் பார்த்து மணி பத்தை நெருங்குவதை உணர்ந்தாள். இன்று அவள் வீடு திரும்புவதை அவன் அறியாத காரணத்தால், அவனுக்கு திரும்ப வரும் உத்தேசம் இல்லாமலிருக்கலாம். இதற்கு முன்னர் அவள் வீட்டிலிருந்த சமயங்களில் அடிக்கடி நகரத்திலேயே தங்கி விடுவான். காரணம் அவன் தொழில் அப்படி; கடைசி ரயிலை பிடிக்க முடியாமல் போய்விடும். ஆக அவன் சீக்கிரமாக வந்துவிட வேண்டும். அல்லவெனில் இன்றிரவு அவனால் வர முடியாமல் போய்விடும்.



அந்த நினைப்பே அவளுக்குக் கசந்தது. புயல் வேறு மோசமாகிக்கொண்டே போனது. மரங்களின் பேயாட்ட சப்தத்தையும், அந்தச் சின்ன வீட்டின் வெளி மூலைகளின் மேலே காற்றால் எழுந்த சீழ்கை ஒலியையும் கேட்டாள். அப்போது முதன்முறையாக ஆளரவம் அற்ற இந்த இடத்துக்குக் குடிபெயர்ந்ததை நினைத்து நொந்து கொண்டாள். துவக்கத்தில் கால் மைல் தூரத்தில் சிலர் வசித்துவந்தனர். ஆனால், சில மாதங்களுக்கு முன்பு அவர்களும் வேறு இடங்களுக்குக் குடிபெயர்ந்துவிட இப்போது அந்த வீடுகள் காலியாக உள்ளன.

அவள் தனிமையை பற்றி நினைத்துப் பார்த்ததே இல்லை. இந்த இடம் இருவருக்குப் போதுமானது. அவள் தன்னுடைய வீட்டை சொந்த வீட்டை அலங்கரிப்பதில் பெருத்த தன்னிறைவை அடைந்தாள். அதைத் தொடர்ந்து பராமரிப்பதில் சந்தோஷமும் கொண்டாள். பென் அவளுடன் இல்லாதபோது ஏற்படும் சஞ்சலத்தைத் தவிர்த்து; ஆனால், இச்சமயம் வீட்டை உடைத்துக்கொண்டு உள்ளே வர முயற்சிக்கும் புயலில், மற்ற மனிதர்களிடமிருந்து வெகு தூரத்தில் இருக்கும் தனிமை தந்த பயங்கரத்தை உணர்ந்து கொண்டாள். இந்தப் பகுதியின் சாலை சந்திப்பில்கூட ஒருவரும் வசிக்கவில்லை. அந்த வீட்டைக் கடந்து

செல்லும் பாதை நிலங்களின் ஊடே சென்று ஒரு மைல் தள்ளியிருக்கும் அடர்ந்த காட்டின் சூனியத்தில் சென்று முடிகிறது.

அவள் கோட்டையும் தொப்பியையும் அலமாரியில் மாட்டிவிட்டுக் காற்று கலைத்துப் போட்டிருந்த தலைமுடியை சரி செய்ய ஹாலின் நிலைக் கண்ணாடியின் முன் நின்றாள். கண்ணாடியில் தெரிந்த தன் பெரிய முகத்தை, சின்னஞ்சிறு மூக்கை, கறுப்பு உடையில் மெலிந்த குழந்தை போன்ற தோற்றத்தைத் திரும்பிப் பார்த்த பெரிய பிரவுன் நிற விழிகளை அவளால் உணர முடியவில்லை.

அவள் முடி இழைகளைச் சரி செய்து கொண்டையாக முடிந்து கண்ணாடியிலிருந்து அப்பால் விலகினாள். தோள்கள் சற்றுக் குறுகியிருந்த அவளிடம் ஒருவிதமான குழந்தைத்தனம் இருந்தது. ஒரு சின்னஞ்சிறுமி பாதுகாப்பை தேடுவது போன்ற முதிர்ச்சியின்மை இருந்தாலும், வெறுமையை மீறி அழகாக இருந்தாள். அவளுக்கு இப்போது முப்தொன்றாகிறது. கல்யாணமாகிப் பதினைந்து மாதங்கள் ஓடிவிட்டன. அத்திருமணமே இப்போதுகூட ஒரு மாயா ஜாலமாக அவளுக்குத் தோன்றும்.

இப்போது அவள் வீட்டில் நடக்கத் தொடங்கி ஆங்காங்கு இருந்த விளக்குகளைப் போட்டாள். பென் வீட்டை சுத்தமாகத்தான் வைத்திருந்தான். வீட்டை சுத்தமாக வைத்திருப்பதில் ஆண்களுக்கு உள்ள குறை அங்கே இல்லை. ஆம், பென் சுத்தத்தை விரும்புவான். அச்சமயம் அவள் வீட்டில் உச்சபட்சக் குளிரை உணர்ந்தாள். ஆமாம், மின்சாரக் கணப்பின் அளவை பென் குறைத்துவிட்டிருப்பான். அவன் இதுபோன்ற விஷயங்களில் கவனமுடன் இருப்பான். எதுவும் வீணாவதை அவன் விரும்புவதில்லை.

மின்சாரக் கணப்பின் அளவு மிகக் குறைவாக இருக்க, குளிரின் காரணம் புரிந்தது. அவள் அந்தச் சின்னஞ்சிறு முள்ளை எழுபதில் தள்ளியபோது நிலவறையிலிருந்த மோட்டார் சட்டென்று சப்தத்துடன் இயங்க அவள் ஒரு கணம் திடுக்கிட்டுப்போனாள்.

பிறகு சமையலறைக்கு சென்று காபி போட்டாள். அது

தயாராகும் சமயத்தில் கீழ் தளத்தை மெதுவாகச் சுற்றிவர ஆரம்பித்தாள். அந்நேரத்தில் அவளிடம் பதற்றமும் இறுக்கமும் இருந்தது ஆச்சர்யத்தை தந்தது. எனினும் தன்னுடைய வீட்டுக்குத் திரும்பவும் வந்துவிட்டதில் அவளுக்கு சந்தோஷமே. அவள் கூடத்தை கவனமாகப் பார்த்தாள். ஆம் அது சற்று சிறியதாக இருந்தாலும் மனதுக்கு ரம்மியத்தைத் தந்தது. மலர்களுடன் பளீரென்று இருந்த சின்டைஸ் செடிகள் வெகு அழகாக இருந்தன. மூன்று மாதத்துக்கு முன்னால் அவள் வாங்கிய லோபாய் நீண்ட சுவரின் மத்தியில் பிரமாதமாக இருந்தது. ஆனால், ஜன்னலருகே அவள் வைத்திருந்த செடிகள் பட்டுப் போயிருந்தன. அவள் படித்துப் படித்துச் சொல்லியிருந்தும் பென் தண்ணீர்விட மறந்துவிட்டிருக்கிறான். இப்போது அவை தொங்கியும் சுருங்கியும் வெளுத்தும் போயிருந்தன. அக்காட்சி வீடு திரும்பிய ஆனந்தத்தை விலக்கத் தொடங்கியிருந்தது.

அவள் சமையலறைக்கு திரும்பி வந்து கப்பினுள் காபியை ஊற்றிக்கொண்டாள். அதைப் பகிர்ந்துகொள்ள பென் இப்போது இங்கிருக்க வேண்டுமே என நினைத்தாள். அவள் கப்புடன் ஹாலுக்குள் நுழைந்து பென்னின் பிரத்யேகமான பெரிய நாற்காலி அருகே இருந்த, சிறிய வட்ட மேஜை மீது அதை வைத்தாள். மின்சாரக் கணப்பு சுறுசுறுப்பாக இயங்கி வெப்பத்தை அனுப்பியது. ஆனால், அவள் முன்பைவிடக் குளிர்ச்சியை உணர்ந்தாள். இதனால் உடல் வெடவெடக்க அலமாரியிலிருந்த பென்னின் பழைய கோட் ஒன்றை எடுத்து சுற்றிக்கொண்டு பிறகு அமர்ந்துகொண்டாள்.

கதவு மற்றும் ஜன்னல்களின் மேல் காற்று அறைந்தது. வீசிய காற்றில் நீரின் ஓசை நிறைந்திருந்தது. மழை நீர் மொத்தமாக ஒன்று சேர்ந்து தளத்தின் மேல் தடதடவென்றது. இதை கேட்டுக்கொண்டிருந்த அவள் பென் வந்துவிட வேண்டும் என ஜுரத்துடன் நினைத்துக்கொண்டாள். இதுபோன்ற தனிமையை அவள் என்றுமே அனுபவித்ததில்லை. அவன்கூட இருப்பது பெரியதோர் ஆறுதலாக இருந்தது. அவள் சகோதரியின் உடல் நிலை நிமித்தமாக அவள் மேற்கொண்ட நீண்ட பயணத்தின்போது அவன் மிகமிக ஆதரவாக இருந்தான். அவன் ஒவ்வொரு சின்ன விஷயத்தையும் ஊன்றிக் கவனித்து

அவளுடைய கரங்களில் புத்தகங்களையும் இனிப்புகளையும் பழங்களையும் கொட்டிக் குவித்தான். அவளைப் பொறுத்தவரை அவை யாவும் மிக அதிகம் என்பதை அறிவாள். ஏனெனில் பென் அவ்வளவு சுலபமாக செலவு செய்ய மாட்டான். உண்மையை சொன்னால் அவன் கொஞ்சம் கருமி.

ஆனால், அவன் நல்லதொரு கணவனாகத் திகழ்ந்தான். அவள் பெருமூச்சு விட்டுக்கொண்டாள். அதன் காரணம் தொலைந்துபோன வாலிபமும் அதன் விளையாட்டுகளும் என்பதை அவள் அறியவில்லை. காபியை அருந்தியபடியே அவன் தங்கமானவன் என்று தனக்குத்தானே உறுதியுடன் சொல்லிக்கொண்டாள். அவன் அவளைவிடப் பத்து வயது மூத்தவன் என்ற காரணத்தால் சில சமயங்களில் அவனுக்கே உரித்தான வகையில் நடந்துகொள்வான். அதுவும் பெரிதாக இல்லை. அவ்வப்போது அதிகாரத்துடன் இருப்பான். சில நேரம் மனம் சுருங்கியிருப்பான். அவள் கனவு கண்டபடி அவளுக்குத் தகுந்த வீட்டையும் பாதுகாப்பையும் அளித்து இருந்தான். அந்தப் பாதுகாப்பு மட்டுமே போதாது என்றாலும் அதற்காக அவனைக் குறை சொல்ல முடியாது.

அவளுக்குப் பக்கத்திலிருந்த மேஜையின் மேலிருந்த மாத இதழுக்கு அடியில் வெள்ளையாக ஏதோ ஒன்று நீட்டிக் கொண்டிருந்தது. அவள் பார்வையில் பட்டுவிட்டது. அவள் அதை நோக்கிக் கைகளை நீட்டினாள். ஆனால், எடுப்பதற்குச் சற்றுத் தயங்கினாள். எனினும் சட்டென்று எடுத்துவிட்டாள். அது என்னவாக இருக்கும் என உள்ளுணர்வு முன்பே சொல்லிவிட்டது. அது ஒரு வெள்ளைக் காகித உறை. உள்ளே ஒன்றுமில்லை. அதன் மேல் வழக்கம்போல் தட்டச்சு செய்யப்பட்டிருந்த முகவரி இருந்தது. 'பெஞ்ச் டி.வில்சம் ஈஸ்கொயர், வைல்ட்வுட் சாலை, பேர்போர்ட்கான்'. அது நியூயார்க் நகரத்திலிருந்து வந்திருப்பதாக தபால் முத்திரை தெரிவித்தது. எல்லாம் வழக்கம்போல் மாறாமல் இருந்தன.

அதை அவள் கையில் வைத்திருந்தபோது, வழக்கம்போல் இதயம் சுருங்குவதை உணர்ந்தாள். இந்தக் காகித உறையின் உள்ளே இருந்ததைப் பற்றி அவள் அறியவே இல்லை. ஆனால், அவை பென்னிடம் ஏற்படுத்தும் தாக்கத்தைப் பற்றி அவள் அறிவாள். அவை மாதத்துக்கு ஒன்றோ இரண்டோ வரும்.

அப்போதெல்லாம் பென் எரிச்சலாகி, முகம் விகாரமாகிவிடும். அச்சமயங்களில் அவர்களின் அமைதியான வாழ்வில் விரிசல் உண்டாகிவிடும்.

முதன்முதலாக இப்படி ஏற்பட்டபோது அவள் இதைப் பற்றிக் கேட்டாள். அவனை தேற்ற முயன்றாள். ஆனால், அவளுடைய முயற்சி அவனுடைய கோபத்தை அதிகரித்து விடுவதை புரிந்துகொண்டு பிறகு அவற்றைப் பற்றி கேள்வி கேட்பதை நிறுத்திவிட்டாள். இதேபோல் ஒருமுறை கடிதம் வந்தபின் அவர்கள் இருவரும் ஒரு வாரத்துக்கு அந்நியர்கள் போல் ஒரே அறையில் மௌனமாகக் காலம் கழித்தனர். அப்போது அவன் சோகம் அவளை மிரட்டிவிட்டது.

இந்தக் கடிதம் மூன்று நாட்களுக்கு முன்பு வந்திருப்பதாக முத்திரை தெரிவித்தது. இன்றிரவு பென் வீட்டுக்கு வந்தாலும் சிடுசிடுவென்றுதான் இருப்பான். அடிக்கிற புயல் அவனுள் எந்த மாற்றத்தையும் ஏற்படுத்தாது. எனினும் அவன் வீடு திரும்ப வேண்டுமென அவள் விரும்பினாள்.

அவள் அந்தக் காகித உறையைச் சுக்குநூறாக கிழித்து கணப்பு அடுப்பில் விட்டெறிந்தாள். காற்று தன் ராட்சதப் பிடியால் வீட்டை ஆட்ட மரக் கிளை ஒன்று உடைந்து தளத்தின்மீது விழுந்தது. அவள் உடலை நிமிர்த்தியபோது ஜன்னலருகே ஏற்பட்ட அசைவு ஒன்று பார்வையில் பட்டது. அவள் உறைந்து போனாள்.

அப்போதும் எரியாத கணப்பு அடுப்பை நோக்கி பாதி வளைத்த நிலையில் கைகளை நீட்டி இருந்தாள். பெய்து கொண்டிருந்த மழை ஜன்னலின் பின்புறத்தை மறைத்தாலும் அங்கே தெரிந்ததைப் பற்றி அவளுக்கு ஐயம் ஏதுமில்லை. அது ஒரு மனித முகம். கண்கள் இருந்தன. அவை அவளையே வெறித்துப் பார்ப்பதை சந்தேகமின்றி உணர்ந்தாள்.

காற்றின் சப்தம் வேறு அவளைக் கலக்கிக்கொண்டே இருந்தது. அவள் நெடு நேரம் விறைப்பாக இருந்தபடி ஜன்னலையே பார்த்துக்கொண்டு இருந்தாள். ஆனால், ஜன்னலின் கண்ணாடி மேல் தெறித்த மழை நீரைத் தவிர அங்கே வேறொன்றும் இல்லை.

அதற்கு அப்பால் இருள் மட்டுமே தெரிந்தது அவ்வளவுதான்.

மற்றபடி மரங்கள் ஆடும் ஓசையும் மழைநீரின் ஆரவாரமும் காற்றில் ஊளைச் சப்தமும் மட்டும் கேட்டன.

பிறகு திரும்பவும் அவள் இயல்பாக மூச்சுவிட்டபடி தன்னை தைரியப்படுத்திக்கொண்டு, விளக்கை அணைத்து விட்டு ஜன்னலருகே சென்றாள். இருள், சுவர்போல் ஊடுருவ முடியாததாக, ரகசியங்கள் நிறைந்ததாகத் தெரிய வீட்டை முற்றுகையிடும் ஓநாய்கள்போல் வீட்டினுள் ஏற்பட்ட இருள் புயலை உள்ளுக்குள் கொண்டு வந்துவிடும் போலிருந்தது. உடனே அவள் திரும்பவும் விளக்கைப் போட்டாள்.

அந்த வெறித்த விழிகளைக் கற்பனையில்தான் பார்த்திருக்க முடியும். இதுபோன்ற இரவில் எவருமே வெளியில் வர மாட்டார்கள் - எவரும்! எனினும் அவள் வந்துவிட்டாள். பயங்கர திகிலில் ஆடிப்போயிருந்தாள்.

பென் மட்டும் வீட்டுக்கு வந்துவிட்டால்? அவள் தனிமையில் மட்டும் இல்லாமலிருந்தால்?

உடல் உதற, பென்னின் கோட்டை இன்னும் இறுகப் போர்த்திக்கொண்டு, தானொரு அடிமுட்டாளாக ஆகி விட்டதாகச் சொல்லிக்கொண்டாள். இந்தத் தனிமையை சகிக்க முடியவில்லை. அச்சமயம் ஜன்னலுக்கு வெளியே ஒலித்த காலடிச் சப்தம் காதுகளில் விழுந்தது. அவை மெல்ல ஆனால், துல்லியமாகக் கேட்டதாக அவள் சொல்லிக் கொண்டாள்.

ஒருவேளை பென் அவ்வப்போது தங்கும் ஹோட்டலுக்கு வந்துவிட்டிருக்க வேண்டும். எதிர்பார்த்த காலத்துக்கு முன்பே தான் வீடு திரும்பி அவனை ஆச்சர்யத்தில் மூழ்கடிக்கும் சந்தோஷத்தைப் பற்றி அவள் இப்போது கவலைப்படவில்லை. அவனுடைய குரலைக் கேட்டாலே போதும் என்று அவள் விரும்பினாள். உடனே தொலைபேசி அருகே சென்று ரிசீவரை எடுத்தாள்.

ரீசிவரில் சப்தம் எதுவுமில்லை.

ஆம், வயர்கள் அறுந்துவிட்டிருக்க வேண்டும்.

அவள் பீதியில் போராடினாள். ஜன்னலில் தெரிந்த முகம் பிரமையாகும். கண்ணாடியில் விழுந்த வெளிச்சத்தால் ஏற்பட்ட கற்பனையாகும். மற்றும் காலடிச் சப்தங்களும்

கற்பனையாகத்தான் இருக்க வேண்டும். உண்மையில் அவை ஒலித்திருந்தால் இந்தப் பேய்த்தனமான புயல் சப்தத்தில் கேட்டிருக்காது. இந்த இரவில் யாருமே வெளியில்வர மாட்டார்கள். நிஜத்தில் அவளை எதுவுமே பயமுறுத்தவில்லை இந்தச் சுவர்களைத் தாண்டிப் புயல் அணை கட்டியிருக்கிறது. நாளைக் காலையில் திரும்பவும் சூரியன் உதிக்கும்.

இப்போது தன்னை ஆசுவாசம் செய்துகொள்ள வேண்டும் எனில் பேசாமல் ஒரு புத்தகத்தை கையிலெடுத்துக்கொண்டு உட்கார்ந்துவிட வேண்டும். படுக்கைக்கு போவது இயலாத காரியம். அவளால் தூங்க முடியாமல் போய்விடக் கூடும். படுக்கையில் படுத்தால் அவள் கொட்டக் கொட்ட விழித்துக் கொண்டு ஜன்னலில் தெரிந்த முகத்தையே நினைத்தபடி காலடி சப்தத்தைக் கேட்பாள்.

கணப்புக்குக் கொஞ்சம் விறகுகளை எடுக்க வேண்டும். எனவே நிலவறை படிக்கட்டு ஆரம்பத்தில் சற்று நேரம் தாமதித்தாள். விளக்கின் ஒளி போதவில்லை. படிக்கட்டுச் சுவர் ஈரமாகவும் ஒரு வகையில் பயங்கரமாகவும் இருந்தது. காற்று, கணுக்கால்களை சில்லென்றாக்கியது. மழை, வெளிப்புறத்து வாசல் வழியாக நிலவறையின் உள்ளே பொழிந்துகொண்டிருந்தது. ஏனெனில் அதன் கதவு அகலத் திறந்திருந்தது.

அதனுடைய உட்புறத் தாழ்பாள் சில சமயங்களில் சரியாகப் பூட்டாது என்பதை அவள் அறிவாள். அது சரியாக மூடப்படாதபட்சத்தில் காற்று அதை திறந்திருக்க வேண்டும். திறந்திருந்த கதவு அவளுள் பீதியை உண்டு பண்ணியது. ஆயினும் கடும் காற்றைவிட வேறெதற்கு முக்கியத்துவம் தர வேண்டும் என்பதையும் மனதில் இருத்திக்கொண்டாள். அவள் படிக்கட்டில் இறங்கி இருட்டில் இருந்த கதவுக் குமிழியைத் தேடுவதற்கு முன்னர் ஒரு நீண்ட நிமிடத்துக்கு நின்றாள்.

அந்த சில கணங்களில் அவள் முழுவதுமாக நனைந்து போனாள். அவளுடைய துழாவுகிற பார்வையில் வீட்டின் பக்கத்தில் வளர்ந்திருந்த காட்டு மரங்களைத் தவிர்த்து வேறொன்றும் தெரியவில்லை. கதவை நன்றாக மூட, காற்று உதவி புரிந்தது. அவள் தாழ்பாளை நன்றாகப் போட்டுவிட்டு அது சரியாக உள்ளதா என்று சோதித்தாள். அதன்பின் இனி யாரும்

உள்ளே வர முடியாது என ஆறுதல் அடைந்தாள்.

ஈர ஆடைகள் ஒட்டிக்கொண்டிருந்த உடலோடு நின்று இருந்தவளின் நினைப்பில் திடீரென ஓர் எண்ணம் தோன்ற அவளுடைய எலும்புகளெல்லாம் கரைந்து டுவது போலாயின. ஒருவேளை ஜன்னலில் தெரிந்த அந்த முகம் நிஜமாக இருக்கலாம். அந்த முகத்துக்குச் சொந்தக்காரன் இந்தக் கால் மைல் தூரத்தில் இருந்த ஒரே ஒரு இடத்தைப் புகலிடமாக அடைந்திருக்கலாம் - அதாவது இந்த நிலவறை.

உடனே அவள் தடதடவெனப் படிகளில் தாவினாள். ஆனால், பிறகு பழைய உறுதியை அடைந்தாள். அவள் தன்னைத்தானே கைவிட்டுவிடக் கூடாது. இதற்கு முன்னர் எவ்வளவோ முறை புயல் வீசியிருக்கிறது. ஆனால், இம்முறை அடிக்கும் புயலில் அவள் தனியாக இருக்கும் ஒரே காரணத்தால் பைத்தியக்காரத்தனமான கற்பனையை ஆக்கிரமிக்க விடக் கூடாது. ஆனால், அவளால் சுமையாக அழுத்திய அந்தக் காரணமற்ற பயத்தை விரட்ட முடியவில்லை. இருந்தாலும் அதைச் சற்று விரட்டினாள்.

அப்போது வீட்டுக்கு வெளியே காலடிச் சப்தம் திரும்பவும் கேட்டது. அது கற்பனைதான் என்பதை அறிந்திருந்தாலும் அவ்வோசை பயங்கரமான அளவுக்கு நிஜமாக இருந்தது. சரளைக் கல்லின் மேல் நடப்பதால் எழும் நறநறப்பு. காவலாளியின் ரோந்து போலிருந்தது. அவள் கொஞ்சம் விறகுகளை மட்டும் எடுத்துக்கொண்டால் போதும். அதன் பின் கணப்பில் நெருப்பெரிய விடலாம். வெளிச்சமும், வெப்பமும், ஆசுவாசமும் கிடைக்கும். பிறகு அவள் இந்தத் திகிலை மறந்து விடலாம்.

நிலவறை தூசியில், ஈரக் கசிவின் நாற்றமடித்தது. தூண்களில் சிலந்தி வலை மூடியிருந்தன. அங்கே மூலையில் ஒரே ஒரு மங்கலான விளக்கு மட்டுமே இருந்தது. சுவரிலிருந்து மழை நீர் கறுப்பான சிற்றாராக ஓடித் தரையில் ஓரடிக்கு குட்டையாகத் தேங்கியிருந்தது.

விறகுக் குவியல் குவிந்திருந்த இடத்திலிருந்து தள்ளி எதிர் மூலையிலிருந்து அவள் சற்றே நின்று சுற்றிலும் ஊன்றிப் பார்த்தாள். இவ்விடத்தில் ஒருவரும் ஒளிய முடியாது. நிலவறை அமைப்பு மிகவும் விசாலமாக இருக்க, தாங்கு கம்புகள்,

ஒருவனை ஒளிக்க முடியாத அளவுக்கு மெலிதாக இருந்தன.

திடீரென கையிலிருந்த காடா விளக்கு சட்டென அணைந்துபோனது. அது எரிந்துகொண்டிருந்த சப்தம், ஒரு மனிதனின் துணையைப்போல் தன்னுடன் இவ்வளவு நேரம் இருந்ததை அவள் உணர்ந்தாள். இப்போது கீழே, இந்த இடத்தில் புயலின் சீற்றத்தைத் தவிர வேறொன்றும் அவளுடன் இல்லை.

அவள் விறகுக் குவியலை நோக்கிக் கிட்டத்தட்ட ஓடினாள். ஆனால், அவள் விறகுகளைக் குனிந்து எடுக்கும் முன்னர், ஏதோ ஒன்று அவளை நிற்கச் செய்தது. திரும்பினாள்.

என்னது அது? ஏதோ சப்தமல்ல. அவள் தூசு படர்ந்த தரை மீது விரைந்தபோது ஏதோ ஒன்றைப் பார்த்துவிட்டாள். ஏதோ ஒன்று வித்தியாசமானது.

அவள் பார்வையால் சுற்றிலும் துழாவினாள். அவள் பார்த்தது வரக் கூடாத இடத்திலிருந்து வந்த ஒரு ஒளிக் கீற்று.

காரணமில்லாத பயம் ஒன்று அவளுடைய இதயத்தைக் கவ்வியது. அவளுடைய விழிகள் பயந்த மானுடையதைப்போல் வட்டமாக, அகலமாக விரிந்தன. அவளருகே இருந்த அவளுடைய பழையப் பெட்டி சற்றே திறந்திருந்தது. அந்தத் திறப்பிலிருந்து பிரதிபலித்த ஒளிதான் நிலவறையின் அரை இருட்டை துளைத்துக்கொண்டிருந்தது.

அவள் வசியப்பட்டப் பெண்ணைப்போல் அதை நோக்கி நடந்தாள். மேஜையில் கிடந்த காகித உறை, ஜன்னலில் தெரிந்த முகம், திறந்திருந்த நிலவறைக் கதவு இவற்றோடு சேர்த்து இதுவும் காரணமற்றதாகத்தான் இருக்கும். பீதியில் கவலைகொள்ள ஒரு காரணமும் இல்லை.

ஆயினும் அவள் பெட்டியை மூடியிருந்தாளே! அதோடு தாழ்பாளும் போட்டிருந்தாள் என்பதை நிச்சயமாக உணர்ந்தாள். அவள் இந்த அளவு நம்பிக்கையுடன் நினைவுகூர்ந்ததன் காரணம், இரண்டு அல்லது மூன்று கோட்டுகளை செய்தித்தாளில் சுற்றிப் பூச்சித் தொல்லைக்காக அப்பெட்டியில் போட்டு அழுத்தமாக மூடியிருந்ததுதான். இப்போது பெட்டியின் முடி ஓர் அங்குல தூரத்துக்கு உயர்ந்திருந்தது. மேலும் அதனுள்ளிருந்து ஒளி இன்னும் வந்துகொண்டிருந்தது.

அவள் மூடியைத் திறந்தாள். அவள் நெடு நேரம் அவ்விடத்தில் நின்று அப்பெட்டியைப் பார்த்தபடி நிற்க, அதனுள் இருந்த சங்கதியின் எல்லா விவரங்களும் ஒரு திரைப்படச் சித்திரம்போல் அவளுடைய மூளையில் பதிவாயின. அதன் ஒவ்வொரு சிறு விவரமும் அழிக்க முடியாதபடி, தெளிவாக, எப்போதுமே மறக்க முடியாத அளவுக்கு இருந்தன.

அந்தக் கணத்தில் அவளால் உடலின் ஒரு பகுதியைக்கூட அசைக்க முடியவில்லை. பயங்கரம் ஒரு கறுப்புத் திரையாகி அவள் மேல் விழுந்து, மூச்சை நிறுத்தி, உடலை உதற வைத்தது.

அதன்பின் அவளுடைய முகம் உணர்ச்சி அற்றதாகியது. பெட்டியின் மூடியைத் தடாலென்று அறைந்து சாத்திவிட்டு பைத்தியம் பிடித்தாற்போல் படிகளில் ஏறினாள். பின் ஆழமாக மூச்சை இழுத்தாள். நுரையீரலே கிழிந்துவிடும் படியான தேம்பலை வெளிப்படுத்தினாள். அவள் நிலவறையின் மேல் கதவை வீடே கிடுகிடுக்கும்படியான அளவில் அறைந்து சாத்தினாள். பிறகு பூட்டில் சாவியைத் திருப்பினாள். பலமாக மூச்சிரைத்தபடி சமையலறை மேஜையருகே இருந்த ஒரு பலமான காட்டுமர நாற்காலியை எடுத்து, நிலவறைக் கதவின் குமிழ் திரும்பாத வண்ணம் முட்டுக் கொடுத்தாள்.

பற்களால் நாய் எலியைக் குதறுவதுபோல் அந்த வீட்டைக் காற்று துன்புறுத்தியது.

அவளுள் பிறந்த முதல் உத்வேகமே அந்த வீட்டிலிருந்து வெளியேறுவதுதான். ஆனால், அவள் பிரதானக் கதவை நோக்கி நடந்த அந்த சமயத்தில் ஜன்னலில் தெரிந்த முகத்தை ஞாபகப்படுத்திக்கொண்டாள்.

ஒருவேளை அது அவளுடைய கற்பனையாக இராமல் நிஜத்தில் ஒரு கொலையாளியின் முகமாக இருக்கலாம் - வெளியில் வீசும் புயலில் அவளுக்காகக் காத்திருக்கும் கொலையாளி - அந்த இருளில் அவள் மேல் பாயப் பதுங்கியிருக்கும் கொலையாளி.

அவள் பெரிய ஒரு நாற்காலியில் தொப்பென்று வீழ்ந்தாள். கன்னாபின்னாவென்று முறுக்கிக்கொண்டிருந்த உடல் உதறிக்கொண்டிருந்தது. அவளால் இங்கே தங்க முடியாது. அவளுடைய பெட்டிக்குள் இருக்கும் அதனுடன் இருந்தாலும்

இங்கிருந்து போகக் கூடாது என்ற தைரியத்தில் இருந்தாள். அவளுடைய மொத்த உயிரும் பென்னுக்காகக் கூவியது. என்ன செய்வதென்று அவனுக்குத் தெரியும். அவள் கண்களை மூடி, பிறகு திறந்து அவற்றை அழுத்தமாகத் தேய்த்தாள். அந்தக் காட்சி திராவகத்தில் ஊறியதைப்போல் இன்னும்கூட மூளையைத் தீய்த்துக்கொண்டிருந்தது. அவளுடைய தலை முடி பிரிந்து மென்மையான கற்றைகளாக நெற்றியில் புரள, உதடுகள் பீதியில் காய்ந்திருந்தது.

அவளுடைய பழைய பெட்டியில் மடக்கிவைக்கப்பட்ட ஒரு பெண்ணின் உடல் இருந்தது.

அவள் அவ்வுடலின் முகத்தைப் பார்க்கவில்லை. தலை குப்புறக் கவிழ்க்கப்பட்டு அதன் மேலே அலை அலையாக தலை முடி மூடியிருந்தது. அந்தப் பெண் ஒரு சிவப்பு உடையை அணிந்திருந்தாள். ஒரு கை பெட்டியின் விளிம்பருகே இருக்க, அதன் மூன்றாவது விரலில் ஒரு ஆணின் மோதிரம் இருந்தது. அது ஒரு முத்திரை மோதிரம். அதில் பாய்கிற சிங்கத்தின் உருவமும் அதன் கால்களின் பிடியில் ஒரு வைரமும் இருந்தன. அந்த வைரந்தான் விளக்கொளியைப் பிடித்துவிட்டிருக்கிறது. மூலையிலிருந்த சின்னஞ்சிறு மின்சார விளக்கு அந்த இருட்டிலும் மோதிரத்தைக் கலங்கரை விளக்கம்போல் மின்னச் செய்திருக்கிறது.

அவள் அதை மறக்கவே முடியாது. அந்தப் பெண் தோன்றிய விதத்தை மறக்கவே முடியாது - அவள் கைகளின் வெளுத்த, பளப்பளப்பான சதைத் திரட்சி, பெட்டியை முட்டுக் கொடுத்தாற்போல் மடங்கியிருந்த கால் முட்டிகள், அதை மூடியிருந்த துணியின் மெல்லிய பளபளப்பு, முகத்தை தழுவியிருந்த மெல்லிய மயிரிழைகள்.

மெல்லிய உதறல் அவளை, தொடர்ந்து கிடுகிடுக்கச் செய்தது. தன்னுடைய நாக்கைக் கடித்துக்கொண்டாள். பிறகு பற்கள் கிடுகிடுக்காதிருக்க கையால் முகவாயை அழுத்திப் பிடித்துக்கொண்டாள். வாயில் ஊறிய ரத்தத்தின் உப்புச் சுவை அவளை சற்று நிலைகொள்ளச் செய்தது. அச்சமயம் அவள் அறிவுபூர்வமாக யோசிப்பதற்கு போராடினாள். இருந்தாலும் கொலை செய்யப்பட்ட பெண்ணின் உடலோடு தானும் உள்ள

சூழ்நிலையின் நினைப்பு, ஒரு ஆயுதம்போல் நாடி நரம்புகளைத் தாக்கியது.

அவள் கோட்டை இன்னும் இறுக்கிக்கொண்டு, அகலாத குளிரை அகற்ற முயன்றாள். அப்போது மெல்ல மெல்ல ஒரு கொலையின், மரணத்தின் சாதாரண நிகழ்வைத் தாண்டி வேறொரு விஷயம் அவளுடைய மனதுக்குள் ஊடுருவியது. இந்த நிகழ்வின் தொடர்ச்சியாக வேறு என்னவெல்லாம் நடக்கும் என்பதை அவள் மெல்ல மெல்லப் புரிந்துகொண்டாள். நிலவறையில் கிடக்கும் சவம் தனிப்பட்ட ஒரு சங்கதியில்லை. அது கண்டுபிடிக்கப்பட்ட நொடி முதல் வேறு பல விஷயங்களும் நடக்கும்.

காவல் துறையை சேர்ந்தவர்கள் வருவார்கள்.

காவல் துறை ஆள் என்ற நினைப்பு முதலில் ஆறுதலை தந்தது. வாட்டசாட்டமாக பிரவுன் நிறத்தில் நீலச் சீருடை அணிந்த ஒருவன் அவள் நிலவறையில் உள்ளதை அப்புறப்படுத்திவிடுவான். அதன்பின் அவள் அதைப் பற்றி நினைக்கவே தேவையில்லை.

பிறகுதான் அது அவளுடைய நிலவறை - அவளுடையதும் பெண்ணுடையதுமான நிலவறை என்ற நிஜம் உறைத்தது மற்றும் காவலர்கள் சந்தேகப்படுவார்கள்; துருவுவார்கள். அவள்தான் அப்பெண்ணைக் கொலை செய்துவிட்டதாக நினைப்பார்கள். அவள் இதற்கு முன்பு அப்பெண்ணை பார்த்ததே இல்லை என்று நம்ப வைக்க இயலுமா? அல்லது பென்தான் இக்காரியத்தை செய்திருப்பான் என அவர்கள் நினைக்கக்கூடும். வெள்ளை உறைகளில் வந்த கடிதங்கள், பென் வியாபாரத்துக்குப் போகாத சமயங்கள், அவள் தன் சகோதரியின் வீட்டுக்கு விஜயம் செய்தது, அதற்கு பென் செய்த அளவிட முடியாத உதவிகள் இவை எல்லாவற்றையும் அவர்கள் கூட்டிப் பார்த்து பென்னுக்கு இரட்டை ஆயுள் தண்டனை தந்துவிடுவார்களா?

அந்தப் பெண் கைவிடப்பட்ட வைப்பாட்டி. அவள் தொடர்ந்து கடிதங்கள் வழியாகத் தொல்லை தரவே, தாங்க முடியாத பென் அவளைக் கொலை செய்துவிட்டான் என்பதை அவர்கள் நிரூபிப்பார்களா? அப்படியெனில் அதுவொரு பிரமாதமான கற்பனை என்றுதான் கூற வேண்டும். இருந்தாலும் காவல்

துறையினர் அதை நிஜமாக்கி விடுவார்கள்.

அவர்கள் அதைச் செய்யக் கூடும்.

இப்போது புது பீதி ஒன்று அவளை ஆட்கொண்டது. நிலவறையில் இருக்கும் அந்த இறந்த பெண்ணின் பிணத்தை அப்புறப்படுத்தி வேறு எங்கேயாவது ஒளித்துவைக்க வேண்டும். பிறகு காவல் துறையினர் அந்தப் பெண்ணுக்கும் இந்த வீட்டுக்கும் தொடர்பு ஏற்படுத்த மாட்டார்கள்.

ஆனால், இறந்துபோனவள் அவளைவிடப் பெரிய உருவம் கொண்டவள். அவளால் அந்தச் சவத்தை அசைக்கக்கூட முடியாது.

இப்போது அவள் பென்னுக்காக உள்ளுக்குள் குமுறினாள். அவன் மட்டும் வீடு வந்துவிட்டால், வீடு வந்து அந்தச் சவத்தை அப்புறப்படுத்தி வேறு எங்கேயாவது மறைத்து விட்டால்... பிறகு காவல் துறையினர் இந்த வீட்டைக் கொலையோடு சம்பந்தப்படுத்த மாட்டார்கள். அதைச் செய்யக்கூடிய அளவுக்கு அவனிடம் பலம் இருந்தது.

அந்தப் பிணத்தை அப்புறப்படுத்தும் அளவுக்கு அவளிடம் சக்தி இருந்தாலும், செய்வதற்கு தைரியம்தான் இல்லை. காரணம் வீட்டுக்கு வெளியே - அது நிஜமோ கற்பனையோ - யாரோ ஒரு கொடியவன் உலவிக்கொண்டிருக்கிறான். நிலவறையின் கதவு தானாகத் திறந்திருக்காது. ஒருவேளை அது அப்படியே திறந்திருந்தாலும் கொலையாளி இதை ஒரு வாய்ப்பாக எடுத்துக்கொண்டு தன் குற்றத்தை அப்பாவி பென் மேல் செலுத்த இதைச் செய்திருக்கிறான்.

அவள் அங்கே கூனிக் குறுகியபடி வெடவெடத்தாள். ஏதோ ஒரு பெரிய பொறி அவளை முடக்கிவிட்டாற்போல் தோன்றியது. ஒரு பக்கம் புயலும் தொடர்பற்ற தொலை பேசியும், மறு பக்கம் வெளியே உலவும் கொடியவனும் பெட்டியிலிருக்கும் பிணமும் இவற்றுக்கு இடையில் அவள் மாட்டிக்கொண்டு ஏதும் செய்ய முடியாமல் தவிக்கிறாள்.

அவளுடைய நிராதரவான நிலையை ஒலிப்பதுபோல் காற்று பலமாக வீச, சாலையில் ஒரு மரம் தடாலென்று சாய்ந்தது. அப்போது கண்ணாடி நொறுங்கும் ஓசையைக் கேட்டாள்.

அவளுடைய குறுகிய உடல் இழுக்கப்பட்ட வில்போல் வளைத்துக்கொண்டது. அந்தக் கொலையாளி உள்ளே வர முயற்சிக்கிறானா? அவள் உடனே கஷ்டப்பட்டு எழுந்து, முதல் மாடியின் எல்லா ஜன்னல்களையும் சோதித்து மேலே இருந்த மற்றொன்றையும் சோதித்தாள். எல்லாமே சரியாகத் தான் இருந்தது. அடிக்கிற மழையை உறுதியுடன் தாங்கிக் கொண்டிருந்தன. நிலவறையின் உள்ளே ஏதேனும் நடக்கிறதா என்பதை சோதிக்க அவளுக்குத் தைரியமில்லை.

புயலின் ஓசை மற்றெல்லா சப்தங்களையும் அமுக்கி விட்டாலும் வீட்டை சுற்றிச் சுற்றி நடந்த காலடி ஓசை மற்றும் வெறித்த விழிகளை அவளால் மனதைவிட்டு விரட்ட முடியவில்லை.

அவள் ஜன்னல் திரைச்சீலைகளை இழுத்து மூடிவிட்டாள். இப்போது பாதுகாப்பு சற்று அதிகரித்திருப்பதுபோல் தோன்றியது. கண்ணாடி நொறுங்கிய ஓசை, ஏதோ மரக் கிளை நிலவறை ஜன்னலின் மேல் மோதியதால்தான் ஏற்பட்டது என்று தனக்குத்தானே சொல்லிக்கொண்டாள்.

எனினும் அவ்வெண்ணம் அவளை ஆசுவாசப்படுத்தவில்லை. அவளை இப்போது எதுவுமே தேற்ற முடியாது. பென்னுடைய சதைப்பற்றான தோளும் கைகளும் அவளை வளைப்பதைத் தவிர்த்து அந்த உடலை வீட்டிலிருந்து அப்புறப்படுத்துவதை நினைத்தாள்.

திடீரென ஒரு வித சோர்வு அவளை வியாபித்தது. பயம் கொள்வதற்கான சக்தியைக்கூட அவள் இழந்துவிட்டாற் போல, அவள் திரும்பவும் நாற்காலியில் ஏறி கண்ணை குறுக்கிக்கொண்டாள். அவள் பென்னுக்காக, பகல் வெளிச்சத்துக்காக மௌனமாகப் பிரார்த்தித்துக் கொண்டாள்.

மணி பன்னிரண்டரை ஆகிவிட்டதைக் கடிகாரம் சொல்லியது.

அடுத்த ஒரு மணி நேரத்துக்கு அவள் அதே இடத்தில் உடலைக் குறுக்கியபடி எதையும் யோசிக்காமல் பயங்கூட கொள்ளாமல் சோர்வுடன் இருந்தாள். அப்போது புயல் ஒரு விநாடி நேரம் தன் இயக்கத்தை நிறுத்தியபோது காலடி சப்தத்தைக் கேட்டாள். அந்த ஓசை உறுதியாக, விரைவாக, நடந்து வந்தது. வாயிற் கதவில் சாவி நுழைக்கப்பட்டு திருகியது.

உடனே கதவு திறக்கப்பட்டு பென் உள்ளே நுழைந்தான்.

அவன் ஈரம் சொட்ட சொட்ட அழுக்காக அதே நேரம் வெளுத்துப்போய் சக்தியெல்லாம் இழந்திருந்தான். ஆனால், அவன் பென்தான். அதை நிச்சயமாக உணர்ந்த அடுத்த நொடி அவள் பாய்ந்து சென்று அவனிடம் சங்கதியைச் சொன்னாள்.

அவன் அவளுடைய கன்னங்களை மென்மையாக முத்தமிட்டுவிட்டுத் தன் கழுத்திலிருந்த கைகளை விலக்கினான்.

"இதோ பார், நான் தொப்பலாக நனைந்துள்ளேன். நீயும் ஈரமாகிவிடுவாய்."

அவன் தன் மூக்குக் கண்ணாடியைக் கழற்றி அவளிடம் தர அவள் அதைத் துடைத்தாள். அவனுடைய கண்கள் விளக்கு ஒளியில் பாதி மூடிக் கிடந்தன.

"சாலை சந்திப்பிலிருந்து நடக்க வேண்டியிருந்தது. ஐயோ எப்படிப்பட்ட இரவு?"

அவன் ஆடைகளையும் ஷூக்களையும் அவிழ்த்தான்.

"வெளியிலிருந்து வெளிச்சம் நிறைந்த இடத்துக்குத் திரும்பவும் வருவது எப்படிப்பட்ட ஆனந்தத்தை தரும் என்பதை நீ அறியமாட்டாய், நான் திரும்பவும் வீடு வந்ததே பெரிய நிம்மதி."

நடந்ததைச் சொல்லத் தொடங்கினாள். ஆனால், அவளை இடைமறித்தான்.

"நீ ஏதோ கவலையில் ஆழ்ந்திருப்பதைத் தெரிந்து கொண்டேன், நான் வேறு ஆடை மாற்றும் வரை அமைதியுடன் இரு. நான் கீழே வந்த பிறகு எல்லாவற்றையும் சரி செய்துவிடலாம். அதற்கு முன்னர் சாப்பிடுவதற்கு கேக்கையும் காபியையும் தயார் செய். நான் ஒரு வழியாகி விட்டேன். இந்தப் பயணமே கனவு போலிருந்தது. சாலை சந்திப்பிலிருந்து நான் மீள்வேனா என்பதை நான் அறியவில்லை. அடேயப்பா, பல மணி நேரமாகப் போராடினேன்..."

அவன் களைப்புடன் இருப்பதாக அவள் கவலையுடன் நினைத்துக்கொண்டாள். இப்போது அவன் திரும்பி வந்து விட்டான். எனவே சற்று நேரம் பொறுமையுடன் இருக்கலாம். ஒரு பயங்கரக் கனவு போலிருந்த அந்த சில மணி நேரம்

இப்போது நிஜமற்றதாக தோன்றுவது வினோதமாக இருந்தது. இப்போது பென் இங்கிருக்க, சூழ்நிலை உற்சாகமாகிவிட, கடந்துபோன நேரம் கனவுதானா என்று சிந்திக்கத் தொடங்கினாள். அவள் அந்த சவத்தைத் தெளிவாக மனக் கண்ணால் பார்க்க முடிந்தால்கூட, அதுகூடக் கற்பனை தானோ என நினைத்தாள். ஒருவேளை புயல் ஒன்று மட்டுமே நிஜமாக இருக்கக்கூடும்.

அவள் சமையலறைக்குச் சென்று காபி போட்டாள். கதவின் மேலே முட்டுக் கொடுத்திருந்த காட்டு மர நாற்காலி அவளுடைய பயங்கரத்துக்கு சாட்சி கூறியது. இப்போது பென் வீட்டிலிருக்க அதன் சிறுபிள்ளைத்தனத்தில் வெட்கப்பட்டவள், நாற்காலியைத் தூக்கி அதன் பழைய இடத்தில் போட்டாள்.

காபி தயாராகும் முன்பே அவன் விரைந்து கீழே வந்து விட்டான். பழைய சாம்பல் வண்ண குளியல் உடையில் பாக்கெட்டுகளில் கைகளை நுழைத்தபடி வரும் அவனை மறுபடியும் காண எவ்வளவு ஆசையாக உள்ளது. அவன் மிக்க இயல்பாக, முரட்டுத் துண்டால் முகத்தைத் துடைத்த போது, சிவந்த வழுக்கைத் தலையில் ஈரமான முடிகள் முட்கள்போல் குத்திட்டு நின்றன. ஜன்னலில் தெரிந்த முகம், திறந்திருந்த கதவு, கடைசியில் பெட்டியில் இருந்த பிணம் இவை எல்லாவற்றையும் அவனிடம் சொன்னபோதே வெட்கத்தால் குறுகிவிட்டாள். ஆனால், அவற்றில் எதுவும் நிஜமில்லை என அக்கணத்தில் உணர்ந்துகொண்டாள்.

அதையே பென்னும் தயக்கமின்றிச் சொன்னான். அவன் எழுந்து வந்து அவளைத் தன் ஒரு கையில் அனைத்துக் கொண்டான்.

"சின்னக் குழந்தை போலாகிவிட்டாய். இந்தப் புயல் உன்னை மிகவும் பாதித்துவிட்டது. அதில் எனக்கொன்றும் ஆச்சர்யமில்லை, அதுதான் உன்னை இப்படியெல்லாம் பயமுறுத்தி இருக்க வேண்டும்."

அவள் பயத்துடன் சிரித்தாள்.

"ஆமாம் நீங்கள் சொல்வது சரிதான். அதேபோல் நான் நினைத்துக்கொண்டேன். இப்போது நீங்கள் வந்துவிட்டதால் எல்லாமே சரியாகிவிட்டன. ஆனால், பென் நீங்கள் அந்த

பெட்டிக்குள் பார்க்க வேண்டும். எனக்கு நிச்சயமாக தெரிந்தாக வேண்டும். இப்போதுகூட அவள் பளிச்சென்று தெரிகிறாள். அதுபோல் தெளிவான விஷயத்தை என்னால் கற்பனை செய்ய முடியுமா என்ன?"

உடனே அவன், "அது உன் பயத்தைப் போக்குமென்றால் நிச்சயமாகப் பார்க்கிறேன். இப்போதே செய்யப்போகிறேன். பிறகு நான் நிம்மதியாக காபி அருந்தலாம்."

அவன் நிலவறைக் கதவைத் திறந்து விளக்கைப் போட்டான். அவளுடைய இதயம் திரும்பவும் வேகமாக அடித்துக் கொண்டது. காதுகளில் பேரிடி உறுமியது. நிலவறையில் திறந்த கதவு, பயங்கரங்களின் முழு காட்சியையும் திரும்பவும் கொண்டு வந்துவிட்டது. பிணம், காவல் துறையினர், அவளையும் பென்னையும் பிடித்துப்போகும் பயம். உடலை மறைப்பது சட்டப்படி குற்றம்.

அவள் அதைக் கற்பனை செய்திருக்க முடியாது. தன்னுடைய மூளை இதுபோன்ற குழப்படிகளைச் செய்திருக்கிறதா என்று ஒரு கணம் குழம்பிவிட்டாள். எப்படியோ பென் அதை அறிந்துகொண்டுவிடுவான்.

பெட்டியின் மூடியை அவன் திறக்கும் ஓசையைக் கேட்டாள். அவள் நாற்காலியின் பின்புறத்தை இறுகப் பற்றியபடி அவனுடைய குரலுக்குக் காத்து நின்றாள். அடுத்த விநாடி அவன் குரல் கேட்டது. அவளால் நம்ப இயலவில்லை. அவனுடைய குரல் முன்பைவிட உற்சாகமாகவும் நம்பிக்கையுடனும் ஒலித்தது.

"இங்கே பெட்டியில் சில பண்டல்களைத் தவிர வேறொன்றும் இல்லை. வா, வந்து நீயே பார்."

ஒன்றுமேயில்லை?

அவள் படிக்கட்டில் இறங்கி நிலவறைக்குள் நுழைந்தபோதே கால் முட்டிகள் பலவீனமாகிவிட்டன. அங்கே அழுகலான வாடையும், ஈரமும், சிலந்திவலைகளும் பழையபடி இருந்தன. சுவரிலிருந்து இன்னும்கூட நீர் வழிந்துகொண்டிருந்தது. அதேசமயம் தரையிலிருந்த குட்டையின் அளவு கூடியிருந்தது. விளக்கு அதேபோல் மங்கலாக இருந்தது. உடைந்த ஜன்னலின் வழியே காற்று ஊதலுடன் வீச, மழை அதனுள்ளே சாரலிட்டது.

தரை மீது இருந்த கண்ணாடி சில்லுகளின் மேல் விழுவதைத் தவிர்த்து மற்றெல்லாமே பழையபடி இருந்தன. ஜன்னலின் ஊடே நீட்டிக்கொண்டிருந்த மரக் கிளை, சட்டத்தின் ஓரத்திலிருந்த கண்ணாடி மிச்சங்களை துப்புரவாகத் துடைத்துவிட்டிருந்தன. கூரான விளிம்புகள் ஒன்றுகூட இல்லை.



திறந்திருந்த பெட்டியருகே அவளுக்காகக் காத்துக்கொண்டு பென் நின்றிருந்தான். அவன் குண்டு உடல் அரண் போலிருந்தது.

"பார்! இதில் ஒன்றுமே இல்லை. உன்னுடைய பழைய உடைகள் மட்டுமே உள்ளன என நினைக்கிறேன்."

அவள் அவனுக்குப் பக்கத்தில் போய் நின்றாள். அவள் தன் சுய நினைவை இழந்துவிட்டாளா? இப்போது குறுக்கப்பட்ட அவ்வுடலை, சிவப்பு ஆடையை, மென்மையான பளப்பளப்பான முட்டிகளை பென் மட்டும் காண முடியாதபோது, அவள் மட்டும் பார்க்கப் போகிறாளா என்ன? மற்றும் சிங்கத்தின் கால்களில் உள்ள வைர மோதிரத்தை?

அவளுடைய கண்கள் மிக்க தயக்கத்துடன் பெட்டிக்குள் பார்த்தன. அது காலியாக இருந்தது.

அங்கே நேர்த்தியாக செய்திதாள்களால் கட்டப்பட்ட ஒரு சில பண்டல்கள் மட்டுமே இருந்தன. அவற்றை ஜாக்கிரதையாக பெட்டிக்குள், அடியில் எப்படி வைத்து இருந்தாளோ அப்படியே இருந்தன. அவற்றைத் தவிர்த்து வேறொன்றுமில்லை.

அவள் அப்பிணத்தைக் கற்பனையாகத்தான் பார்த்திருக்க வேண்டும். அந்த நினைப்பால் பாரம் இறங்கிய மனதுடன் இருந்த அவளை வேறொரு குழப்பமும் பயமும் பிடித்தது. அவளுடைய மனம் இதுபோன்ற குழப்பங்களை உருவாக்கினால், அவளால் பெட்டிக்குள் இருந்த பிணம்போல் ஒவ்வொரு விவரத்தையும் வெகு நுணுக்கமாக கற்பனையில் வடிக்கும் அளவுக்கு இருந்தால், எதிர்காலத்தின் நிலைமை பயங்கரமாகத் தெரிந்தது.

நிஜமான உடல்ரீதியான அபாயம் இல்லை. உண்மையிலேயே அவை இருந்ததே இல்லை. பென்னின் மேல் தொங்கிய சட்டத்தின்பிடி கனவாக மறைந்து விட்டது.

இவை எல்லாம் என்னுடைய கனவு என்று அவள் ஒப்புக்கொண்டாள்.

"இருந்தாலும் அவை பயங்கரமாக இருந்தது. மற்றும் நான் தூங்கவே இல்லை." அவளுடைய குரல் உடைந்துவிட்டது. "ஐயோ! பென்! நான் நினைத்தது என்னவென்றால்..."

"என்ன நினைத்தாய்?" அவனுடைய குரல் வித்தியாசமாக பழைய பென்னுடையதை போலின்றி வேறுவிதமாக ஒலித்தது. அதில் கொஞ்சம் குரூரமும் தென்பட்டது.

அவன் அசையாமல் பார்த்த பார்வை, அங்கே உடைந்த ஜன்னலின் ஊடே வீசிய காற்றைவிட அதிகமாக அவளை உறைய வைத்தது. அவள் அவன் முகத்தை கவனிக்க முயன்றாள். ஆனால், விளக்கிலிருந்து வீசிய வெளிச்சம் மிக குறைவாக இருந்தது. அந்த வெளிச்சம் அவன் உடல் விளிம்புகளை அகலமாகக் காட்டி, கொடூரமானவனாக அமைத்தது.

"நான்...", அவள் தடுமாற்றத்துடன் சொன்னாள்.

அவன் இன்னும்கூட அசையாமலிருக்கக் குரல் கடினப்பட்டது.

"நீ என்னவென்று நினைத்தாய்?" என்று கேட்டான் பென்.

அவள் சற்றே பின்வாங்கினாள்.

அப்போதுதான் அவன் சற்று நகர்ந்தான். அச்சமயம் தன் கைகளை பாக்கெட்டிலிருந்து எடுத்து அவளை நோக்கி நீட்டினான். அப்போது அவள் அந்தச் சங்கதியை வெறித்துப் பார்க்க, கூக்குரல் ஒன்று தொண்டையில் வெடித்தது.

அவனுடைய கரங்கள் அவளை அணைக்க வந்ததா அல்லது தொண்டையைப் பிடிக்க வந்ததா என்றெல்லாம் அவளுக்குத் தெரியாது. ஏனெனில் அவள் பீதியில் பைத்தியம் பிடித்தாற்போல் சட்டென்று திரும்பி படிக்கட்டுகளில் தடதடவென்று ஏறத் தொடங்கினாள்.

அவன், "ஜேனட், ஜேனட்" என்று கத்தினான். அவனுடைய காலடி ஓசை அவளுக்குப் பின்னே பலமாக ஒலித்தது. அவன் முதல் படியில் காலை வைத்தபோதே வழுக்கி விழுந்து தன்னைத்தானே திட்டிக்கொண்டான்.

பயம் அவளுக்கு வேகத்தையும் பலத்தையும் தந்தன. அவளுக்கு ஐயமேயில்லை. அவள் அதை ஒருமுறைதான் பார்த்திருந்தாள் என்றாலும் அவனுடைய இடது கை சுண்டு விரலில் அணிந்திருந்த மோதிரம், அந்தச் செத்தப் பெண்ணின் விரலில் இருந்ததுதான் என்பதில் அவளுக்கு சந்தேகம் இல்லை.

அந்த அதிர்ஷ்டக் காற்று சடாரென்று கதவைத் திறந்துவிட அவள் பாதுகாப்பான, இருளான, புயல் வீசிய வெளியில் ஓடி அடைக்கலமானாள்.

-மெக்னைட் மால்டர், 1944

# 4

## கிருகப்பிரவேசம்

ரயில் தாமதமாக வந்து சேர்ந்தது, நேரம் நிச்சயமாக ஒன்பதைத் தாண்டிவிட்டிருக்கும். அச்சமயம் ஹைடவர் ஸ்டேஷன் நடைமேடையில் தான் மட்டும் தனியாக நிற்பதை நடாலியா உணர்ந்தாள்.

அந்த ஸ்டேஷனுக்கு வெளியே நகரம் ஏதும் இல்லை ஆதலால் ரயில் நின்று உடனே புறப்பட்டுவிடும். தவிர இரவு நேரங்களில் ஸ்டேஷனையும் மூடிவிடுவார்கள். குழம்பிப் போன நடாலியாவுக்கு என்ன செய்வதன்றே தெரியவில்லை. டாக்டர் பிரேஸ்கிரேடில் அங்கு வந்து காத்திருப்பார் என அவளே முடிவு கட்டியிருந்தாள். அவள் லண்டனைவிட்டுப் புறப்படும் முன்னர், தான் வந்தடையப்போகும் நேரத்தைத் தன் மாமாவுக்கு தந்தி வாயிலாக அனுப்பியிருந்தாள். ஆனால், ரயில் தாமதமானதால் அவர் காத்திருந்துவிட்டுப் பின்னர் போய்விட்டிருக்கக்கூடும்.



ஒன்றும் புரியாமல் தத்தளித்த நடாலியா பார்வையைச் சுழற்றியபோது, சிக்கலுக்குத் தீர்வாக டெலிபோன் பூத் ஒன்றைக் கண்டாள். டாக்டர் பிரேஸ்கிரேடில் கடைசியாக எழுதிய கடிதம் பர்ஸில் இருந்தது. அதில் அவருடைய முகவரியும் தொலைபேசி எண்ணும் குறிக்கப்பட்டிருந்தன. அவள் பர்ஸைத் துழாவியபடியே டெலிபோன் பூத்தை அடைந்தபோது கடிதத்தைக் கண்டெடுத்துவிட்டாள்.

ஆனால், தொடர்பு அவ்வளவு சுலபமாகக் கிடைக்கவில்லை. ஆபரேட்டர் தொடர்பு நெடு நேரம் தொடர்புகொள்ள முடியவில்லை. அதன்பின் தொடர்ந்து மணி அடிக்கும் சப்தம் கேட்டது. டெலிபோன் பூத்தின் கண்ணாடிக் கதவின் வழியே தெரிந்த உயரமான மலைத் தொடர்ச்சி இடையூறுக்கான காரணத்தைச் சொல்லியது. 'என்ன செய்யறது, இந்த மேற்குப் பிரதேசம் கொஞ்சம்கூட டெவலப் ஆவாத சரியான நாட்டுப்புறம்' நடாலியா மனதுக்குள் முனகிக்கொண்டாள்.

"ஹலோ, ஹலோ"

திடீரென்று ஒரு பெண்ணின் குரல் லைனில் தொடர்ச்சியாக

ஒலிக்க ஆரம்பித்தது. அச்சமயம் இடையூறு ஏதுமில்லை. ஆனால், அக்குரலோடு சேர்ந்து வேறு பல குரல்கள் இரைச்சலாகக் கேட்டன. நடாலியா ரிசீவரை வாய்க்கருகே கொண்டுவந்து தெளிவாகப் பேசத் தொடங்கினாள்.

"நா நடாலியா பேசறன், அங்க டாக்டர் பிரேஸ்கிரேடில் இருக்கிறாரா?"

"நீங்க யாருன்னு சொன்னதா சொன்னீங்க?"

"நடாலியா" நடாலியா திரும்பவும் சொன்னாள். "நா அவரோட பேசணும் முடியுமா?"

"ஒரு நிமிஷம்."

சற்று நேரம் காத்திருந்தபோது முன்பு கேட்ட ஒலிகள் அதிகரித்தாற்போல் தோன்றியது. அதன்பின் நடாலியா தெளிவான ஆண் குரல்களைக் கேட்டாள்.

"ஹலோ நடாலியா, நாந்தான் டாக்டர் பிரேஸ்கிரேடில். வாட் ய சர்ப்ரைஸ்?"

"என்னது சர்ப்ரைஸா? இன்னிக்கு காலைலதானே லண்டன்லேர்ந்து தந்தி அனுப்பிச்சேன். அது கெடைக்கலியா?" நடாலியா தன்னுடைய பேச்சில் பொறுமை இன்மையை உணர்ந்தாள்.

"இந்த ஏரியால டெலிகிராஃப் சர்வீஸ் சரியா இல்லை" பிரேஸ்கிரேடில் மன்னிப்புக் கேட்கும் தொனியில் மெலிதாகச் சிரித்தபடி "ஆமா, நீ அனுப்புன தந்தி வந்து சேர்ல" என்றார். அவர் திரும்பவும் மெலிதாகச் சிரித்தார்.

"சரி, இப்ப நீ எங்க இருக்க?"

"ஹைடவர் ஸ்டேஷன்."

"ஐயய்யோ, அந்த எடம் இங்கேருந்து சரியா நேர் எதிர்ப் பக்கமாச்சே?"

"எதிர் பக்கத்துலயா?"

"ஆமா, நீ போன் பண்றதுக்கு முன்னாடியே பீட்டர்ஸ்பையிலிருந்து போன் வந்துடிச்சு. ஏதோ எழவெடுத்த அப்பெண்டிக்ஸ்ன்னு சொன்னாங்க. ஆனா அது சாதாரண வயித்து வலியாதான் இருக்கும், எப்படி இருந்தாலும் நா அங்க

போயே ஆவணும். பிராமிஸ் பண்ணி இருக்கேன்.”

“ஐயே! இது மாதிரி ஜெனரல் கேசுங்களை ட்ரீட் பண்றதா கதை உடாதீங்க.”

“எமர்ஜென்சி. இந்தப் பக்கத்துல டாக்டர்ங்க நெறைய பேர் இல்ல. தேங்க் காட், அதே மாதிரி நெறைய பேஷன்டும் இல்ல...” டாக்டர் திரும்பவும் சிரித்துவிட்டுச் சொன்னார். “சரி நீ ஸ்டேஷன்லதானே இருக்கிற. அந்த எடத்துக்கு மிஸ் பெட்ச்சை அனுப்பறன்... லக்கேஜ் ஜாஸ்தியா? இல்ல கம்மியா?”

“கையில ஒரே ஒரு பெட்டி மட்டுந்தான். மத்த லக்கேஜுங்க அப்புறமா போட்ல வரும்.”

“என்னது போட்லயா?”

“நா ஃபர்ஸ்ட்டு போட்ட லெட்டர்ல அதைப் பத்திச் சொல்லி இருந்தேன்.”

“சொல்லியிருப்பே. பரவாயில்லை, மிஸ் பிளம்மர் அங்க நேரா வந்துடுவாங்க.”

“நா ஸ்டேஷன் பிளாட்ஃபாரத்திலேயே வெயிட் பண்றேன்.”

“என்ன சொன்ன? சரியா கேக்கலை. கொஞ்சம் சத்தமா பேசு.”

“பிளாட்ஃபாரத்துலேயே நிக்கறதா சொன்னேன்.”

“ஓ! அப்படியா?” டாக்டர் பிரேஸ்கிரேடில் மறுபடியும் பழைய சிரிப்பை உதிர்த்தார். “இங்க பார்ட்டி ஒண்ணு நடந்துக்கிட்டிருக்கு. அதான் சரியா கேக்கலை.”

“அச்சச்சோ! சிவ பூஜைல கரடி மாதிரி வந்துட்டேனா? எதுக்கு கேக்கறேன்னா, நீங்க வேற என்னை எதிர்பாக்காத இந்த நேரத்துல...”

“அதெல்லாம் ஒரு பிரச்னையே இல்ல. அவங்க டக்குன்னு கெம்பிடுவாங்க. நீ பிளம்மர் வர வரைக்கும் வெயிட் பண்ணு.”

தொலைபேசியின் தொடர்பு துண்டிக்கப்பட நடாலியா நடைமேடைக்குத் திரும்பினாள். அவள் ஆச்சர்யப்படும் வகையில், மிகக் குறைந்த நேரத்தில் ஒரு கார் சாலையிலிருந்து வழுக்கிக்கொண்டே வந்து தண்டவாளத்தருகே நின்றது. அதிலிருந்து பெண்மணி ஒருத்தி கீழே இறங்கி நடாலியாவை அழைத்தாள். உயரமாகவும் வெளுத்த கேசமும் கொண்டிருந்த

அப்பெண் சற்றுக் கசங்கிப்போன சீருடையை அணிந்திருந்தாள்.

அவள் நடாலியாவின் பெட்டியை வாங்கிப் பின் சீட்டில் வைத்துவிட்டு, "நீங்க ஏறிட்டீங்கன்னா கெ□ம்ப வேண்டியது தான்" என்றாள்.

நடாலியா காருக்குள் அமரும் வரை பொறுமையின்றித் தவித்த அந்தப் பெண், அவள் ஏறியதும் படாரென்று கதவைச் சாத்திவிட்டு இன்ஜினை இயக்க வண்டி சாலையில் சீறியது. காரின் ஸ்பீடாமீட்டர் முள் நொடிகளில் எழுபதைத் தொட நடாலியா திடுக்கிட்டுப்போனாள். அதை மிஸ் பிளம்மர் கவனித்துவிட்டாள்.

"சாரி, டாக்டரைக் கூப்பிட்டு இருக்காங்க. நா டைமை வேஸ்ட் பண்ண முடியாது."

"யெஸ். வீட்ல கெஸ்ட்டுங்க வந்திருக்காங்க, இல்லை?"

"ஓ! டாக்டர் சொல்லிட்டாரா?" மிஸ் பிளம்மர் சாலை சந்திப்புகளில் ஸ்டீரிங்கை வேகமாகத் திருப்ப, டயர்கள் கிரீச்சிட்டன. நடாலியா சில விவகாரங்களை இப்போதே தெரிந்துகொள்ள வேண்டுமென்று தீர்மானித்தாள்.

"என்னோட மாமா என்ன மாதிரி டைப்புன்னு தெரியுமா?" நடாலியா பேச்சுக் கொடுத்தாள்.

"அடடா, இதுக்கு முன்னாடி அவரை நீங்க பாத்ததே இல்லையா?"

"இல்லை, நா சின்ன வயசா இருக்கறப்பவே எங்கம்மா, அப்பா ஆஸ்ட்ரேலியாவுக்குப் போயிட்டாங்க. நா இங்கிலாண்ட் வர்றது இதுதான் ஃபர்ஸ்ட் டைம். இன்னும் கரெக்டா சொன்னா கான்பெராவிலிருந்து வெளி வர்ற பர்ஸ்ட் டிராவலே இதான்."

"உங்களோட அம்மா, அப்பா..?"

"ரெண்டு மாசத்துக்கு முன்னாடி நடந்த ஆக்சிடென்ட்டுல மாட்டிக்கிட்டாங்க. அதைப் பத்தி டாக்டர் சொல்லலியா?" நடாலியா கேள்வி எழுப்பினாள்.

"சொல்லலைன்னு தோணுது. நா அவர்கிட்ட வேலைக்குச் சேந்து கொஞ்ச நாள்தான் ஆவுது..." மிஸ் பிளம்மர் சுருக்கமாக சொன்னபோது ஒரு திருப்பத்தில் கார் காட்டுத்தனமாக கிரீச்சிட்டது. "கார் ஆக்சிடென்ட்டுன்னா சொன்னீங்க? விவரம்

இல்லாதவங்க எதுக்கு கார் ஓட்டணும்னு டாக்டர் அடிக்கடி சொல்வாரு."

அவள் பக்கவாட்டில் தலையைத் திருப்பி நடாலியாவைத் துருவினாள். "நீ டாக்டர் வீட்ல பர்மனன்ட்டா செட்டில் ஆவப்போற, அப்படித்தானே?"

"ஆமா. அவரை என்னோட கார்டியனா போட்ட பிறகு லெட்டர் போட்டிருந்தாரு. அதுலேர்ந்து அவரு என்ன மாதிரி டைப்புன்னு யோசிச்டுக்கிட்டே இருக்கேன். ஆனா லெட்டர்லேர்ந்து அதைக் கண்டுபிடிக்கிறது ரொம்பக் கஷ்டம்."

அந்த மெலிந்த முகத்துக்காரி ஆமோதிக்கும் பாவனையில் மௌனமாகத் தலையசைக்க, நடாலியா உணர்வுகளை வெளிப்படுத்த வேண்டிய கட்டாயத்துக்கு ஆட்பட்டாள்.

"நெஜத்தை சொல்றதுன்னா எனக்கு ரொம்ப பயமா இருக்குதுங்க. இதுக்கு முன்னாடி நா, பைத்தியக்கார டாக்டர் ஒருத்தரைக்கூடப் பாத்தது இல்லை."

"இதுவரைக்கும் பாத்ததே இல்லியா?" மிஸ் பிளம்மர் தோள்களைக் குலுக்கினாள். "நீங்க அதிர்ஷ்டம் பண்ணவங்க. நா சில பேரைப் பாத்திருக்கேன். ஏதோ எங்களுக்கு மட்டுந்தான் எல்லாமே தெரியுங்கற மென்டாலிட்டி அவங்களுக்கு. ஆனா இவங்களோட கம்பேர் பண்ணா டாக்டர் பிரேஸ்கிரேடில் டபுள் ஓ.கே. அப்டி இப்டின்னு விட்டுக்கொடுப்பாரு."

"அவரு எப்பவுமே பிஸியா இருக்கறா மாதிரி தோணுது."

"ம். நோயாளிங்க நெறைய பேரு கெடைப்பாங்க. பணக்காரங்க." மிஸ் பிளம்மர் கருத்து சொன்னாள். "உங்களோட மாமா ஓஹோன்னு தொழில் நடத்திக்கிட்டு இருக்காரு. வீடு... காரு... அது சரி. எல்லாத்தையும் நீங்களே பாக்கப் போறீங்களே."

மறுபடியும் அந்தக் கார் வயிற்றைப் புரட்டும் திருப்பம் ஒன்றில் திரும்பி, இரும்பு கேட்டுக்கிடையே நீண்டிருந்த சாலையில் ஓடி, தூரத்தில் மரங்களுக்கு இடையே அமைந்திருந்த வீட்டை நெருங்கியது. வீட்டின் மூடப்பட்ட ஜன்னல்களின் இடுக்கு வழியே மங்கலான வெளிச்சக் கசிவைக் கவனித்த நடாலியா, "ஐயோ" என்று மெள்ள முணுமுணுத்தாள்.

"என்னாச்சு?"

“இன்னிக்கி சனிக்கிழமையும் அதுவுமா நடக்கற பார்ட்டில நா தொந்தரவா வந்துட்டேன்.”

“அதப்பத்திக் கவலைப்படாதீங்க” மிஸ் பிளம்மர் ஆறுதலாகச் சொன்னாள். “இங்க ஃபார்மாலிட்டிஸ் கெடையாது. நா வேலைக்கு சேரும்போது டாக்டரே என்கிட்ட சொன்னார்.”

மிஸ் பிளம்மர் இதைச் சொல்லும்போதே பிரேக்கை அழுத்த அந்த வண்டி ஒரு கறுப்பு நிற லிமொசின் காருக்குப் பின்னே நின்றது.

“ம், இறங்குங்க” சுறுசுறுப்பாகச் சொன்ன மிஸ் பிளம்மர் பின் சீட்டிலிருந்த லக்கேஜை எடுத்துக்கொண்டு படியேறினாள். பிறகு பாக்கெட்டுக்குள் கையைவிட்டுச் சாவியைத் தேடினாள்.

“கதவத் தட்றதுல பிரயோஜனமில்ல. அவங்க காதுல விழாது” மிஸ் பிளம்மர் கதவைத் திறந்தபடி கூறினாள். கதவு திறந்ததும் தொலைபேசியில் கேட்ட குரல்கள் இப்போது தெளிவாக ஒலித்தன. மிஸ் பிளம்மர் உள்ளே நுழைந்தாலும் நடாலியா வாசலில் தயங்கியபடி நின்றிருந்தாள்.

“வாங்க, வாங்க.”

நடாலியா உள்ளே நுழைந்ததும் மிஸ் பிளம்மர் கதவை மூடிவிட உட்புறத்துப் பிரகாசமான விளக்கொளிக்கு கண்களைப் பழக்கப்படுத்த இமைகளை மூடி மூடித் திறந்தாள்.

ஒரு நீண்ட, அதேசமயம் பெருமளவு இடம் காலியாக இருந்த ஹாலில் தான் இருப்பதை அவள் உணர்ந்தாள். அவளுக்கு நேர் எதிர்ப் பக்கத்தில் படிக்கட்டு மேலேறின. அதன் கைப்பிடிச் சுவரை ஒட்டினாற்போல் ஒரு மேஜையும் நாற்காலியும் இருந்தன. அவளுக்கு இடதுபுறம் கறுப்புக் கண்ணாடியிட்ட கதவு இருந்தது. அதில் ஒரு பித்தளைப் பட்டையில் டாக்டரின் பெயர் பொறிக்கப்பட்டிருந்ததால் அநேகமாக அது அவருடைய அலுவல் அறையாக இருக்குமென யூகித்தாள். வலது பக்கத்தில் பெரியதொரு மதுவருந்தும் அறை இருந்தது. அதன் ஜன்னல்களில் கனமான திரைச்சீலைகள் இருந்தன. சப்தம் அங்கிருந்துதான் வந்துகொண்டிருந்தன.

நடாலியா படிக்கட்டை நோக்கி நடந்தபோது ஒரு கணம் அந்த அறைக்குள் பார்வையை வீசினாள். அங்கே ஒரு பெரிய

மேஜையைச் சுற்றிப் பத்துப் பன்னிரண்டு பேர் அமர்ந்துகொண்டு, ஒருவருக்கொருவர் மிக நெருக்கமானவர்கள் போல் கைகளை ஆட்டியபடி பேசிக்கொண்டிருந்தார்கள். மேஜையின் மேலே உயர் ரக மது வகைகள் இருந்தன. அங்கே திடீரென சிரிப்பு வெடித்தது. யாரோ ஒரு விருந்தாளி டாக்டரின் உபசரிப்பைக் கேலி செய்திருக்கிறார்.

நடாலியா யாரும் தன்னை கவனித்துவிடக் கூடாது என்ற பதபதைப்பில் அறையை அவசரமாகக் கடந்தாள். அதேசமயம் தன்னுடைய பெட்டியை மிஸ் பிளம்மர் கொண்டுவருகிறாரா என்றறிய தலையைத் திருப்பினாள். மிஸ் பிளம்மர் வந்து கொண்டிருந்தாள். ஆனால், அவளுடைய கைகள் வெறுமனே இருந்தன. நடாலியா படிக்கட்டை நெருங்கியதும் மிஸ் பிளம்மர் தலையை ஆட்டினாள்.

"இப்ப நீங்க மேல போக வேணாம். கொஞ்சம் உள்ள வந்து உங்களை அறிமுகம் செஞ்சுக்குங்க. நா முதல்ல உங்க ரூமை அரேஞ்ச் பண்ணிடறேனே. ஏன்னா, நீங்க வர்றத பத்தி டாக்டர் சொல்லவே இல்லை."

"அதனால ஒரு பிரச்னையுமில்லை. நா முகத்த..."

"டாக்டர் எப்ப வேணுமுன்னாலும் வந்துடுவாரு. அந்த நேரத்தில நீங்க இருக்கணும்." மிஸ் பிளம்மர் சட்டென்று நடாலியாவின் கையைப் பற்றி, காரை வேகமாக ஓட்டியது போல் அவளைத் தரதரவென வெளிச்சம் நிறைந்த அறைக்குள் இழுத்துச் சென்றாள்.

"இவங்கதான் டாக்டரோட மருமக. மிஸ் நடாலியா ரிவர்ஸ். ஆஸ்திரேலியாவிலிருந்து வந்திருக்காங்க." மிஸ் பிளம்மர் அறிவித்தாள்.

அறைக்குள் நிகழ்ந்துகொண்டிருந்த உரையாடல்களின் ஒலிகளை அவளுடைய குரல் ஊடுருவ முடியாவிட்டாலும், சில தலைகள் நடாலியாவின் பக்கம் திரும்பின. சற்று தடியாகவும் குட்டையாகவும் அதேசமயம் ஜாலியாக இருந்த ஒருவர் நடாலியாவின் பக்கம் தாவி பாதி காலியான தம்ளரை ஆட்டினான்.

"ஆஸ்திரேலியாவிலிருந்து வந்திருக்கீங்க. அப்ப ரொம்ப தாகமாக இருப்பீங்க. இந்தா இதை வெச்சிக்குங்க. நா வேற

ஒண்ண எடுத்துக்கறேன்.” நடாலியா பதில் சொல்லுமுன் அவன் மேஜையருகே இருந்த கூட்டத்தில் கலந்து விட்டான்.

“இவன் மேஜர் ஹேமில்டன்,” மிஸ் பிளம்மர் அடிக் குரலில் பேசினாள், “போதை ஜாஸ்தியாப் போனாலும் அருமையான மனுஷன்.”

மிஸ் பிளம்மர் அப்பால் நகர்ந்துபோக நடாலியா ஒன்றும் புரியாமல் கையிலிருந்த டம்ளரைப் பார்த்தாள். அதை எங்கே வைப்பதென்றும் தெரியவில்லை.

“நா அதப் பாத்துக்கறேன்.” ஒருவன் முன்னே வந்து அவளுடைய கையிலிருந்த டம்ளரை வாங்கிக்கொண்டான். அவனுக்கு வெளுத்த தலை முடி, கறுப்பு மீசை. நல்ல உயரம். மொத்தத்தில் ஆளுமையான தோற்றம்.

“தேங்க்ஸ்.”

“பரவாயில்ல. மேஜரைக் கண்டுக்காதீங்க. பார்ட்டில இதெல்லாம் சகஜந்தான்.” அவன் தலையசைத்தபடி அறையின் மூலையில் அமர்ந்திருந்த ஒரு பெண்ணைச் சுட்டிக் காட்டினான். அவள் சிரித்துக்கொண்டே இருந்த மூன்று ஆண்களிடம் பேசிக்கொண்டிருந்தாள். “இதுவொரு ஃபேர்வெல் பார்ட்டி, அதனால...”



“நீங்க இங்கியா இருக்கீங்க... மேஜர் ஹேமில்டன்” என்று மிஸ் பிளம்மர் சொன்ன அந்தக் குள்ள மனிதன் திரும்பவும் நடாலியா

அருகே வந்தான். அவனுடைய கையில் வேறொரு டம்ளரும் செவ்வண்ண முகத்தில் சிரிப்பும் இருந்தன. "நா பூமராங் மாதிரி திரும்ப வந்துட்டேன்..." பிறகு அவன் வெடிச் சிரிப்பு ஒன்றை உதிர்த்துவிட்டு, "ஆஸ்திரேலியாவில் பூமராங்கப் பாத்திருப்பீங்க இல்ல? நாகூட கல்லிபோலில ஆஸ்திரேலியா ஆளுங்களப் பாத்திருக்கேன், ஆனா..."

"மேஜர் ப்ளீஸ்..." அந்த நெட்டை மனிதன் நடாலியாவைப் பார்த்தான். அவனுடைய தோற்றம் உறுதியாக இதற்கு முன்னர் எங்கோ பார்த்திருக்கும் நினைப்பைத் தந்தது. அட இதுக்கு முன்னாடி எப்படிப் பாத்திருக்க முடியும்? அவன் சற்று நகர்ந்து மேஜரின் கையிலிருந்த டம்ளரைப் பிடுங்கிக் கொண்டான்.

"தோ பாருங்க..." மேஜரின் வாயிலிருந்து எச்சில் தெறித்தது.

"நீங்க சாப்பிட்டது போதும். வெளில போற நேரம் வந்துடுச்சு."

"வெளில போறதுக்கு எக்ஸ்ட்ரா லார்ஜ் ஒண்ணும் வேணும்." மேஜர் சுற்றிலும் பார்வையை வீசிவிட்டு அனுமதி கேட்கிறதுபோல் கைகளை ஆட்டினார். "என்னைத் தவிர எல்லாருமே குடிக்கிறாங்க." அவர் டம்ளருக்காக முன்னோக்கிச் சாய அந்த நெட்டை மனிதன் அப்பால் நகர்ந்தான். பிறகு அவன் நடாலியாவைப் பார்த்துச் சிரித்துக் கொண்டே மேஜரைச் சற்றுத் தொலைவு நகர்த்திக்கொண்டு போய் காதுக்குள் ஏதோ சொல்ல மேஜர் எக்கச்சக்க போதையில் மிகைத்தனமாகத் தலையை ஆட்டினார்.

நடாலியா அறையைத் துருவிப் பார்த்தாள். பியானோ அருகில் முக்காலியின்மீது அமர்ந்திருந்த வயதான ஒரு பெண்மணியைத் தவிர வேறு யாருமே அவளை கவனிக்கவில்லை. அவள் நடாலியாவை ஆணியடித்தாற்போல் வெறிக்க, அந்தப் பார்வையை 'பார்ட்டிக்கு நீயொரு இடைஞ்சல்' எனத் தன்னைக் குற்றம் சுமத்துகிறாற்போல் நடாலியா உணர்ந்து அவசர அவசரமாகத் திரும்ப, மூலையில் அமர்ந்திருந்த அந்தப் பெண் திரும்பவும் பார்வையில் விழுந்தாள். அப்போது உடையை மாற்றும் எண்ணம் மேலோங்க வாசலுக்கு வந்து பிளம்மரைத் தேடினாள். ஆனால், அவளைக் காணோம்.

பிறகு ஹாலின் மத்தியில் நின்று படிக்கட்டைத் துருவியபடி "மிஸ் பிளம்மர்" என்று குரல் கொடுத்தாள். அதற்குப் பதில்

வரவில்லை.

அப்போது ஹாலிலிருந்த மற்றோர் அறைக் கதவு திறந்திருப்பதைக் கண்டாள். திடீரென்று கதவு அகலமாகத் திறக்கப்பட உள்ளிருந்து மிஸ் பிளம்மர் அவசர அவசரமாக வெளியே வந்தாள். அவளுடைய கையில் கத்தரிக்கோல் ஒன்று இருந்தது. நடாலியா குரலெழுப்பி அவளுடைய கவனத்தைக் கவரும் முன் மிஸ் பிளம்மர் ஹாலின் மறு கோடிக்குச் சென்றுவிட்டாள்.

‘இங்க எல்லாருமே கொஞ்சம் வித்தியாசமாதான் இருக்காங்க. ஆனா பார்ட்டின்னு வந்துட்டா அப்டித்தான் இருப்பாங்க’ நடாலியா தனக்குத்தானே பேசிக்கொண்டாள். அவள் மிஸ் பிளம்மரைத் தொடரும் நோக்கத்தில் படிக்கட்டை நோக்கி நடந்தாள். ஆனால், திறந்திருந்த அறையின் வாசலில் நின்றுவிட்டாள். தன் மாமனின் ஆலோசனை அறையை ஆர்வத்துடன் உற்றுப் பார்த்தாள். அது மிகவும் ஆடம்பரமாக இருந்தது. அலமாரிகளில் வரிசையாகப் புத்தகங்கள் அடுக்கப்பட்டிருந்தன. அவற்றுக்கு முன்னால் தோலால் உறையிடப்பட்ட சோபாக்கள் இருந்தன. அறையின் ஒரு முனையில் நோயாளிக்கான படுக்கையும் ஒரு பெரிய மேஜையும் இருந்தன. மேஜையின் மேலே ஒரு தொலை பேசியைத் தவிர வேறெதுவுமில்லை. அதிலிருந்து ஒரு மெல்லிய பிரவுன் நிற வயர் தொங்கிக்கொண்டிருந்தது.



தொங்கிக்கொண்டிருந்த வயர் நடாலியாவை ஏதோ செய்ய அவள் தன்னை அறியாமலேயே அறைக்குள் வந்து தொலைபேசியை உற்றுப் பார்த்தாள். அடுத்த விநாடி தன்னை சஞ்சலப்படுத்திய விஷயத்தை உணர்ந்துகொண்டாள். சுவரிலிருந்த இணைப்பிலிருந்து ஒயர் துண்டிக்கப் பட்டிருந்தது.

'மிஸ் பிளம்மர்' என்று முணுமுணுத்த நடாலியா அவளுடைய கையில் கத்தரிக்கோலிருந்ததை ஞாபகப்படுத்திக் கொண்டாள். ஆனால் எதற்காக அவள் இதைச் செய்ய வேண்டும்? திடீரென முதுகு குறுகுறுக்க சட்டென்று திரும்பிய நடாலியா நெட்டை மனிதன் நின்றிருப்பதைக் கண்டு திடுக்கிட்டுப்போனாள்.

அவன் நடாலியாவின் எண்ணங்களைப் பரிபூரணமாகப் படித்தவன்போல், "இது ஒரு ஃபேர்வெல் பார்ட்டின்னு சொன்னேன் இல்ல. அதனால போனுக்கு அவசியமில்ல." என்று சொல்லிவிட்டு மெலிதாகச் சிரித்தான்.

இந்த முறையும் அவனை முன்பே கண்டிருப்பது போன்ற நினைப்பு நடாலியாவுக்கு உண்டாகி உடனடியாக அதற்கான

காரணத்தையும் உணர்ந்தாள் - அவனுடைய சிரிப்பு. அதை டெலிபோனில் கேட்டிருக்கிறாள்.

உணர்ச்சிவசப்பட்ட நடாலியா, "என்ன வெளையாடறீங்க? நீங்கதானே டாக்டர் பிரேஸ்கிரேடில்" என்று வெடித்தாள்.

"இல்ல," அவன் தலையை ஆட்டியபடி அறைக்குள் நடந்தான். "விஷயம் என்னன்னா, நீ வரப்போறதப் பத்தி எங்களுக்குத் தெரியாது. நீ போன் பண்ணியபோது எல்லாருமே கிளம்பற ஸ்டேஜில் இருந்தோம்."

சில விநாடிகள் அமைதியாகக் கழிந்தன. பிறகு நடாலியா "அப்ப, என்னோட மாமா எங்கே?" என்று கேட்டாள்.

"அதோ! அங்க."

நடாலியா நோயாளியின் படுக்கைக்கும் சுவருக்குமிடையே இருந்த இடைவெளியில் விழுந்து கிடந்தவரைக் கண்டு தத்தளித்தாள்.

"கொஞ்சம் ஏடாகூடமா ஆயிடுச்சு. எதிர்பாராமக் கிடைச்ச சந்தர்ப்பம். அதுக்கு அப்புறமாத்தான் எல்லாரும் குடிக்க ஆரம்பிச்சாங்க" நெட்டையன் நிதானமாகச் சொன்னான்.

அவனுடைய குரல் அடங்க, திடுதிப்பென்று பார்ட்டி சப்தம் நின்றுபோனதை உணர்ந்த நடாலியா வாசலைப் பார்த்தபோது அவர்கள் எல்லோரும் அங்கே ஒன்று திரண்டு தன்னை வெறிப்பதை உணர்ந்தாள்.

திடீரென்று அந்தக் கும்பல் இரண்டு பக்கமாகப் பிரிய மிஸ் பிளம்மர் அறைக்குள் நுழைந்தாள். அவள் சீருடைக்கு மேலே பொருத்தமில்லாமல் கம்பளி கோட் ஒன்றை அணிந்திருந்தாள்.

"ஆ! ஐயய்யோ! அடிப்பட்டுக் கெடக்கிற டாக்டரப் பாத்துட்டீங்களா?"

நடாலியா தலையை அசைத்தவாறு ஒரு அடி முன்னோக்கி நடந்தாள். "இம்மீடியட்டா நீங்கதான் ஏதாவது பண்ணணும்."

"அது சரி, மத்தவங்கள நீங்க பாக்கணுமே - டாக்டரோட அசிஸ்டென்ட்டுங்க. எல்லாருமே மாடியில கெடக்கறாங்க. பாத்தீங்கன்னா பயந்துபோயிடுவீங்க" மிஸ் பிளம்மர் நிதானமாகச் சொன்னாள்.

இப்போது ஆண்களும் பெண்களும் அறைக்குள் நுழைந்து மிஸ் பிளம்மரின் பின்னே நின்றுகொண்டு தொடர்ந்து வெறித்தனர்.

நடாலியா அவர்களைப் பார்த்துக் கெஞ்சலாகச் "இந்த மாதிரி காரியத்தப் பண்ணவன் முழு பைத்தியமாத்தான் இருக்கணும். உடனே அவனைப் பைத்தியக்கார ஆஸ்பிட்டலுக்கு அனுப்பணும்" என்றாள்,

"கொழந்த மாதிரி உளறாதே," மிஸ் பிளம்மர் முணுமுணுத்த படி கதவைச் சாத்திப் பூட்டியதும் அவர்கள் முன்னே நகர்ந்தனர். மிஸ் பிளம்மர் தொடர்ந்து பேசினாள். "இந்த எடமே ஒரு பைத்தியக்கார ஆஸ்பத்திரிதான்."

-ராபர்ட் பிளாக், 1966

# 5

## கொலைக்கு ஒரு காரணம்

விளம்பரத் துறையில் அமர்ந்திருந்த அந்தப் பெண் என்னுடைய செய்தியைப் பார்த்துவிட்டு, பென்சிலை கடித்துக்கொண்டே என்னை நிச்சயமற்ற பார்வையால் பார்த்தாள்.

"இந்த விளம்பரத்தை எங்கள் நாளிதழில் போட வேண்டுமா?"

"ஆம். தவிர விளம்பரத்துக்கு பதில் ஏதேனும் வந்தால் அதற்கு பாக்ஸ் நம்பரையும் தர வேண்டும்."

ஹெரால்ட் ஜர்னலில் நான் தரவிருந்த விளம்பரத்தில் செய்தி இவ்வாறிருந்தது. 'உங்கள் திருமண வாழ்க்கையில் நம்பிக்கை இழந்துவிட்டீர்களா? அப்படியெனில் உங்கள் சிக்கல்களுக்கு நிரந்தரத் தீர்வு காணப்படும். உங்கள் கடிதத் தொடர்புகளின் ரகசியம் காக்கப்படும். எழுதுக' ஹெரால்ட் ஜர்னல் போஸ்ட் பாக்ஸ் எண்.




நான் அப்பெண்ணின் முகத்தில் தாண்டவமாடிய சந்தேக நிழலைப் பார்த்தேன். "ஏதேனும் தவறு நிகழ்ந்துவிட்டதா என்ன?"

பென்சில் மேலும் சில கடிகள் வாங்கியது. "நான் இங்கே புதிதாக வேலைக்குச் சேர்ந்திருக்கிறேன். இந்த நாளிதழின் கொள்கைகளும் எனக்குத் தெரியாது."

அவள் அந்த செக்ஷனில் சலனமற்று அமர்ந்திருந்த மிஸ்டர் வில்சனை அழைத்தாள். அவர் என்னுடைய விளம்பரத்தைப் படித்துவிட்டு நிமிர்ந்தார்.

"நீங்கள் வக்கீலா?"

"இல்லை."

"அதாவது நீங்கள் விவாகரத்தைத்தானே குறிப்பிடுகிறீர்கள்?"

"இல்லை."

அவர் தொண்டையை செருமிச் சரி செய்துகொண்டார். "நிரந்தரத் தீர்வு என சொல்லியிருக்கிறீரே அதற்கென்ன பொருள்?"

"அதன் பொருளை நான் கொடுத்திருக்கும் வாசகங்களே தீர்மானிக்கட்டும் என விட்டுவிட்டேன்."

இதையே பல பேரிடம் சொல்லி இறுதியில் ஜே.ஜி.பிங்க்ஹாம்

அறைக்கு அழைத்துச் செல்லப்பட்டேன். அவர்தான் விளம்பரத் துறையின் மேலாளர்.

என்னுடைய விளம்பர பேப்பர் அவர் மேஜையின் மேல் வைக்கப்பட்டிருந்தது. அவர் நேராக விஷயத்துக்கு வந்தார். "நான் திருப்திப்படும் அளவுக்கு நீங்கள் இந்த விளம்பரத்தை விளக்க வேண்டும். இல்லையெனில் எங்களுடைய நாளிதழ் இதை பிரசுரிக்காது."

நான் பெருமூச்செறிந்தேன். "நல்லது. என்னுடைய பெயர் ஜேம்ஸ் பர்கின்ஸன். பல்கலைக்கழகமொன்றில் ப்ரொஃபசராகப் பணியாற்றுகிறேன். என்னுடைய துறை மனோ தத்துவம் சம்பந்தப்பட்டது."

அவர் அந்த பேப்பரை சுட்டிக் காட்டினார். "ஆக உங்கள் துறை சம்பந்தப்பட்டதா அந்த விளம்பரம்?"

"ஆமாம். நான் ஒரு ஆராய்ச்சிக் கட்டுரையை எழுத ஆரம்பித்துள்ளேன். என்னுடைய சொந்தக் கருத்து என்னவென்றால், ஒவ்வொரு கணவனும் மனைவியும் அவர்களுடைய திருமண பந்தத்தால் பத்துத் தடவைகளாவது கொலை செய்யப்பட்டிருப்பார்கள். ஆனால், அதை ஒரே ஒரு உளவியல் கூறு தடுக்கிறது."

"அந்த உளவியல் கூறு, தாங்கள் மாட்டிக்கொள்வோம் என்ற பயந்தானே?"

"ஆம். அதுவும் ஒரு முக்கியக் காரணம். இருந்தாலும் நான் சொல்வதன் மையக் கருத்து என்னவென்றால் அக்காரியத்தை ஒருவர் தானாகவே செய்ய மாட்டார் என்பதே. அதே காரியத்தைச் செய்ய வேறொருவர் கிடைத்தர் என்றால் அப்போது மரணத்தின் எண்ணிக்கை அதிகரித்துவிடும்."

அவர் புருவத்தை உயர்த்தினார். "உண்மையில் நீங்கள் விளம்பரப்படுத்தப்போகும் இது கொலையைக் குறிக்கிறதா? மக்கள் எல்லோரும் இதற்கு பதிலளிக்க வேண்டுமா?"

"ஆமாம். மக்கள் எல்லோரும் இதுபோன்ற சிக்கலான விஷயங்களுக்கு எல்லாம் சட்டென செயல்படுகிறார்கள். உதாரணமாக சில வருடங்களுக்கு முன்னால் ஒரு தேசிய நாளிதழில் விளம்பரம் ஒன்று வந்திருந்தது.

உங்களின் கடைசி வாய்ப்பு இதுவே ஒரு டாலர் பணத்தை பாக்ஸ் எண் 107-க்கு அனுப்பவும். அவ்வளவுதான்! அதற்கு மேல் வேறொன்றுமில்லை. மொத்தத்தில் அவ்விளம்பரத்தில் என்ன செய்யப்போகிறோம் என்று சொல்லவில்லை. எனினும் ஆயிரக்கணக்கான வாசகர்கள் பணம் அனுப்பி வைத்தார்கள்!

குறிப்பாக நான் 'கொலை' என்ற வார்த்தைக்கு பதிலாக 'நிரந்தரத் தீர்வு' என்பதைப் பிரயோகம் செய்திருக்கிறேன். ஏனெனில் கொலை என்ற வார்த்தை மனம் பிறழ்ந்தவர்களைத் தவிர எல்லோரையும் அச்சுறுத்தும். நான் இந்த விளம்பரத்துக்கு இரு வகை பதில்களை எதிர்பார்க்கிறேன். முதல் வகை பதில், நானொரு வக்கீலென்றும் விவாகரத்து வழக்குகளில் சட்ட நுணுக்கங்களை அறிந்தவனென்றும் கருதி வரும் கடிதங்கள். இவை என்னுடைய நோக்கத்துக்கு இசைவாக இருக்காது. அதனால் அவற்றைத் தள்ளிவைத்துவிடுவேன்."

இவ்வளவு நேரம் நான் நின்றுக்கொண்டே பேசிக்கொண்டு இருந்தேன். ஆனால், இப்போது பிங்க்ஹாம் சுட்டிக்காட்டிய நாற்காலியில் அமர்ந்துகொண்டேன்.

"இரண்டாவது வகைக் கடிதங்கள் முதல் வகைக் கடிதங்களைப் போலவே இருக்கும், ஆனால், அதன் உள்ளடக்கத்தில் கொலை என்ற நோக்கம் பொதிந்திருக்கும். என்னால் அதைச் சுலபமாகக் கண்டறிந்துவிட முடியும். இந்த வகைக் கடிதங்களை எழுதுபவர்கள் நான் சொல்லியிருக்கும் 'நிரந்தரத் தீர்வு' என்பதற்குப் புதிதான அர்த்தத்தைக் கண்டறிந்திருப்பார்கள். அவர்கள், 'இது நடக்கக் கூடியதா? இந்த விளம்பரம் நான் நினைப்பதைத்தான் கூறுகிறதா?' என்றெல்லாம் யோசிப்பார்கள். அவர்கள் இதன் மேலே சற்றுக் கூடுதல் கவனம் செலுத்தி நான் சொல்ல வந்ததை யோசிப்பார்கள்."

பிங்க்ஹாம் சந்தேகத்துடன் பார்த்தார். "எல்லாம் சரிதான். ஆனால், அவர்கள் உண்மையில் நீங்கள் யார் என்று அறியும்போது அவர்களின் நிலை என்னவாகும்? வெட்கப்பட அல்லது வேதனையடைய மாட்டார்களா?"

"அவர்களின் உள்ளத்தில் உள்ளதை அறியும் வரை என் உண்மையான முகத்தைக் காட்டப்போவதில்லை. அவர்களை பொறுத்தவரை நான் காசுக்கு விலைபோகும் ஒரு

கொலைகாரன் அவ்வளவே."

பிங்க்ஹாம் நிமிட நேரம் வரை யோசித்தபின் தன் கழுத்தைத் தேய்த்துவிட்டுக் கொண்டார். "நல்லது நான் செய்யப்போவது சரியா என்று தெரியவில்லை. அதேசமயம் இந்த விவகாரத்தில் எனக்கும் ஒருவித ஆர்வம் வந்துவிட்டது. அதனால் இந்த விளம்பரத்தை ஏற்றுக்கொள்கிறேன். எவ்வளவு நாளைக்குப் போட வேண்டும்?"

"இன்று மட்டும் போட்டால் போதும்."

அவர் வேறு எதையோ யோசிக்கிறாற்போல் தோன்றியது. "நீங்களே நேரில் வந்து கடிதங்களைப் பெற்றுக்கொள்ளுமாறு கேட்கிறேன். ஏனெனில் யாராவது நிருபர் உங்களை பின் தொடரக்கூடும்."

அன்று மாலை ஹெரால்ட் ஜர்னலில் என்னுடைய விளம்பரம் வந்தது. அடுத்த நாள், பல்கலைக்கழகத்தில் கடைசி வகுப்பை நடத்திவிட்டு, நேராக பிங்க்ஹாம் அலுவலகஹ்துக்கு விரைந்தேன்.

பிங்க்ஹாம் அலுவலகத்தில் வேறோர் ஆஜானுபாகுவான மனிதரும் இருந்தார். பிங்க்ஹாம் அசெ கரியத்துடன் அவரை அறிமுகம் செய்து வைத்தார். "இவர்தான் சார்ஜன்ட் லார்சன். விளம்பரங்களைப் படிப்பது - குறிப்பாக பர்சனல் விளம்பரங்களை - இவர் வேலைகளில் ஒன்று. அதில் ஏதாவது சந்தேகத்துக்கு இடமிருந்தால் அதைத் துருவுவதுதான் இவர் வேலை."




"இதில் சந்தேகப்படுவதற்கு ஒன்றுமேயில்லை. இதை நீங்களே சார்ஜன்ட்டிடம் விளக்கியிருக்கலாம்" நான் உறுதியுடன் சொன்னேன்.

சார்ஜன்ட் லார்சன் இடைமறித்தார். "அவர் முன்னரே சொல்லிவிட்டார். எனினும் நானும் அதைப்பற்றித் தெரிந்து கொள்ள வேண்டும். உங்களுடைய பர்ஸைக் காட்டுகிறீர்களா? அதிலிருக்கும் பணத்தைச் சற்று வெளியில் எடுக்கவும்."

அவர் சொன்னதுபோல் செய்தேன். அவர் பர்ஸை ஆராய்ந்து பார்த்தார். "ம்! கம்பெனி பர்ஸை வைத்திருக்கிறீர்கள். முதலில் பல்கலைக்கழகத்துக்குச் சென்று நீங்கள் உண்மையில் ப்ரொஃபசர்தானா என்பதை அறிய வேண்டும்."

பிங்க்ஹாம் சில கடிதங்களை என்னிடம் தந்தார். "இவையெல்லாம் இன்று காலைதான் வந்தது."

மொத்தம் ஆறு கடிதங்கள் இருந்தன. எனக்குச் சற்று ஏமாற்றந்தான். அக்கடிதங்களை நான் சட்டைப் பையில்

வைப்பதை லார்சன் பார்த்துக்கொண்டிருந்தார்.

"கணவனையோ மனைவியையோ கொலை செய்ய வேண்டுமென்று அக்கடிதங்களை எழுதியிருப்பார்களா?"

"நான் இன்னும் படிக்கவில்லை. இருந்தாலும் அப்படித்தான் நம்புகிறேன்."

அவர் ஒரு கையை நீட்டினார். "கடிதங்களைத் தருகிறீர்களா?"

நான் அவருடைய வேண்டுகோளை ஏற்க மறுத்தேன். "நிச்சயமாக முடியாது. இவை யாவும் எனக்கு எழுதப்பட்டவை. அவை என் அந்தரங்க விஷயம்."

அவர் முகத்தில் எரிச்சல் தெரிந்தது. "ப்ரொஃபசர், ஒரு கொலையை தடுக்க வேண்டுமென்ற கடமை உணர்ச்சி உங்களுக்கு இல்லையா?

"நிச்சயமாக உள்ளது. என்னுடைய ஒட்டுமொத்த வேலையே அதை நோக்கித்தான் நகரும். ஆனால், என்ன நோய் என்று கண்டறிந்தால்தானே சிகிச்சை அளிக்க முடியும். அடுத்ததாக அவர்கள் யாரும் கொலை ஏதும் செய்யப் போவதில்லை. குறைந்தபட்சம் அதற்குத் தகுந்த நபர் கிடைக்க வேண்டும். அந்த நபர் நான்தான். என்னுடன் பேசுகிற வரை அவர்கள் சும்மா இருப்பார்கள் அல்லவா?"

சார்ஜன்ட் லார்சன் மிகுந்த தயக்கத்துக்குப் பிறகு நான் சொல்வதை ஒப்புக்கொண்டார். "ஆனால், நீங்கள் பேசி முடித்ததும் எனக்கு அந்த நபர்களின் முகவரி வேண்டும். எங்களுக்கு அவர்களின் நோக்கம் என்ன என்று தெரிந்தாக வேண்டும்."

இதற்கு நான் ஒப்புக்கொண்டேன். "இதுபோன்ற விஷயங்கள் எல்லாம் நம்பிக்கையின் அடிப்படையில்தான் நடக்கின்றன. உங்கள் நோக்கத்தை நான் தெளிவாகப் புரிந்து கொண்டேன். எனவே அவர்களின் உண்மையான நோக்கத்தைத் தெரிந்துகொண்டதும், அவர்களின் பெயர், முகவரிகள் உங்களுக்குக் கிடைக்கும்."

காரில் ஏறி வீட்டுக்கு வந்து, நூலகத்துக்குள் நுழைந்தபோது மனைவி டோரிஸ் என்னைத் தடுத்தாள். "இந்த வருஷம் விடுமுறைக்கு ஒரு சுற்றுலாவைப் பற்றி யோசித்தீர்களா?"

“இல்லை. நாம் இங்கேதான் இருக்கப்போகிறோம். ஏனெனில் புதிதாக ஓர் ஆராய்ச்சிக் கட்டுரையை எழுதப் போகிறேன்.”

அவள் மெலிதாகப் பெருமூச்சுவிட்டாள். “இதோ பாருங்கள்! நீங்கள் கடினமாக உழைக்கிறீர்கள். அதை ஈடுகட்டும் விதமாக ஒரு காரியம் செய்யலாம். ஒரு விளம்பரத்தைப் படித்தேன். அதாவது கப்பலொன்று உலகைச் சுற்றி வரப் போகிறது. இடங்கள் பெரும்பாலும் நிறைந்துவிட்டன. இன்னும் சில இடங்களே பாக்கி உள்ளன. நாம் அதில் பயணம் செய்தால் நன்றாக இருக்குமே?”

எனக்கோ கடிதங்களைப் படிக்க வேண்டுமே என்ற அவசரமிருந்தது. “டோரிஸ், எதற்காக நீ பயணம் செய்ய வேண்டும் என்கிறாய்?”

“புதிது புதிதான மனிதர்களைக் காண்பதற்கு.”

“அப்படியா? அடிப்படையில் எல்லா மனிதர்களும் உலகெங்கும் ஒன்றுபோல்தான் இருப்பார்கள். நான் சொல்வது சரிதானே?

“ம். சரிபோலத்தான் தோன்றுகிறது.”

“அப்படியென்றால் முன்னரே தெரிந்த விஷயத்தை அறிந்துகொள்ள ஏராளமான பணத்தையும் நேரத்தையும் எதற்காகச் செலவிட வேண்டும்?”

இவ்வாறு பதில் சொன்ன நான் நேராகப் படிக்கும் அறைக்கு சென்று ஆறு கடிதங்களையும் படித்தேன். அதில் நான்கு கடிதங்கள் முதலாவது பிரிவுக்குள் வந்துவிட்டேன். மீதம் இருந்த இரண்டில்தான் என் ஒட்டுமொத்த ஆர்வமும் இருந்தன.

முதலாவது கடிதத்தை மறுபடியும் படித்தேன்.

ஐயா,

ஹெரால்ட் ஜர்னல் நாளிதழில் இன்று மாலை வந்திருந்த உங்கள் விளம்பரத்தைப் பார்த்தேன். ‘நிரந்தரத் தீர்வு ’ - இந்தப் பதத்துக்குத் தாங்கள் கூறும் கருத்துதான் என்ன?

இதற்கு நீங்கள் பதில் கூற விரும்பினால் ஹெரால்ட் ஜர்னலில் கீழ்க்காணும் வாசகங்களை விளம்பரப்படுத்தவும். ‘தொலைந்துபோனது கோலி என்கிற நாய். ஆன் ரெகிஸ் என்ற நபருக்கு பதில் அனுப்பவும்.’

கடிதம் ஆங்கிலத்தில் இருக்க, கையெழுத்து இடப்படாமல் இருந்தது. தட்டச்சு செய்யப்பட்டிருந்த அந்தத் தாளை கவனமாகப் பார்த்தேன். இயந்திரத்தின் ரிப்பன் தேய்ந்து போய் எழுத்துக்கள் மங்கலாக இருந்தன.

இப்போது இரண்டாவது கடிதத்தை எடுத்தேன். அதுவும் தட்டச்சு செய்யப்பட்டு கையெழுத்திடப்படாமல் இருந்தது. கடிதம் மிகச் சுருக்கமாக இருந்தது.

மாக்ஸ் பார். இன்றிரவு 8.00 மணி. ஸ்காட்ச் விஸ்கியைப் பருகவும். வலதுபுற ஷூ லேஸை அவிழ்க்கவும்; பிறகு மீண்டும் கட்டி முடி போடவும்.

மிக எளிமையாகச் சொல்லப்பட்டிருந்த அவ்விளம்பரத்தை வியந்துவிட்டு அன்றிரவு அதில் குறிப்பிட்டிருந்த இடத்துக்குப் போகத் தீர்மானித்தேன்,

பின் போனை எடுத்து ஹெரால்ட் ஜர்னலைத் தொடர்பு கொண்டு, முதலாவதாகப் படித்த கடிதத்தில் கண்டிருந்த வாசகங்களை மறுநாள் நாளிதழில் போடும்படி பணித்தேன்.

நான் திரும்பவும் அக்கடிதத்தைப் படித்தேன். வாசகங்கள் அழுத்தந்திருத்தமாக இருந்தன. எந்த இடத்திலும் வார்த்தைகள் மங்கலாக இல்லை. நான் அசட்டுத்தனமாக சிரித்துக் கொண்டேன். இரவு உணவுக்குப் பின், ஓவர் கோட்டை அணிந்துகொண்டேன்.

"டோரிஸ் நான் யூனிவர்சிட்டிக்கு போகிறேன். கொஞ்சம் வேலை உள்ளது. எப்போது திரும்புவேன் என்றும் சொல்ல முடியாது"

"சரி, சரி. ஒரு நிமிஷம். தட்டச்சு இயந்திரத்தைச் சுத்தப்படுத்தி ரிப்பனையும் மாற்றிவிட்டேன். பார்த்தீர்களா?"

தொப்பியை அணிந்துகொள்ளும் விநாடி நேரத்துக்கு அமைதியாகிவிட்டேன். "எப்போது செய்தாய் அதை?"

"இன்று காலையில்தான்."

வீட்டைவிட்டுப் புறப்பட்டேன். வெளியில் மெதுவாக தூறல் பொழிந்துக்கொண்டிருந்தது.

பெரும்பாலான மக்களுக்குச் சரியாக எழுத வரவில்லை. தவிர தட்டச்சு இயந்திரத்தைச் சுத்தப்படுத்தி ரிப்பனை மாற்றிவிட்டு

மனம் குழம்பிய நிலையில் சாவியை நுழைத்துத் திருகினேன்.

மாக்ஸ் பாரை நோக்கிக் காரை ஓட்டினேன்

பாரை அடைந்ததும் காலி டூல்ஸ் ஒன்றை தேர்ந்தெடுத்து ஸ்காட்ச் விஸ்கியை ஆர்டர் செய்தேன். பிறகு வலதுபுற ஷூ லேசை அவிழ்த்து, பின் முடிச்சிட்டு யாரேனும் பார்க்கிறார்களா என்று பார்த்தேன். யாருமே பார்க்கவில்லை.

கடிகாரத்தை நோக்கினேன். மணி சரியாக எட்டைக் காட்டியது. அவன் அல்லது அவள் தாமதமாக வரக்கூடும்.

பத்து நிமிடம் கழித்து சராசரியான தோற்றம்கொண்ட மனிதன் ஒருவன் பாரில் நுழைந்தான். உடனே நான் விஸ்கியை குடித்து முடித்து, குரலைச் சரி செய்துகொண்டு மற்றொரு ஸ்காட்சை ஆர்டர் செய்தேன். ஷூ லேஸையும் கழற்றிப் பின் போட்டேன். ஆனால், புதிதாக வந்தவனோ இதைக் கண்டுகொள்ளவில்லை!

நான் பொறுமையாக அடுத்து வரும் நபருக்காகக் காத்திருந்தேன்.

மொத்தம் எட்டு பேர் வந்தனர். ஆனால், யாருமே என்னை கவனிக்கவில்லை. முயற்சியைக் கைவிட்டுவிடத் தீர்மானித்துக் கொண்டேன். தவிர ஷூ லேஸைக் கழற்றிக் கழற்றிப் போட்டதில் அவிழ்க்க முடியாதபடி முடிச்சிட்டுக் கொண்டது.

வீட்டில் நுழைந்தேன். டோரிஸ் மேல் மாடியில் தூங்குவது போல் தெரிந்தது. மாக்ஸ் பாரில் வாங்கிய பெரியதொரு உருளைக்கிழங்கு சிப்ஸ் பொட்டலம் இருந்தது. அதைத் தின்று முடித்து மாடிக்குச் சென்றேன். படியேறுவதில் கொஞ்சம் சிக்கலை உணர்ந்தேன்.

காலையில் எழுந்ததும் தலைவலி உயிரை வாங்கியது. எனக்கு உருளைக்கிழங்கு சிப்ஸ் ஆகாதென்பது தெரியும். ஒரு வழியாக ஷூ லேஸைக் கழற்றிவிட்டு, காலை உணவில் காபி மட்டுமே சாப்பிட்டேன்.

டோரியின் முகத்தின் கவலையின் சாயல் தோன்றியது "ஜுரமா?"

"இருக்கலாம்." காபியைக் குடித்து முடித்ததும் இரண்டு ஆஸ்பிரின் மாத்திரைகளைப் போட்டுக்கொண்டு வீட்டை விட்டுப்

புறப்பட்டேன்.

பல்கலைக்கழகத்தில் காலை வகுப்புகள் தலைவலியை அதிகப்படுத்தியது. இறுதியில் மதிய வேளை வந்ததும் ஆசுவாசமும் வந்தது.

கேன்டீனில் எதையோ ஒன்றைத் தின்று முடித்து வளாகத்தில் கொஞ்ச நேரம் நடந்தால் நன்றாக இருக்குமெனத் தோன்ற நடந்தேன். யூனியன் அருகே வந்து, பைப்பை வாயில் வைத்துக் கொளுத்தியபோது, நேர்த்தியாக உடை அணிந்த ஒருவன் என்னருகே வந்தான்.

அவன் மெலிதாகச் சிரித்தான். "இன்று காலை உங்கள் உடல் நலம் எப்படி இருந்தது?"

அவனை நான் இதற்கு முன்னால் பார்த்ததே இல்லை. தவிர என் உடல் நலத்தைப் பற்றி கேள்வி கேட்க அவனுக்கு அருகதையுமில்லை.

அவன் என் ஷூக்களை ஊன்றிப் பார்த்தான். "ம், ஷூ லேஸ் முடிச்சிடப்படாமல் உள்ளதே?"

நான் அவனையே வெறித்தேன். "நீங்கள்..? அதாவது நீங்கள் என்னை..?

அவன் தலையசைத்தான். "ஆம், நேற்றிரவு நான் மாக்ஸ் பாரில் அமர்ந்திருந்தேன்." எனக்கு சுர்ரென்று கோபம் தலைக்கேறியது.

"குறைந்தபட்சம் உருளைக்கிழங்கு சிப்ஸ் வாங்குவதற்கு முன்னால், நீங்கள் வந்திருக்கக் கூடாதா?"

"நான் மிகுந்த எச்சரிக்கை வாய்ந்தவன். தவிர இந்த விஷயமும் மிகுந்த கவனத்துடன் அணுக வேண்டியதாகும். சரி போகட்டும், அந்த நிரந்தரத் தீர்வு என்பதற்கு நீங்கள் என்ன விளக்கம் வைத்திருக்கிறீர்கள்?"

தலைக்கேறிய கோபம் இன்னும் இறங்கவில்லை "நீங்களே கூறுங்கள்."

அவன் லேசாகச் சிரித்தான். "கொலை?"

நான் சற்றுத் தாமதித்துவிட்டு, "மிக்க சரி" என்றேன்.

அவனுடைய கண்கள் என்னைத் துழாவின. "என்

மனைவியைக் கொலை செய்ய வேண்டும். அதற்கு எவ்வளவு பணம் கேட்பீர்கள்?"

நான் மனதுக்குள் கணக்குப் போட்டுப் பார்த்தேன். "பத்தாயிரம் டாலர் பணம்."

நான் சொன்ன அந்தப் பெருமளவு தொகை அவனை சஞ்சலப்படுத்தவே இல்லை. "இந்தக் கொலையை எப்படி செய்யப்போகிறீர்?"

"முதலில் நீங்கள் எங்கேயோ வெளியூர் சென்றிருப்பது போன்ற தோற்றத்தை ஏற்படுத்திவிட்டு, பின்பு ஒரு குறிப்பிட்ட சமயத்தில் உங்கள் மனைவியைச் சுட்டுவிடுவேன். இதனால் உங்கள் மீது போலிஸுக்கு சந்தேகம் ஏற்படாது."

அவன் தலையாட்டினான். "எளிமையான திட்டம். ஆக இது நடக்கும். அப்படித்தானே ப்ரொஃபசர் பர்கின்ஸன்."

என் மனதில் லேசான கவலை தோன்றியது. "என் பெயர் உங்களுக்கு எப்படித் தெரியும்?"

"நேற்றிரவு நீங்கள் வீட்டுக்குச் செல்லும்போதும், இன்று காலை யூனிவர்சிட்டிக்கு செல்லும்போதும் பின் தொடர்ந்தேன். ஏனெனில் நீங்கள் யார் எப்படிப்பட்டவர் எனக் கண்டுபிடிப்பதே என் தொழில். எப்படி இருந்தாலும், ப்ரோஃபசர், உங்கள் வேலையை வைத்துப் பார்க்கும்போது நீங்கள் தொழில் நிமித்தமாகவோ பொழுதுபோக்கவோ கொலை செய்யமாட்டீர்கள். அப்படித்தானே?

நான் விறைத்துவிட்டேன். "உங்கள் மனைவியைக் கொலை செய்ய வேண்டுமா? அல்லது வேண்டாமா?"

"எனக்குத் திருமணம் ஆகவில்லை. உங்கள் நோக்கந்தான் என்ன?"

"நோக்கமா? அது என் தொழில்!"

அவனுடைய கண்களில் மின்னல் வெளிச்சம் தெரிந்தது. "நான் போலீஸிடம் சொல்லப்போகிறேன். அவர்கள் இதுபோன்ற விஷயங்களில் ஆர்வமுடையவர்கள்."

"நான் போலீஸிடம் இதைப்பற்றித் தெரிவித்து விட்டேன்."

"அப்படியென்றால் இதுபற்றி நாளிதழ் நிருபர் யாரிடமாவது

சொல்லலாமா? அவர்களுக்கு இதுபோன்ற விஷயங்களென்றால் வெல்லம்.”

அவன் சொன்ன இவ்விஷயத்துக்கு அடிபணிந்து விட்டேன். நாளிதழில் இரண்டு வரி விளம்பரம் போடுவதற்கே தயங்கியவன், என்னைப்பற்றி கதை போடுவதற்கா ஒப்புக் கொள்வான். பிறகு என் ஆராய்ச்சி சோதனை எல்லாம் கவிழ்ந்துவிடும். எனக்குக் கடிதம்கூட எழுத மாட்டார்கள்.

அவன் திரும்பவும் கேட்டான். “என்ன சொல்கிறீர், நாளிதழுக்கு போக வேண்டுமா?”

நான் பெருமூச்செறிந்தேன். “வேண்டாம்.”

பக்கத்திலிருந்த பெஞ்சில் நாங்கள் அமர்ந்துகொள்ள, என் ஆராய்ச்சி விவரத்தை எல்லாம் அவனிடம் சொன்னேன். அவன் யோசித்தவாறு நான் சொல்வதை எல்லாம் காதில் வாங்கினான்.

“உங்கள் விளம்பரத்துக்கு கடிதங்கள் ஏதேனும் வந்ததா?”

“மொத்தம் ஆறு கடிதங்கள்.”

அவன் சில கணங்கள் அமைதியாக இருந்துவிட்டு, “ப்ரொஃபசர் பர்கின்ஸன் கடிதங்களைப் படித்து முடித்ததும், நீங்கள் சொன்னதுபோல் இரண்டாவது பிரிவில் வரும் பெயர்களையும் முகவரிகளையும் எனக்குத் தர முடியுமா?”

“ஏன், எதற்கு?”

“நீங்கள் தரும் ஒவ்வொரு பெயருக்கும் ஐந்நூறு டாலர் பணம் தருகிறேன், பிறகு அந்நபர்களிடம் நான் வியாபாரம் பேசுவேன்.”

என் மூளையில் ஏதோவொரு விஷயம் உறைத்தது. “அஞ்சு பெயர்களை நீங்கள் ஏன் கேட்கிறீர்கள்?”

அவன் உதடுகளில் சிரிப்பொன்று தோன்றி மறைந்தது “என்னுடைய தொழிலில் உள்ள கஷ்டமே சரியான வாடிக்கையாளரைக் கண்டுபிடிப்பது. ஆம், அதற்காக நான் விளம்பரமெல்லாம் செய்ய முடியாது. ஆனால், உங்களால் முடியும்.”

நான் சட்டென வாய் தவறிக் கேட்டுவிட்டேன். “உங்கள் தொழில் கொலை செய்வதா?”

“நாம் இதில் வரும் பணத்தைப் பங்கு போட்டுக் கொள்ளலாம்.

அதாவது நான் பெறும் பணத்தில் பதினைந்து சதவிகிதம் உங்களுக்கு. என்ன சொல்கிறீர்கள்?"

நான் சட்டென்று எழுந்துவிட்டேன். "இப்போது போலீஸை அணுகுவது என் முறை என்று நினைக்கிறேன்."

அவன் தோள்களை குலுக்கிக்கொண்டான். "உங்களால் ஒன்றும் நிரூபிக்க முடியாது. நமக்குள் பேச்சுவார்த்தை நடந்ததையே நான் மறுப்பேன். அதே சமயம் என்னுடைய பெயரோ விரல் ரேகையோ எந்தப் போலீஸ் பதிவிலும் இல்லை." அவனுடைய கண்கள் ஒளி வீசின. "நாம் எந்தளவு சம்பாதிக்க முடியும் என்பதை நீங்கள் நினைத்துப் பார்க்க வில்லை. உங்களுடைய ஆராய்ச்சி உங்கள் பகுதியிலேயே நிற்கத் தேவையில்லை. மாறாக இந்த நாடு முழுக்கப் பரவலாம். வரும் வாடிக்கையாளரின் எண்ணிக்கை புத்தகம் போடுமளவுக்கு விரியும். அதே சமயம் உங்களின் தொழிலே சட்டத்துக்குட்பட்டுத்தான் நடக்கும்."

"இல்லை. இது முடியாது."

அவன் அசைந்தே கொடுக்கவில்லை. "ப்ரொஃபசர் நீங்கள் யோசிப்பதற்கு நேரம் தருகிறேன். அதே சமயம் ஒன்றைக் கவனத்தில் கொள்ளுங்கள். உங்களைபோல் நூற்றுக்கணக்கான மனோதத்துவ நிபுணர்கள் உள்ளனர். ஒருவேளை அவர்களில் ஒருவர் என் தொழிலைப் பயன்படுத்திக்கொள்ளக் கூடும்!

அவன் எழுந்து, தெருவைக் கடந்து 1963 மாடல் ஸ்லீக் காரில் ஏறிப் பறந்தான்.

அன்றையக் கடைசி வகுப்பை எடுத்துவிட்டு, என்னுடைய 1946 மாடல் செடானில் ஏறி வீடு வந்தேன்.

டோரிஸ் என்னுடைய பழைய துணிகளைப் பிரித்துக் கொண்டிருந்தாள். "சர்ச்சில் விற்பனை செய்வதற்கு."

நான் அந்தத் துணிகளைப் பார்த்தேன். "என்னுடைய பிரவுன் கோட்டு அந்தக் குப்பையில் எப்படி வந்தது? அது நம் கல்யாணத்துக்காகத் தைத்தது."

"அது கிழிந்தேவிட்டது. அதன் மீது நீங்கள் இவ்வளவு ஆசை வைத்திருப்பீர்கள் என்று எனக்கு தெரியாது."

"நான் ஆசையேதும் வைக்கவில்லை. எனினும் அது

அணிந்துகொள்ளும் நிலையில்தான் உள்ளது. தயவுசெய்து பீரோவில் வை.”

“அப்படியே செய்கிறேன். இருந்தாலும் சடலத்தைப் புதைக்கும் முன் போடும் ஆடைதானா போயும் போயும் நம் திருமணத்துக்கு உங்களுக்குக் கிடைத்தது?”

அவள் பதிலைக் கேட்டு ஆடிப் போனேன். அவள் ஏன் அதுபோல் சொல்ல வேண்டும். திருமணமாவதற்கும்... புதைப்பதற்கும்...

நான் தோள்களைக் குலுக்கிக்கொண்டு படிப்பறைக்கு சென்றுவிட்டேன். அங்கே ஒரு வெள்ளைத்தாளை எடுத்தேன். அமெரிக்காவின் மொத்த ஜனத்தொகை தோராயமாக 18,60,00,000. அதில் சுமார் ஒரு லட்சம் பேருக்குத் தங்கள் திருமணத் துணையைத் தீர்த்துக்கட்ட விரும்பினால்..? இந்தக் கணக்கு கணவன் மனைவிக்கு மட்டும் அடங்கும்? அத்தை, சித்தப்பா, மாமன், தோழர்... ஆகியோரும் உள்ளனரே... ஒருவேளை தம் துணையைத் தீர்த்துக்கட்ட ஒருவர் பணம் தந்தால்? அப்போது ஒரு லட்சம் பேருக்கு மொத்தம் எவ்வளவு டாலர்? அடேயப்பா... அதில் பதினைந்து சதவிகிதம் எனக் கணக்குப் போட்டால், கிடைப்பது மொத்தம்...

சட்டென்று பேப்பரைக் கசக்கி விட்டெறிந்தேன். பின் என் படிப்பு சம்பந்தமான வேலையில் மூழ்கிவிட்டேன்.

வியாழக்கிழமை மதிய வேளையில் ஹெரால்ட் ஜர்னலுக்குச் சென்றேன். பெட்டி எண் 1183-ல் நாய் விளம்பரத்துக்கு ஒரு கடிதம் வந்திருந்தது.

கடிதத்தைப் பிரித்துப் படித்தேன்.

டியர் சார்

உங்களின் கோலி என்ற நாய் காணாமல்போன விளம்பரத்தைப் படித்தேன்.

இப்போது நாம் சந்திக்கலாம். ஜொல்ட் 27-வது தெரு முனையிலுள்ள லியோனி ரெஸ்ட்ரான்டில் நாம் வெள்ளிக்கிழமை இரவு 8.00 மணிக்குச் சந்திக்கலாம்.

நான் ரோஜா வண்ணத்தில் ஸ்கார்ஃப் அணிந்திருப்பேன். அதே சமயம் நீங்கள் பிரவுன் நிற சூட் அணிந்திருக்க வேண்டும். நான்

ரெகிஸ் என்பேன். பதிலுக்கு நீங்கள் கறுப்பு காலர் எனச் சொல்ல வேண்டும்.

அந்த வார்த்தைகளைத் திரும்பப் படித்தேன். கடிதம் எழுதியது பெண்ணென்று நிச்சயமாகத் தெரிந்தது. இந்த முறை தட்டச்சு இயந்திரத்தின் வார்த்தைகள் அழுத்தமாகவும் தெளிவாகவும் இருந்தன.

லியோனி ரெஸ்ட்ரான்ட்? ஆம், நானும் டோரிஸும் சென்ற வருடம் அங்கே சாப்பிட்டு இருக்கிறோம். ஒரு முறையோ இரண்டு முறையோ?

அந்தச் சம்பவத்தை நினைத்தபடியே காரை ஓட்டினேன். வீட்டுக்குள் நுழைந்ததும், "டோரிஸ்! நாம் வெளியில் சாப்பிட்டு வெகு நாட்களாகிவிட்டது. இந்த வெள்ளியன்று லியோனி ரெஸ்ட்ரான்ட்டுக்கு போகலாம். என்ன சரியா?" என்று கேட்டேன்.

பருவ இதழைப் படித்துக்கொண்டிருந்த அவள் நிமிர்ந்து பார்த்தாள். "சாரி டியர். அன்றிரவு உமன்ஸ் கிளப்பில் வேலை இருக்கிறது. இந்த வருடம் நான்தான் தலைமை வகிக்கப்போகிறேன் அதனால் நான் போயே ஆக வேண்டும். நிறுவனம் ஒன்றில் அதிகாரியாக வேலை செய்தால், பொறுப்புகளை ஏற்றுக்கொள்ள வேண்டும்; விடுப்பு எடுக்காமல் ஆஜராக வேண்டும்."

நான் தொப்பியைத் திரும்பவும் அணிந்துகொண்டேன். "சற்று தூரம் நடந்துவிட்டு வருகிறேன்."

"இப்போதுதானே வந்தீர்கள்?"

"பரவாயில்லை, நடந்துவிட்டு வருகிறேன்."

வெளியில் இருட்டும் காற்றுமாக இருந்தது. டோரிஸ் ஏதேனும் விளையாட்டு காட்டுகிறாளா? ஆனால், என்னுடைய ப்ராஜக்ட் பற்றி அவளுக்கு என்ன தெரியும்? ஒரு காரியத்தை நடத்தி முடிக்கும் வரை யாரிடமும் அதைபற்றி வாயைத் திறக்க மாட்டேனே! ஒருவேளை அவளுக்குத் தெரியுமா? அல்லது டோரிஸ்தான் என்னை தீர்த்துக்கட்ட முடிவு செய்துவிட்டாளா?

எங்களுக்குத் திருமணமாகி பத்து வருடங்கள் ஆகிவிட்டன. இந்த வருடங்கள் யாவும் அமைதியாகவும் சந்தோஷமாகவும் கழிந்தன என்றுதான் சொல்ல வேண்டும். அவளுடைய தந்தை

ஒரு ப்ரொஃபசர். தாயாரும் உயிரியல் துறையில் பேராசிரியை. தாயாரின் சுற்றுச் சூழல் சம்பந்தமான கண்டுபிடிப்பு இன்னும் பிரசித்தம்.

டோரிஸை வற்புறுத்தி அவள் மனதில் உள்ளதைக் கேட்கலாமா?

இல்லை, கூடாது என்று தலையசைத்துக்கொண்டேன். அவள் அந்த அளவுக்கு போகிறவளா என்பதை நானே கண்டுபிடிக்க வேண்டும்.

லியோனி ரெஸ்ட்ரான்ட்டில் அவளைச் சந்திக்கும்போது, அடையாளம் தெரியாமல் இருக்க அடர்ந்த தாடி ஒன்று வைத்துக்கொள்ளலாமா? நாடகத் துறை ப்ரொஃபசர் திபிரையை சந்தித்துக் கேட்டால் இதைப்பற்றி அவர் ஏதேனும் கூறுவார்.

ஒரு நீண்ட ஊர்வலம் என்னைச் சற்று நேரம் தாமதிக்கச் செய்து, பின்னர் கடந்து சென்றது. அப்போது முன்பே என்னைச் சந்திருந்த அந்த உயரமான கொலைகாரன் காரிலிருந்து இறங்கினான்.

"ப்ரொஃபசர் நான் சொன்னதை ஏற்றுக்கொண்டீர்கள் அப்படித்தானே?"

என் மனதில் புதிய எண்ணம் பரவியிருந்தது. மனிதர்கள் எதற்காகக் கொலை செய்கிறார்கள்? ஆம், பணத்துக்காக மற்றும் தன்னைத் தற்காத்துக்கொள்வதற்காக.

இந்த யோசனையால் என் கண்கள் விரிந்தன. டோரிஸ் என்னைக் கொல்வதற்கு முன்னால் நான் அவளைக் கொலை செய்துவிட்டால், நீதி நியாயம் என் பக்கம் நிற்குமா? இந்த வேலைக்கு யாரேனும் கூலிப்படையை ஏவலாமா? இதோ என் முன் நிற்கும் இம்மனிதனைபோல்? நான் கண்களை மூடி என்னுள் உதித்த கொந்தளிப்பான உணர்ச்சிகளுடன் ஒரு நிமிடத்துக்கு சண்டையிட்டேன்.

இல்லை. டோரிசை என்னால் கொல்ல முடியாது. அவளைத் திருமணம் செய்தது நல்லதோ கெட்டதோ தெரியாது. ஆனால், இந்தச் செயல் மிகவும் கீழ்த் தரமானது.

"ப்ரொஃபசர், என்ன, என்னோடு சேர்ந்து வேலை செய்ய சம்மதமா?"

நான் கண்களைத் திறந்து அவனைப் பார்த்தேன். "இல்லை எனக்குத் துளிகூட ஆர்வமில்லை."

அவன் தலையைச் சாய்த்துக்கொண்டு, பத்து விநாடிகளுக்கு என்னையே பார்த்தான். பிறகு தன் கோட் பாக்கெட்டில் கையை நுழைத்து விசிட்டிங் கார்ட் ஒன்றை எடுத்து நீட்டினான். "நான் மேலும் ஒரு நாளைக்கு வெஸ்ட்லேண்ட் ஹோட்டலில் தங்க உத்தேசம் கொண்டுள்ளேன். அதே சமயம் உங்களுக்கு ஒரு விஷயத்தை சொல்ல கடமைப்பட்டு இருக்கிறேன். நான் வழங்கப்போகும் இந்தச் சந்தர்ப்பத்தை வேறு மனோதத்துவ நிபுணர்களும் விரும்புவார்கள். வணக்கம் வருகிறேன்."

"நன்றி. போய் வாருங்கள்."

காரின் பின்புற விளக்கொளி முனையில் சென்று மறைந்ததும் நான் விசிட்டிங் கார்டை எடுத்துக்கொண்டு, தெருவிளக்கை நோக்கிச் சென்றேன், அதில் பெயரைத் தவிர வேறெந்தத் தகவலும் இல்லை! சார்லஸ் ஏ ஹேஸ்கர், இது அவனுடைய நிஜப் பெயரா? இருந்தாலும் பரவாயில்லை சார்ஜன்ட் லார்சனிடம் இந்த சார்லஸைப் பற்றிச் சொல்லப் போகிறேன்.

அவனை பற்றி ஏதும் தெரியாத நிலையில், காவல் துறை ஒன்றுமே செய்ய முடியாது. எனினும் அவன் செய்யும் காரியத்தை அறிந்த பிறகு அவனைத் தொடர்ந்து கண்காணிக்கலாம்.

நான் வீட்டுக்குச் சென்றபோது, என் பக்கத்து வீட்டுக்காரர் ப்ரொஃபசர் கானர் சதுரங்கப் பலகையை வைத்துக்கொண்டு எனக்காகக் காத்துக்கொண்டிருந்தார்.

அவர் இங்கே எதற்காக வருகிறார் என்பதே தெரியாது. எங்களுக்குள் ஓர் ஒற்றுமை உள்ளது. ஆம், அவருடைய துறை உயிரியல். சதுரங்கத்தின் பொழுதுபோக்கு பற்றி நான் அவரிடம் நன்றாகவே உரையாடுவேன். அவ்வளவுதான்.

பதினோரு மணிக்கு டோரிஸ் தந்த இரண்டு சூரை மீன் துண்டுகளையும் ஒரு சாண்ட்விச்சையும் சாப்பிட்டுவிட்டு கிளம்பிப்போனார்.

வெள்ளிக்கிழமையன்று இரவு உணவுக்குப்பின் டோரிஸ் கிளப்புக்குப் போக மாடிக்கு சென்று உடை மாற்றிக் கொண்டாள்.

அவள் கீழே வந்தபோது ஏனோதானோவென்று கன்னத்தில் முத்தமிட்டாள்.

"திரும்ப நான் எப்போது வருவேனென்று தெரியாது. காஸ்ட்ரோவைப் பற்றி இன்றைக்கு உரையாடப் போகிறோம். அத்துடன் எத்தனை திட்டங்களை இன்று நிறைவேற்றப் போகிறார்களோ தெரியவில்லை."

நான் தெளிந்த மனதோடு கேட்டேன். "எடுத்துபோவதற்கு ஏதேனும் மறந்துவிட்டாயா? அதாவது ரோஜா நிற ஸ்கார்ஃப் போல?"

"அது கைப்பையில் உள்ளது. கிளப்புக்கு உங்கள் காரை கொண்டு போகட்டுமா?"

"ப்ரொஃபசர் பிரான்சன் மனைவியின் காரில் செல்லப் போவதாக நினைத்துக்கொண்டிருந்தேன்."

"வேண்டாமென்று சொல்லிவிட்டேன். சில விஷயங்களில் எனக்குச் சுதந்திரம் வேண்டும். பிறகு அவள் கிளம்பும் நேரத்துக்கெல்லாம் நானும் கிளம்ப வேண்டியிருக்கும்."

அவள் கிளம்பிப்போனதும் மேஜையை திறந்து ப்ரொஃபசர் தந்திருந்த மேக் அப் உபகரணங்களை எடுத்தேன். அவர் சொன்னது போலவே செய்து முகத்தை மாற்றிக்கொண்டேன். டோரிஸ் எதற்காக என்னைக் கொல்ல வேண்டும்? பணத்துக்காக? சொத்து மதிப்பே கொஞ்சம்தான்.

ஒருவேளை என் ஆயுட்கால இன்ஷூரன்ஸ் பணத்துக்காகவா? அதில் கொஞ்சம் நிறையவே வரும். எனினும் கொலை செய்யும் அளவுக்கு அல்ல. அல்லது அவளுடைய வாழ்வில் வேறு யாராவது ஆள் உள்ளானா? எனக்குச் சிரிப்புத்தான் வந்தது. நிச்சயமாக டோரிஸுக்கு அதுபோல் பழக்கம் கிடையாது.

ப்ரொஃபசர் கானர் திடீர் திடீரென்று வீட்டுக்கு வருவது ஏனாம்? உண்மையிலேயே அவருக்குச் சதுரங்கத்தில்தானா ஈடுபாடு? அவருக்கு ஏன் சூரை மீனை வறுத்துக் கொடுக்க வேண்டும். அது எனக்குப் பிடிக்கவே பிடிக்காது என்று டோரிஸுக்குத் தெரியும்.

கானருக்கு இன்னும் திருமணமாகவில்லை.

கண்ணாடியில் என் முகத்தைச் சரி பார்த்தபின் பச்சை நிறக் கண்ணாடியை அணிந்துகொண்டேன். பின் ஏறத்தாழ எட்டு

மணி அளவில் லியோனி ரெஸ்ட்ரான்டை அடைந்து, பிரவுன் நிற சூட் நன்கு தெரியுமளவுக்கு நின்று கொண்டேன்.

லியோனி ஆடம்பரமான ரெஸ்ட்ரான்ட். அங்கே பன்னிரண்டு மேஜை நாற்காலிகளும் அதே அளவுக்கு தனித் தனி அறைகளும் இருந்தன. அந்த இடத்தைச் சுற்றி என் கண்கள் சஞ்சரித்தன. யாரும் ரோஜா நிற ஸ்கார்ஃப் அணிந்திருக்கவில்லை. தனித் தனி அறைகளை நான் இன்னும் சோதித்துப் பார்க்கவில்லை. அந்த இடத்திலேயே ஐந்து நிமிடம் நின்றிருந்தேன். பிறகு அறைகளையும் பார்த்து விடலாம். என்று எண்ணியபோது இருபத்தைந்து வயதுள்ள ஒரு பெண் எழுந்து என்னை நோக்கி வந்தாள்.

அவள் படப்படப்பாக இருந்தாள். "ரெகிஸ்?" என்று கேட்டுவிட்டு என்னையே வெறித்தாள்.

ஒரு நொடி நேரம் கண்களை மூடித் திறந்தேன். "ஆனால், நீங்கள் ரோஸ் நிற ஸ்கார்ஃப் அணியவில்லையே?"

"இல்லை, அணிந்திருக்கிறேன்."

அப்போதுதான் எனக்குப் பச்சை நிற கூலிங்கிளாஸ் ஞாபகத்துக்கு வந்தது. மெலிதாக வெட்கப்பட்டுக்கொண்டே அதைக் கழற்றினேன். அப்போதுதான் அவள் ரோஜா நிற ஸ்கார்ஃப் அனிந்திருந்தது தெரிந்தது.

அதே சமயம் அவளை இதற்கு முன்னர் நான் பார்த்ததே இல்லை.

"பிளாக் காலர்" என்று மெதுவாகச் சொன்னேன்.

அவள் தன் மேஜைக்கு என்னை அழைத்துச் சென்று தன் கதையைச் சொன்னாள். அவளுக்குத் தன் கணவனைத் தீர்த்துக்கட்ட வேண்டுமாம். ஆனால், எதற்காக என்ற காரணத்தைச் சொலல்வில்லை. ஒருவேளை காரணம் பணமாகக்கூட இருக்கலாம்.

உடனே பத்தாயிரம் டாலர் செலவாகுமென நான் கூற அவள் அதற்கு ஒப்புக்கொண்டாள். விவரங்களைத் துல்லியமாக அலச மறு சந்திப்புக்கும் ஏற்பாடு செய்து கொண்டோம். ஆனால், அவளைத் திரும்ப சந்திக்கும் நோக்கமே என்னுள் இல்லை. மாறாக அவள் பெயரையும் முகவரியையும் சார்ஜன்ட்

லார்சனிடம் ஒப்படைக்கப் போகிறேன். அவர் அவளைப் பார்த்துக்கொள்ளட்டும்.

இதோடு சனியன் பிடித்த இந்த வேலைக்கு முடிவு கட்டிக் கொண்டு முன்பே தீர்மானித்தபடி மனிதர்களின் உள் மனதை மேன்மேலும் ஆராயலாம்.

பக்கத்திலிருந்த பார் ஒன்றுக்குச் சென்று ஸ்காட்ச் விஸ்கியையும் சோடாவையும் ஆர்டர் செய்தேன். ஒரு கணவன், மனைவி தனக்கு விசுவாசமாக இருக்கிறாள் என்று அறியும்போது ஒரு தேறுதல் கிடைக்குமே அந்த நிலைதான் எனக்கும் இப்போது கிடைத்திருக்கிறது.

மொத்தம் மூன்று பெக் விஸ்கி அடித்துவிட்டு இரவு 10.30-க்குக் கிளம்பினேன். என் வீட்டுக்கு செல்ல மூன்று மைல் உள்ளன. வானத்தில் நிலவு ஜொலிக்க, நான் நடந்து சென்றேன்.

தெருக்கள் எல்லாம் ஆளரவமற்று அமைதியுடன் இருக்க, காரொன்று என்னைக் கடந்து என் வீட்டுக்கு சற்று தள்ளி நின்றது.

அது என்னுடைய செடான் கார். ஒருவேளை டோரிஸ் கிளப்பிலிருந்து திரும்ப வந்திருப்பாள். இப்போது அந்தக் கார் சிவப்பு விளக்கெரிய நின்றுகொண்டிருந்தது.

ஆ! டோரிஸ் என்னைப் பார்த்துவிட்டு காத்திருக்கிறாள்.

அப்போதுதான் விஷயம் ஒன்று உறைத்தது. நான் மாறுவேடத்தில் இருப்பதை அவள் எப்படி அறிந்து கொண்டாள். அதுவும் நிலவு ஒளி வீசும் இந்த இருட்டில்?

என் நெற்றியில் சிந்தனையின் சுருக்கங்கள் தோன்ற காரை நெருங்கினேன். கார் கண்ணாடிக்குப்பின் தெரிந்தது மொத்தம் இரண்டு உருவங்கள். ஒன்று டோரிஸ், மற்றொன்று ப்ரொஃபசர் கானர்.

அந்த இரண்டு உருவங்களின் பார்வையும் நான் வெறிப்பதைக் கண்டு உனக்கு இங்கென்ன வேலை என்பது போல் பார்த்தன.

என் மனைவியின் குரல் கர்ண கடூரமாக ஒலித்தது. "என்ன மிஸ்டர்? வேறு வேலை இல்லையா?"

நான் அங்கிருந்து நகர்ந்தேன்.

சந்தின் முனையை அடைந்து சட்டென்று மறைந்து கொண்டு, நடப்பதை கவனித்தேன். அவர்கள் கட்டிப் பிடித்துக்கொண்டிருக்கிறார்கள். அதுவும் என் காரில்.

கைக் கடிகாரத்தை பார்த்தேன். பத்துப் பதினைந்து நிமிடங்கள் ஆனது. அவர்கள் இன்னும் விடுபடவில்லை. உடனே நான் எழுந்து அங்கிருந்த போன் பூத்துக்கு நடந்தேன்.

டோரிஸை நிரந்தரமாக முடிக்க ஹேஸ்கர் எவ்வளவு பணம் கேட்பான். கூடவே ப்ரொஃபசர் கானரையும்? கணிசமாகத்தான் கேட்பான். அதில் என்னுடைய பதினைந்து சதவிகிதம் கழிந்தால்கூட மிச்சம் அவ்வளவு பணத்தை என்னால் தர முடியுமா என்பது சந்தேகந்தான்.

அல்லது நானும் அவனும் இந்தத் தொழிலில் பார்ட்டனராகி விட்டால் ஒருவேளை ஒன்றுமே கேட்க மாட்டான்.

-கேக் ரிட்சி, 1963

# 6

## மேஜையின் அருகில் ஒரு பிணம்

பனிப் புயலடிக்கும் வேளையில் மலைமீது மாட்டிக்கொண்ட இரண்டு மனிதர்களின் கதையை முதன்முதலாகக் கேட்க நேர்ந்தபோது, அது அடிராண்டாக் பிரதேசத்தில் நிலவிவரும் நாட்டுப்புறக் கதையென்று நினைத்துக்கொண்டேன். மற்றும் முப்பத்தைந்து வருடங்களுக்கு முன் அச்சம்பவத்தைப் பின்புலமாக வைத்து, காலியர்ஸ் இதழில் சிறுகதை ஒன்றையும் எழுதினேன். அக்கால கட்டத்தில் இக்கதைக்குக் கருவாக வேறு ஏதேனும் உண்மைச் சம்பவங்கள் நிகழ்ந்திருக்கலாம் என்ற யூகத்தின் அடிப்படையில், நான் முதன்முதலாக அக்கதையைக் கேட்டறிந்த ஹாமில்டன் கல்லூரியில் என்னுடன் பணிபுரிந்த சக தோழர்களை விசாரித்தபோது பெரும்பாலோர் அதைப் பற்றி அறிந்திருந்தாலும் அதன் மூலத்தைப் பற்றிச் சொல்லவில்லை. ஆக அது உண்மை இல்லை. கற்பனையான நாட்டுப்புறக் கதையாக, காலத்தால் மறக்கப்பட்ட யாரோ ஒரு எழுத்தாளனால் எழுதி வைக்கப்பட்டதாகத்தான் இருக்கும். ஆனால், யார் அவர்? எங்கிருந்தார்?

அடிராண்டாக் பிரதேசத்து மத்தியில், இரண்டு நில அளவையாளர்கள் எவ்வித முன்னேற்பாடுமின்றி இருந்தபோது, அக்டோபர் மாதத்துப் பனிப் புயலில் மாட்டிக்கொண்டனர். அவர்களின் பெயர்கள் சார்லஸ் கார்னே மற்றும் ஸ்டீபன் எஸ்டெல்லோ என்பதாகும். அவர்கள் நீண்ட காலமாக ஒன்றாகப் பணிபுரிபவர்கள், தவிர நெருங்கிய தோழர்களும்கூட. கடுங் காற்றின் ஊடே நாளெல்லாம் தடுமாறியபடி நடந்துகொண்டிருந்தவர்களில் வலிமையும் இளமையும் கொண்ட எஸ்டெல்லோ, உடலாலும் மனதாலும் பலம் குன்றியிருந்த தன் தோழனைத் தாங்கிக் கொண்டிருந்தான்.

வெளிச்சம் குறைந்துகொண்டே வர எஸ்டெல்லோ நம்பிக்கை இழக்கத் தொடங்கிய வேளையில், அந்த மெலிதான இருளில் கோடு ஒன்று செல்வதைக் கண்டான்.

"கம்பி. தந்திக் கம்பி."

"ஆமாம், தந்திக் கம்பி. ஆனால், அது எங்கே போகிறது, நாம் இன்னும் எவ்வளவு தூரம் செல்ல வேண்டும்?"

கார்னே இருமிக்கொண்டே "இனிமேல் ஓரடிகூட எடுத்து வைக்க முடியாது. நான் இங்கேயே படுத்துத் தூங்கப் போகிறேன்" என்றான்.

"வேண்டாம், வேண்டாம். தூங்காதே" எஸ்டெல்லோவின் குரலில் கட்டளை தெரிந்தது. "இது, போன வசந்த காலத்தில் அரசாங்கத்தால் அமைக்கப்பட்ட, வடக்கு கிரீக்கின் தலைமை ரெயில்வேக்குச் செல்லும் தொடர்பாகத்தான் இருக்கும். நாம் செய்ய வேண்டியதெல்லாம் சற்று மேலேற வேண்டும், அவ்வளவுதான். ம், வா."

அவன் தன் தோழனை பலவந்தமாக இழுத்துக்கொண்டு காட்டினுள் புகுந்து அரை மணி நேரப் போராட்டத்துக்குப் பின் ஒரு சின்னஞ்சிறு குடிலை அடைந்தான். அவர்களை அதிர்ஷ்டம் கைவிடவில்லை. அலமாரியில் காய்ந்த சோளமும் புயலுக்குப் பயந்த ஒரு முள்ளம்பன்றி மரத்தின் உச்சியிலும் இருந்தன. எஸ்டெல்லோ கைத்துப்பாக்கியால் அதைச் சுட்டுக் கொன்றான். இனிமேல் பசி பட்டினியைப் பற்றிக் கவலைப்படத் தேவையில்லை. ஆனால், கார்னேவுக்கு உடல் நிலை சரியில்லாமல்போய் உடம்பு நெருப்பாகக் கொதித்தது. எஸ்டெல்லோ தன் நண்பனை உள் அறையில் படுக்க வைத்தான். ஸ்டவ்வைப் பற்றவைத்தான். பரவாயில்லை நாளைக் காலையில் அவன் தேறிவிடுவான்.

தந்தி இயந்திரம் சரியாகவே இயங்கியது. இரவு முழுக்க உடல் வலியால் அவதிப்பட்ட போதிலும், தள்ளாடியபடியே மேஜையை அடைந்த கார்னே அதை இயக்கிச் செய்தியை அனுப்பினான்.

வடக்கு கிரீக்கின் தந்தி அலுவலகத்தில் அமர்ந்திருந்த ஊழியன், ஆளரவமற்ற மலைப் பகுதியிலிருந்து வந்த செய்தியை முதல் தடவையாகக் கேட்டபோது, தனக்கு மூளைதான் குழம்பிவிட்டதோ என்று நினைத்துக்கொண்டான்.

வந்திருந்த தந்திச் செய்தி விட்டுவிட்டு இருந்தாலும் புரிந்து கொள்ளக்கூடியதாக இருந்தது. இரண்டு நபர்கள் மலை உச்சியில் தனியாக மாட்டிக்கொண்டிருக்கிறார்கள். அதில் ஒருவனுக்கு நிமோனியா ஜுரம். ஐயோ பாவம்! அவர்களைக் கடவுள்தான் காப்பாற்ற வேண்டும். மற்றபடி மனிதர்களால் முடியாது. அதுவும் இந்தச் சமயத்தில் நேரம் கழியக் கழிய பனிப் புயல் கடுமையாகிக்கொண்டே போனது.

இருபத்து நான்கு மணி நேரம் கழித்து மற்றொரு தந்தி இயந்திரம் கடகடத்தது. அந்தச் செய்தி தாறுமாறாக இருந்தது. அதாவது காட்டு விலங்குகளும் வெண்ணிற இறக்கைகள் கொண்ட தேவதைகளும் புயலின் ஊடே ஜொலிக்கும் விழிகள் கொண்ட பேய்களும் அவர்களுடைய குடிலை முற்றுகையிட்டுள்ளனவாம்.

எஸ்டெல்லோ பலவீனமடைந்து போயிருந்த தன் நண்பனைத் திரும்பவும் படுக்கையில் கிடத்தினான். ஆனால், அடுத்த நாள் காலையில் அவன் அவ்வப்போது மேஜையை நோக்கித் தவழ்ந்து சென்று இயந்திரத்தைத் தட்டிக்கொண்டு இருந்தான். எனினும் மேற்கொண்டு எந்தவொரு செய்தியும் வடக்கு கிரீக்குக்குப் போய்ச் சேரவே இல்லை. ஏனெனில் அடித்துக்கொண்டிருந்த பனிப் புயல் கம்பித் தொடர்பை அறுத்துவிட்டிருந்தன.

அன்று மாலை தன்னுடைய தோழனைப் படுக்கையில் கிடத்திய எஸ்டெல்லோ விறகு கொண்டுவர வெளியே சென்றான். திரும்பவும் அவன் உள்ளே வந்து பார்த்தபோது கார்னே தந்தியின் முன் அமர்ந்திருந்தான். அவனுடைய முகம் அமைதியுடனிருந்தது.

அந்த நோயாளி மெதுவான குரலில், "ஸ்டீவ், எனக்கு மரண வேளை வந்துவிட்டதாகத் தோன்றுகிறது, இருப்பினும் என்னைப் புதைப்பதற்கு முன், நான் செத்துவிட்டேனா என்று ஒரு தடவைக்கு இரண்டு தடவை நிச்சயம் செய்துகொள். ஏனெனில் அது மயக்க நிலையாகக்கூட இருக்கலாம், தயவுசெய்து என்னை உயிருடன் புதைத்துவிடாதே" கார்னேவின் கண்கள் எஸ்டெல்லோவை நோக்கி இறைஞ்சின. கிசுகிசுப்பாக ஒலித்து மெள்ளத் தேய்ந்துபோனது.

எஸ்டெல்லோவின் துக்கம் தோய்ந்த கண்களும் குரலும்

அவ்வாறே நடந்துகொள்வதாக உறுதி கூறின.

அடுத்து வந்த நாட்களில் நடந்த சம்பவங்களை ஒன்று விடாமல் எஸ்டெல்லோ தன்னுடைய நாட் குறிப்பேட்டில் குறித்துவைத்தான்.

அன்று மாலை முள்ளம்பன்றியின் மிச்சமிருந்த இறைச்சியை எஸ்டெல்லோ சமைத்துக்கொண்டிருந்தபோது, அவனுடைய நண்பன் படுக்கையிலிருந்து எழுந்து மேஜையருகே வந்து உயிரைவிட்டுவிட்டான். எஸ்டெல்லோ மூச்சு மற்றும் நாடித் துடிப்பை நன்றாகச் சோதித்தபின், அவன் இறந்துவிட்டதை ஊர்ஜிதம் செய்துகொண்டான்.

உயிர் போனபின் உடலில் ஏற்படும் விறைப்பும், அதை நிச்சயம் செய்தது. பிறகு அவன் நெருப்பைக் கிளறும் கருவியால் மலைச் சரிவில் குழி ஒன்றை வெட்டிப் பிணத்தை அதில் கிடத்திப் பிரார்த்தனை நடத்தியபின் பனியால் மூடிவிட்டான். அன்றிரவு அவனுக்குத் திகிலூட்டும் கனவுகள் பல வந்தன. இடையில் ஒருமுறை விழிப்புத் தட்டியபோது இதயம் உறைந்துபோனதையும் வேர்வைகூடச் சில்லென்று வழிவதையும் உணர்ந்தான்.

மறுநாள் காலை அவன் படுக்கையிலிருந்து கீழிறிங்கி அடுத்த அறைக்குச் சென்று நெருப்பு மூட்ட முனைந்தபோது மேஜையருகே அசையாமல் பேசாமல் வெறித்த விழிகளோடு சார்லஸ் கார்னே அமர்ந்திருப்பதைக் கண்டான்.



அன்று முழுவதும் அவனுடைய உணர்வுகள், நடந்த சம்பவத்தை நம்ப முடியாமல் அதே சமயம் திகிலால் பீடிக்கப்பட்டுக் குழம்பிப்போயிருக்க, எஸ்டெல்லோ அப்பிணத்தைத் தொட்டுக்கூடப் பாராமல், உணவு தேட வெளியே சென்றான். பிறகு இரவு வேளை நெருங்கியதும் தன் மனோதிடத்தை ஒன்று திரட்டி, சார்லஸ் கார்னேவின் உடலை அரைகுறையாக இருந்த குழியில் போட்டு மூடினான். அதன்பின் கைப்பெட்டியிலிருந்த அரை பாட்டில் பிராந்தியைக் குடித்துவிட்டுப் படுக்கையில் விழுந்தான்.

மறுநாள் காலை படுக்கையிலிருந்து எழுவதற்குக் கடும் முயற்சி தேவைப்பட்டது. பிறகு ஒருவழியாக எழுந்தவன், பிரதான அறைக்குச் செல்லும் கதவைத் திறக்கும் முன் ஒரு நிமிட நேரம் வரை உடல் உதற நின்றான்.

அதன்பின் வெளியே வந்த எஸ்டெல்லோ, முன்பு கண்டது போல் சார்லஸ் கார்னே மேஜையருகே அமர்ந்திருந்ததைக் கண்டான்.

‘என்னுடைய பிரக்ஞையை நான் கடைசி வரை இழக்க மாட்டேன். அதே சமயம், அவன் மற்றொரு முறை திரும்பவும் வந்தால், என்ன செய்ய வேண்டும் என்பதும் தெரியும்.’ இவ்வாறு எஸ்டெல்லோ தன்னுடைய குறிப்பேட்டில் எழுதி வைத்தான். பிறகு அன்று முழுவதும் காட்டில் அலைந்த அவன் தனக்குத்தானே தர்க்கித்துக்கொண்டிருந்தான். ஒருவேளை அதீதக் களைப்பால், அவனுடைய கண்களுக்குப் பொய்யான தோற்றங்கள் தெரிந்திருக்கலாம், ஆனால், சித்தம் கலங்கவில்லை. அது மட்டும் நிச்சயம். பிறகு எஸ்டெல்லோ குடிலை அடைந்து கதவைத் திறந்தான்.

அங்கே சார்லஸ் கார்னே அசையாமல் அமர்ந்திருந்தான்.

அன்று மாலை சார்லஸ் கார்னேவின் சவத்தை மூன்றாவது முறையாகப் புதைத்த எஸ்டெல்லோ படுக்கைக்குச் செல்ல பயந்தான். அவன் உறங்காமலிருக்கக் கடும் முயற்சி செய்தும், அளவில்லாச் சோர்வு அவனை ஆட்கொள்ள, தலை டேபிளின் மேலே முன்புறமாகத் தொங்கிவிட்டது.

மறுநாள் விடியல் அவனை எழுப்பிவிட எஸ்டெல்லோ, அறையின் அரைகுறை வெளிச்சத்தில் சார்லஸ் கார்னே அமர்ந்திருப்பதைக் கண்டான். அவனுடைய விழிகள் சூனியத்தை வெறித்துக்கொண்டிருந்தன. ‘கடவுள்தான் என்னைக் காப்பாற்ற வேண்டும்.’ எஸ்டெல்லோ கடைசிக் குறிப்பை எழுதி வைத்தான்.

இரண்டு காட்டுவாசிகள், ஒரு டாக்டர், கிளேர்க் என்பவன் மற்றும் வடக்கு கிரீக்கின் தந்தி ஆபரேட்டர் ஆகிய ஐவர் கொண்ட மீட்புக் குழுவினர் பனி தோய்ந்த ஷூக்களுடன் அந்தக் குடிலைக் கஷ்டப்பட்டு அடைந்தனர். அங்கே யாரும் இருப்பதாகத் தெரியவில்லை. மற்றும் புகைபோக்கியிலிருந்து புகையும் எழும்பவில்லை. குடிலின் வாயிலில் இருந்து மனிதக் காலடிகள் புறப்பட்டு தூரத்தில் மங்கலாக மறைந்து போனது ஆச்சர்யத்தைத் தந்தது. டாக்டர் கதவை அழுத்தித் திறந்தார். உட்புறம் அமைதியாகவும் தாங்க முடியாத குளிராகவும் இருந்தது. அங்கே மேஜையருகே இரண்டு பேருடைய உடல் அமர்ந்திருந்தது.

இருவரின் தலைகளிலும் துப்பாக்கியால் சுடப்பட்ட

அடையாளம் தெரிந்தது. எஸ்டெல்லோ குட்டையாகத் தேங்கி உறைந்து போயிருந்த ரத்தத்தில் முன்புறமாகச் சாய்ந்திருந்தான். அவனுடைய தொங்கிய வலது கையின் கீழே ரிவால்வரொன்று கிடந்தது. கார்னே விறைப்பாக அமர்ந்திருக்க அவனுடைய கண்கள் திறந்தும் முகம் அமைதியுடனும் இருந்தது.

"ஒரு கொலை, ஒரு தற்கொலை" ஆபரேட்டர் உணர்ச்சி வசப்பட்டுத் துள்ளினான், "பாவப்பட்ட ஜன்மங்கள்."

டாக்டர் இரண்டு உடல்களையும் சோதித்தபின் பேசினார். "இங்கே கொலையேதும் நிகழவில்லை," அவர் கார்னேவின் நெற்றியைத் தொட்டபடி, "இதோ பாருங்கள் இங்கே ரத்தமே வரவில்லை, இவன் குண்டு துளைக்கும் முன்னரே செத்துவிட்டான். அநேகமாக உறைந்துபோனதால் உயிரை விட்டிருக்கிறான் என்று நினைக்கிறேன்."

மீட்புக் குழுவினர் ஐவரும் மர்மத்துடன் பார்வைகளைப் பரிமாறிக்கொண்டனர். அந்நேரம், காட்டுவாசிகளில் ஒருவன் எஸ்டெல்லோவின் நாட்குறிப்பைக் கண்டெடுத்து டாக்டரிடம் ஒப்படைத்தான். அதை அவர் சற்றுப் புரட்டிய பின், முழுவதையும் படிப்பதற்காக வெளியே சென்றார். அடுத்து அவர் உள்ளே வந்ததும், பைப்பைப் பற்றவைத்துக் கொண்டு ஆழ்ந்த சிந்தனைக்குப் பின் சொன்னார்.

"நண்பர்களே, இறந்தவர்களின் குடும்ப நலனைக் கருதி, நீங்கள் இங்கே கண்டவற்றை யாரிடமும் சொல்லக் கூடாது. நானொரு விசாரணை அதிகாரி. சார்லஸ் கார்னேவும், ஸ்டீபன் எஸ்டெல்லோவும் குளிர், பசி மற்றும் தனிமையால் இறந்துவிட்டதாக அறிக்கை தரப் போகிறேன், சரிதானே?"

நால்வரும் ஒருவர்பின் ஒருவராகத் தலையை அசைத்துச் சம்மதத்தைத் தெரிவித்தனர். ஆனால், வடக்கு கிரீக் ஆபரேட்டர் மட்டும் திக்கித் திணறியபடி கிசுகிசுப்பாக, "இங்கு நடந்ததை நடந்தவாறு அறிந்தால் மட்டுமே நான் நிம்மதியாகத் தூங்குவேன்" என்றான்.

"நானும்தான்" என்று அவன் கூற்றை ஆமோதித்த டாக்டர், தொடர்ந்து சொன்னார்.

"எதையும் உறுதியாகச் சொல்ல முடியாது. ஆனால், ஓரளவுக்கு யூகத்தின் மூலம் தெரிந்துகொள்ளலாம். அதாவது கார்னேவின்

மரணமும் அது தந்த அதிர்ச்சியும் தனிமையும் ஒன்று சேர்ந்து எஸ்டெல்லோவைத் தூக்கத்தில் நடக்க வைத்திருக்கிறது. அவனுடைய குழந்தைப் பருவத்தில் இந்த வியாதி வந்திருந்தால் நான் சொல்வதும் உறுதிப்படும்.

இந்தக் குறிப்பேட்டிலிருந்து தெரிய வருவது என்னவெனில் எஸ்டெல்லோ தூக்கத்தில் எழுந்து சென்று, தன் நண்பனின் உடலைத் தோண்டியெடுத்து, கடைசித் தடவையாக அவனை எந்த இடத்தில் உயிருடன் பார்த்தானோ, அதே நாற்காலியில் உட்கார வைத்திருக்கிறான். எதற்காக அதுபோல் செய்தான்? அதை யாரால் அறிய முடியும்? ஒருவேளை அவன் தன்னுடைய தனிமையை விரட்டுவதற்காகச் செய்திருக்கலாம். அல்லது உயிர் போனதை நன்கு நிச்சயம் செய்த பின்னே உன்னைப் புதைப்பேன் என்று எஸ்டெல்லோ சத்தியம் செய்து கொடுத்திருந்தான் அல்லவா, அந்த வாக்கைக் காப்பாற்றுவதற்காகவும் அவன் அப்பிணத்தைத் தோண்டி எடுத்திருக்கலாம்.

அதனால்தான் செத்தவனின் உடலை அவன் சுட்டு இருக்கிறான். எப்படியோ கார்னேவின் சடலம் ஒன்றுக்கு மேற்பட்ட தடவை தோண்டி எடுக்கப்பட்டிருக்கிறது. இரண்டாவது முறையாக இச்சம்பவம் நடந்தவுடன் அவனுடைய உள்ளுணர்வு தூங்கவே கூடாது என்று எச்சரித்திருக்க வேண்டும். எனினும் இயற்கையின் வலிமையால் அவன் ஆக்கிரமிக்கப்பட அவன் உறக்கத்தில் வீழ்ந்து திரும்பவும் செயல்பட்டான். உயிரையும் விட்டு விட்டான்."

பிறகு எஸ்டெல்லோவின் குறிப்புகள் அழிக்கப்பட்டு, அவர்களின் உடல்கள் மலை ஏரியின் ஆழத்தில் மூழ்கடிக்கப் பட்டன.

-சாமுவேல் ஹாப்கின்ஸ் ஆடம்ஸ், 1942

# 7

## முன்னோரை நம்பாதே

நிச்சயமாக அதுவொரு சித்தரவதையேதான். கிழக்கத்திய கெமிக்கல்ஸ் நிறுவனம் மன்ஹாட்டனிலுள்ள பத்து மாடிக் கட்டடத்தில் தன் நிர்வாக மேலாண்மைக்கு அவ்வளவு சுலபத்தில் ஆட்களைத் தேர்வு செய்துவிடாது. ட்ரூ விட்னே முன்னரே ஏராளமான விண்ணப்ப ஃபாரங்களைப் பூர்த்தி செய்து தந்துவிட்டிருந்தான். தவிர துளைத்தெடுக்கும் மூன்று நேர்முகத் தேர்வுகளையும் சந்தித்துவிட்டான். இப்போது மற்றொரு ஃபைலைப் பிரித்துக்கொண்டிருந்தான். அதன் மேலே 'அந்தரங்க விவகாரம் பரம ரகசியம்' என அச்சிடப்பட்டிருந்தது.

அவன் கிழக்கத்திய கெமிக்கல்ஸின் பர்சானல் அலுவலகத்தின் நீளமான சுவரோரம் போடப்பட்டிருந்த எண்ணிறைந்த நாற்காலி ஒன்றில் அமர்ந்தபடி ஃபைலைப் புரட்டிக்கொண்டிருந்தான். அப்போது அவன் தன்னுடைய குரூரமான ஆளுமையை வெளிக்காட்டாமலிருக்க போராடிக்கொண்டிருந்தான்.

விட்னே சற்றுச் சிந்தித்துப் பார்த்தான். இக்காலத்தில் பெரும் நிறுவனங்களெல்லாம் முட்டாள்தனமாக ஒருவனின் அந்தரங்க விவகாரத்தில் எல்லாம் மூக்கை நுழைக்கின்றன. இந்தக் கேள்விகளும் அதுபோல் மோசமானவையே. ஒருவேளை மனோ தத்துவ நிபுணர்களாலும் கம்பெனியில் உயர் பதவி வகிப்பவர்களாலும் இவை தயாரிக்கப்பட்டு இருக்கலாம். இதன் மூலம் ஒருவனின் பின்னணியைத் தெரிந்துகொண்டு அவன் எந்த வேலைக்கு பொருத்தமாக இருப்பான் என தெரிந்துகொள்ளலாம். இந்த நோக்கத்தை விட்னே தெளிவாகத் தெரிந்துகொண்டாலும் மறு வகையில் அவனைக்

குழப்பத்திலாழ்த்தியது. உங்களுக்குச் சொந்தமாக ஸ்போர்ட்ஸ் கார் உள்ளதா?" அவன் விண்ணப்பத்திருப்பதோ கணக்காளர் பதவிக்கு. என்ன வகையான கேள்வி இது?

உயர் தர ஒயின்களில் பழக்கமுண்டா? பல் டாக்டர் யாராவது அறிமுகமுண்டா? கேள்விகள் போய்க்கொண்டே இருந்தன. இவையெல்லாம் சாதாரணக் கேள்விகளே என்று விட்னே தனக்குத்தானே சொல்லிக்கொண்டான். திருமணமாகி இருந்தால் உங்கள் மனைவி படித்த பள்ளி, கல்லூரியின் பெயர்கள் என்ன? மனைவியின் தலை முடி இயற்கையானதா? நீங்கள் ஆழ்கடலில் நீந்துபவரா? உங்கள் குடும்பத்தில் யாருக்கேனும் தலையில் வழுக்கை உள்ளதா..? கேள்விகள் இதுபோல் போகும். ஐயோ கடவுளே.

எனினும் பொறுமையை வலுக்கட்டாயமாக வரவழைத்துக் கொண்டு ஃபாரத்தை நிரப்பினான். மீறி ஆட்சேபணை ஏதும் செய்தால் அவன் பெரிதும் விரும்பிய கிழக்கத்திய கம்பெனியை விட்டு வெளியேற வேண்டியதுதான். அதில் சேரவேண்டும் என்பது அவனாக ஆசைப்பட்டு சுயமாக எடுத்த முடிவு. ஏனெனில் அதில்தான் அவனுக்கு வேண்டிய பணம், அதிகாரம், மேன்மேலும் உயரும் சந்தர்ப்பம் முதலிய விஷயங்களிருந்தன. இதுபோன்ற நிறுவனத்தில்தான் அவன் எண்ண முடியாத முன்னேற்றத்தைப் பெறப்போகிறான். ஒரு விஷமத்தனம் அவன் கண்களில் தோன்றியது. நிறுவன ஆட்கள் மட்டும் அவன் மனதைப் படிக்க நேர்ந்தால் அவன் கம்பெனியைவிட்டு வெளியேற வேண்டியதுதான். சின்னச் சின்ன நிறுவனங்களிலெல்லாம் அனுபவம் பெற வேண்டி எடுத்துக்கொண்ட முயற்சிகளையெல்லாம் நினைத்துப் பார்த்துக்கொண்டான். அவை யாவும் கொடூரமான வழிமுறைகள். எனினும் இளமையாக இருக்கும்போதே பெரிய மனிதனாக வேண்டும்; அதாவது அதிகாரத்தின் உச்சாணிக் கொம்பில் ஏற வேண்டும். அதற்காக எத்தனை பேரின் தொண்டைக் குழிகளை அறுத்தாலும் சரி. அவனுக்குள் ஏதோ ஒன்று பணத்தையும் அதிகாரத்தையும் வேண்டி நின்றது.



விட்னே விடைகளைப் படுதெளிவாக எழுதினான். ஏனெனில் கையெழுத்து சரியில்லை எனில், அது பொறுமை இன்மையைக் காட்டிவிடும். மனோதத்துவ நிபுணர்களும் கம்பெனியின் பெரிய ஆட்களும் அதைக் கண்டுபிடித்து விடுவார்கள். பெரிய, தெளிவான எழுத்துகளில் தன்னுடைய வயது 26 என்றெழுதினான். கிழக்கத்திய கெமிக்கல்ஸிடம் அந்த விவரம் முன்னரே இருந்தது. 'எப்போதேனும் நீங்கள் கைதாகி இருக்கிறீர்களா?' ஃபாரம் வேறொரு தளத்தில் கேள்வியை வீசியது. விட்னே 'இல்லை' என்றெழுதினான்.

தந்தையின் தொழில்? விட்னே மனம் சுருங்கி 'சர்வர்' என்று பதிலளித்தான். அந்தக் கிழவன் சாகும்வரை என்னென்ன மூன்றாந்தர காரியங்களைச் செய்தான். தன் குடும்பத்துக்குக் கஷ்டமான சூழ்நிலையை வழங்கியது, பற்றியெல்லாம் விட்னே சொல்லவில்லை. அம்மாதிரியான வாழ்க்கை தேவையே இல்லையென விட்டுவிட்டான்.

உங்கள் தந்தைக்கு எதிராக ஏதேனும் குற்றப் பின்னணி உள்ளதா? விட்னே ஒரு விநாடி நிதானித்தவன் பின்பு இல்லை என்று பதிலளித்தான்.

உங்கள் தாய்க்கு? விட்னே திரும்பவும் நிதானித்தான். அவனுடைய பெற்றோரா வேலைக்கு மனு போட்டு இருக்கிறார்கள்? அவன் இல்லை என பதிலளித்தான்.

உங்களுடைய தாத்தாவுக்கு அல்லது பாட்டிக்கு எதிராக

குற்றச்சாட்டுகள் உள்ளனவா? விட்னே ஃபாரத்தை வெறித்துப் பார்த்தான். எல்லைக் கோட்டை மீறுகிறார்கள். என்னதான் கிழக்கத்திய கெமிக்கல்ஸாகவே இருந்தாலும் இதுபோன்ற கேள்விகள் அறிவற்றதனமாக உள்ளது. ஒரு விநாடி நேரத்தில் கோபம் தலைக்கேறிவிட இதையெல்லாம் கேட்க உங்களுக்கு என்ன தைரியம் என்று எழுதிவிடலாம் என நினைத்தான். ஆனால், பொறுமையை வரவழைத்துக்கொண்டு சற்று தாமதம் செய்தான். ஏனெனில் அவனுக்குச் சற்றுத் தள்ளி கண்ணாடி அறைக்குள்ளிலிருந்து ஜான்ஸன் என்பவர் அவனையே பார்த்துக்கொண்டிருந்தார். அவர்தான் அவனுடைய விண்ணப்ப ஃபாரத்தை பரிசீலிப்பவர். ஏதேனும் வில்லங்கம் செய்தால் அது அவனுக்கு எதிராக மாறிவிடும் என்பதை விட்னே அறிவான்.

தான் நல்லதோர் எதிர்ப்பார்ப்பை உண்டாக்க வேண்டும். உயரம், ஆளுமை, மரியாதைக்கு உரிய தோற்றம் முதலிய பெரிய நிறுவனங்கள் வேண்டும் தகுதிகளைக் கொண்டிருந்த அவன் அவையே தன் சொத்து என்பதை உணர்ந்திருந்தான். உடனே எவ்வித தயக்கமுமின்றி அக்கேள்விக்கு 'இல்லை' என பதிலளித்தான்.

பின் பூர்த்தி செய்ததை ஜான்ஸனிடம் தந்தான். அப்போது 'ஈ' என்று இளிக்காமல் ஒரு சிரிப்பைச் சற்றே உதிர்த்தான். மதியம் ஐந்து சோதனைக்கு உட்பட்டு பின்னர் வீட்டுக்குச் சென்று கம்பெனியின் பதிலை எதிர்பார்த்திருந்தான்.

சில நாட்கள் கழித்து கிழக்கத்திய கெமிகல்ஸின் அலுவகத்துக்கு அழைக்கப்பட்டான். அவன் வந்த கம்பெனி தலைவரிடம் உச்சகட்ட நேர்முகத் தேர்வை சந்திக்க வேண்டும் என அறிவுறுத்தப்பட்டான். கம்பெனி பிரசிடென்டிடமா? தான் இந்தளவு தகுதியானவன்தானா என்று தன்னைத்தானே கேட்டுக்கொண்டான். ஏனெனில் அவன் கணக்காளர் பதவிகளில் சாதாரண அளவுக்கே விண்ணப்பித்திருந்தான்.

"பிரசிடென்ட் மிட்சல், நிர்வாகம் சார்ந்த எந்தப் பதவிக்கு விண்ணப்பித்தாலும் ஆட்களை அவரே பார்ப்பார்" ஜான்ஸன் சற்றும் நட்பற்ற வார்த்தைகளில் விளக்கினார்.

பிரசிடென்ட் மிட்சலின் அலுவலகம் கிழக்கத்திய நிறுவனத்தின் முப்தேழாவது மாடியில் உச்சத்தில் இருந்தது.

அந்த அறையே கனமான கார்பெட் இடப்பட்டு ஆழ்ந்த நிறத்தில் மரச் சுவர்கள் இருக்க, சுத்தமான காற்றோட்டம் நிறம்பியதாக இருந்தது. ஒரு பக்க சுவரில் ரஸ்டர்னின் சுரங்கம் மற்றும் பிளான்ட் ஓவியங்கள் வெகு அற்புதமாகவும் கண்களைக் கவரும் வண்ணம் தொங்கிக்கொண்டிருந்தன.

மறுபக்கச் சுவரில் மிட்சலின் தோற்றத்தை நிகர்த்த சிலரின் உருவங்கள் சோகமயமாக, ஆயில் பெயின்டிங் வடிவில் தொங்கிக் கொண்டிருந்தன. மறுபுறம் தாழ்வாக இருந்த ஜன்னலின் ஊடே நகரத்தின் அழகு தெரிந்தது. ஓடும் ஆற்றின் தெளிவான காட்சி பக்கமிருந்த கட்டடங்களால் மறைக்கப்படாமல் தெளிவாகத் தெரிந்தன.

விட்னே உணர்ச்சிப் பெருக்கில் சட்டென்று மூச்சை இழுத்துப் பிடித்துக்கொண்டான். இங்கேதான் அதிகாரத்தின் உச்சி உள்ளது. அதுதான் அவனுக்கு வேண்டும். ஒருநாள் இல்லை ஒருநாள் அதை அவன் பெறக்கூடும்.

பிரசிடென்ட் மிட்சல் உயரமாகவும் ஆஜானுபாகுவாகவும் இருந்தார். அவருடைய தோள்கள் விலை உயர்ந்த கோட்டு சூட்டினுள்ளே மிக அகலமாகத் தெரிந்தன. அறுபது வயதுக்கு கீழே இருந்த அவரின் குரல் ஓங்கி ஒலிக்க, அச்சுறுத்தும் புருவங்களின் கீழிருந்த கண்கள் படு தீர்க்கமாக இருந்தன. எவரையும் அடிபணியச் செய்யும் ஆளுமை கொண்டிருந்த அவரைக் கண்டு விட்னே சற்றும் அஞ்சவில்லை. அவரின் துருவுகிற பார்வையை சற்றும் சளைக்காமல் எதிர் கொண்டான். அதேநேரம் தன் அடி மனதிலோ அவரின் கழுத்தை அன்போடு நெருங்கி அணைக்கும் நாளைக் கணக்குப் போட்டான்.

இறுதியில் மிட்சல் தொண்டையைச் செருமினார். “நீங்கள் இந்த வேலைக்குப் பொருத்தமாகத் தோன்றுகிறீர்கள்.”

“தேங்க்யூ சார்.”

“நாங்கள் அசட்டுத்தனமாக இருப்பதுபோலத் தோன்றும், ஆனால், ஒரு கம்பெனி அதன் வேலையாட்களால் சீரழிந்து போகலாம். அதனால்தான் எங்களுக்குத் தோதுப்படாதவர் களை நாங்கள் தேர்ந்தெடுப்பதில்லை. எல்லாவற்றுக்கும் மேலாக நாங்கள் ஒழுக்கத்தை மதிக்கிறோம். அந்தத் தாத்தா பாட்டி சம்பந்தப்பட்ட கேள்வி உங்களுக்கு ஆச்சர்யத்தைத் தந்ததா?”

“சற்றே” என்று விட்னே எச்சரிக்கையுடன் பதிலளித்தான்.

“அவையெல்லாம் என் யோசனை”, மிட்சல் குரலைச் சற்றுத் தாழ்த்திச் சொன்னார், “ஒரு கோட்பாட்டின் அடிப்படையில் அது உருவாக்கப்பட்டது. இது வரை எங்களைக் கைவிட்டதே இல்லை. நான் சந்ததியை நம்புபவன். கோணங்கி சந்ததி கோணங்கியை மட்டுமே ஈன்றெடுக்கும்”

“ஆமாம், ஆமாம்” என்றான் விட்னே. அவனுக்கு எப்போது ஆமாம் போடுவது என்று தெரிந்துவிட்டது. அதே சமயம் மிட்சலின் பார்வை எவ்வித முரண்பாட்டையும் வெளியிடாமல் வெறுமையாக இருந்தது, புதிராக இருந்தது.

“ரத்தம் மட்டுமே சொல்லும்” மிட்சல் கூறினார்.

“ஆமாம் சார்.”

“உன்னுடைய பதவியின் பொறுப்புக்கு தாத்தா, பாட்டியை மட்டுமே சோதனைக்கு உள்ளாக்கினோம். அதேசமயம் பதவி உயர உயர ஒருவனுடைய சந்ததியை ஆராய்ந்து பார்ப்போம். ஒருவேளை அவன் முன்னோர்களில் யாராவது தவறு செய்திருந்தால் நிச்சயமாக அது எங்கள் பார்வைக்கு வந்தே தீரும்”

“ஆமாம் சார்” என்றானே தவிர அவரின் கருத்தைச் சிறிது கூட விரும்பவில்லை. ஏனெனில் ஒருவனுடைய முன்னோர்கள் எந்தளவு ஒழுக்கமாக இருப்பார்கள் என யாராவது சொல்ல இயலுமா என்ன?

அவனுடைய எண்ணத்தைப் புரிந்துகொண்டவர்போல் மிட்சல், “நாங்கள் நிஜத்தை, அதன் நடைமுறைகளை உணர்ந்தவர்கள். அதாவது எல்லாருமே சரியாக இருக்க வேண்டுமென நாங்கள் சொல்ல வரவில்லை. அதே நேரம் எங்களது பணியாளர்கள் யாவருமே குற்றப் பின்னணி இல்லாமல் இருக்க வேண்டும். ஒருவேளை ஒருவனது சந்ததியில் யாராவது குற்றங்கள் புரிந்திருந்தால் அவன் பொறுப்பற்ற வேலைக்கு நியமிக்கப்படுவான். மோசமான குற்றங்கள் அதாவது கொலை செய்வது போன்ற விவகாரங்களில் முக்கியத்துவம் அளிப்போம். அதுதான் இந்நிறுவனத்தின் இயல்பான விஷயம். இளைஞனே எங்களுக்குப் பணிபுரியும் அளவுக்கு உன் முன்னோரிடம் நீ நம்பிக்கை வைத்திருக்கிறாயா?” சொன்னார்

“ஆம்! நான் என் முன்னோரிடம் ஆழ்ந்த நம்பிக்கை வைத்துள்ளேன் ஐயா.” விட்னே தான் சொல்வது சரியான பதில் என்று தெரிந்தே சொன்னான். அவனுடைய எண்ணங்கள் இறுகிப்போய்க் கிடந்தன. மாபெரும் நிறுவனங்களிலுள்ள தலைவர்களெல்லாம் அறிவற்றவர்களாக உள்ளனர். அவர்களையே நம்பும் கம்பெனிகள் இதுபோன்ற கோமாளித்தன யோசனைகளுக்கு முக்கியத்துவம் கொடுக்கின்றன. எனினும் ஒரு தடவை உள்ளே நுழைந்து விட்டால் போதும், ஒரு கம்பெனி இம்மாதிரியான விதிகளால் நீண்ட நாட்களுக்கு இயங்க முடியாதென்பது அவனுக்கு தெரியும். ஏனெனில் பெரும்பாலான பணியாளர்கள் இச்சோதனையில் தேர்வாகி உள்ளனர் என்று மிட்சலே சொல்கிறார். ஒருவனின் கடந்த கால வாழ்க்கையினை எவ்வளவு தூரத்துக்கு உறுதிபடச் சொல்ல முடியும்? அதுவும் புராதன கால கட்டத்தைத் தோண்டியெடுக்க முடியுமா? விட்னேவுக்கே அவன் தாத்தா பாட்டிகளைப் பற்றித் தெரியாது.

மறுபடியும் அவன் எண்ணங்களைப் புரிந்துகொண்டது போல் பிரசிடென்ட் மிட்சல், “எங்களுடைய உளவாளிகள் மிகவும் புத்திசாலிகள். எல்லா விஷயத்தையும் துருவி விடுவார்கள். ஒருவன் தனி வாழ்வில் நடந்தவற்றைச் சொல்வது முழுக்க நம்ப முடியாது. எனவே நாங்கள் அதையெல்லாம் கணக்கில் எடுத்துக்கொள்ளவில்லை. எங்களின் ஆட்கள் உலகம் முழுக்க பரவியிருக்கிறார்கள். கடந்த காலம் நிஜத்தில் தெளிவில்லாதது. அதேசமயம் ஒவ்வொரு பரம்பரையும் இரண்டாகப் பிரியும். ஒன்றைக் கோட்டைவிட்டால்கூட மற்றதைப் பிடித்துவிடுவார்கள். அவர்கள் இந்த விஷயத்தில் தோற்பது அரிது. அவர்கள் கடந்த காலத்தை நுணுகி ஆராய்வார்கள். புரிந்ததா?” என்றார்.

“யெஸ் ஸார்.”

மிட்சல் தன் தடிமனான விரலை உயர்த்தினார். “இந்த விஷயம் உனக்குப் புதிதாகத் தோன்றும். முரட்டுத்தனமாகவும் இருக்கும். ஆனால், அதில் நான் திருப்தி அடைகிறேன். எங்கள் கம்பெனியின் உயர் அலுவலர்கள் சிலர் பதினோராம் நூற்றாண்டு வரை தங்களின் நிலையைத் தெளிவுபடுத்தி இருக்கிறார்கள். அந்த அளவுக்கு அவர்களின் முன்னோர் ஒழுக்க சீலராக இருந்திக்கிறார்கள். ரத்தம் மட்டுமே சொல்லும், என்ன சரியா?”

ஸ்தம்பித்துப்போன விட்னே "யெஸ் ஸார்" என்றான்.

மிட்சல் சட்டென சுறுசுறுப்பாகி, "நல்லது இப்போது நீங்கள் வகிக்கப் போகும் பதவிக்கேற்ப உங்களின் தாத்தா பாட்டியைப் பற்றி ஆராய்ந்தோம். சோதனையில் அவர்கள் வெற்றிபெற்றுவிட்டார்கள். இப்போதைக்கு இது போதும் நீங்கள் பர்சானல் அலுவலகம் செல்லலாம்."

ஆம்! எனக்கு வேலை கிடைத்துவிட்டது என விட்னே உணர்ந்து மெதுவாகச் சிரித்தான்.

அடுத்த சில மாதங்களுக்கு ட்ரூ விட்னே கம்பெனியின் வேலைகளைப் பற்றி நன்கு தெரிந்துகொள்ள முயன்று, பின் காட்டுமிராண்டித்தனமான முயற்சிகளில் இறங்கினான். மெள்ள மெள்ள நிகழும் பதவி உயர்வுகள் அவனுக்குத் தேவையில்லை. ஏனெனில் மொத்தம் முப்பது வருடங்கள் உழைத்தாலும் அதிகபட்சம் அவன் துறையிலேயே தலைவராகலாம் அவ்வளவுதான். வேகமாக முன்னேறும் ஒரே வழி குறுக்கே யார் நின்றாலும் அவர்களை அப்புறப் படுத்துவதுதான். தருணத்துக்காக எதிர்பார்ப்பதும் தேவைப் பட்டால் அதை உருவாக்குவதும்தான் ஒரே வழி - விட்னே தனக்குள் குலுங்கிச் சிரித்துக்கொண்டான்.

கடந்த காலத்தை கம்பெனி ஆராயட்டும். ஆனால், கூடிய விரைவில் கம்பெனியில் நடக்கப்போகிற விஷயங்களை யாராலும் புரிந்துகொள்ள முடியாது.

அவனிருந்த துறை உபகரணங்களைக் கண்டுபிடிப்பதாகும். அந்த துறையின் தலைவர் ஆவதே விட்னேவின் முதல் நோக்கம். மொத்தம் பதினாறு பேர் அவனுக்கு மேலே இருந்தனர். எல்லோரு மிக மெதுவாகப் பதவி உயர்வை நோக்கிப் போய்கொண்டிருந்தனர். துறையின் தலைவரோ ஓய்வு பெற இன்னும் பல வருடங்கள் ஆகும். எல்லோருக்குமே பதவி உயர்வு பெற ஆசைத்தான். ஆனால், விட்னே போன்ற அராஜகத்தனமான மூளை பலம் அவர்களிடம் இல்லை.

விட்னே தன் முதல் இலக்காக எட் தோர்பி என்பவரைத் தேர்ந்தெடுத்தான். தோர்பி மெலிந்த மனிதர். வழுக்கையான தலையில் சற்றே முடி படர்ந்திருக்கும். அவர் அக்கம்பெனியில் பன்னிரண்டு வருடங்களாகப் பணிபுரிந்துகொண்டிருக்கிறார்.

சந்தர்ப்பம் கிடைத்தால் அவரே துறையின் தலைவராவார் என்பது எல்லோரின் கணிப்பு.

விட்னே அவருடன் நெருங்க ஆரம்பித்தான். அவரும் அவனுடன் பழக ஆரம்பிக்க விரைவில் இருவருடைய நட்பும் நன்றாகப் போனது. இப்படியாக இருவரும் நகைச்சுவையாக தீவிரப் பேச்சுகளில் ஈடுபட ஆரம்பித்தனர். அடிக்கடி ஹோட்டலுக்குத் தங்கள் மனைவியரை அழைத்து வரும் அளவுக்கு நட்பு தொடர்ந்தது. விட்னே ஒருபடி மேலே சென்று தோர்பின் சுருட்டை முடி மகன்களுக்குப் பரிசுப் பொருட்களை வாங்கித் தந்து அங்கிள் ட்ரூ என்று அவர்கள் அழைக்கும் அளவுக்கு ஆளானார். இப்படியாக ட்ரூ விட்னே தோர்பியின் பார்வையில் ஒரு மேம்பட்ட மனிதனாக மாறிவிட்டார்.

விட்னே கம்பெனி வேலைகளைப் பற்றி தோர்பியிடம் இயல்பாகக் கேட்க அவர் அவற்றைப் பற்றி உற்சாகமாக விளக்கத் தொடங்குவார். கேள்விகள் ஆழமாகப் போகும் போதும் அவர் கவலைபடவில்லை. ஒரு நண்பனுக்குச் சில விஷயங்களைக் கற்றுத் தருவதில் என்ன வந்துவிடப் போகிறது? இளம் பருவத்திலிருந்த விட்னே பதவி விவகாரத்தில் அவருடன் போட்டியிடப் போவதில்லை. ஏனெனில் சீனியாரிட்டியில் அவரைவிட அவன் நெடுந்தொலைவில் இருக்கிறான். வீட்டிலும் அலுவலகத்திலும் அவனுக்கு அவர் தான் ஈஸ்டர்னில் (கிழக்கத்திய கெமிகல்ஸ்) பன்னிரண்டு வருட காலத்தில் கற்றுக்கொண்ட வித்தையை போதித்தார். "இவையெல்லாம் பின்னொரு காலத்தில் உனக்குப் பயன்படும்" என்று தோர்பி சிரித்தார்.

"ஆமா எட்டி" என்று பதிலுக்கு விட்னேவும் சிரித்தான்.

அவர் மூளையில் இருந்ததையெல்லாம் கறந்துவிட்ட பின்னர் அடுத்ததை சாதிக்கத் தொடங்கினான். தொழில் வரி செலுத்தப்படும் காலம் வந்தது. ஒருவேளை இது அவனுக்குப் பயன்படலாம். விட்னே வரி சம்பந்தப்பட்ட பைல்களை ஆராயத் தொடங்கினான். யாரும் இதைக் கண்டு கொள்ளவில்லை. ஏனெனில் அவன் தன் வேலையைத்தானே பார்த்துக்கொண்டிருக்கிறான்.

விட்னேவுக்குத் தான் நடத்தப் போகும் காரியத்தில் நம்பிக்கை

பிறந்தது. ஏனெனில் அதை யாராலும் நினைத்துக் கூடப் பார்க்க முடியாது. அதுவும் அலுவலகங்களில் அதைக் கனவிலும் செய்ய முடியாது. ஒரு சில கெட்ட மனிதர்கள் அதைச் செய்யக் கருதலாம் அவ்வளவுதான். ஆனால், அவன் செய்யப்போகிறான் ஏனெனில் அதற்கான தைரியம் அவனிடம் உள்ளது.

குறிப்பிட்ட சில ஃபைல்களில் பென்சிலால் எழுதப்பட்ட வரி சம்பந்தமான விவரங்கள் நிரந்தரப் பேரேட்டில் ஏறுவதற்கு காத்துக்கொண்டிருந்தன. அவன் அதில் சிலவற்றைத் தேர்ந்தெடுத்தான். கருவிகளின் தேய்மான வரி விவகாரத்தில் சில, எட் தோர்பியால் தயாரிக்கப்பட்டு அவரின் கையெழுத்தையும் தாங்கி நிற்கிறது. மேலும் அதில் அவரின் வேலையை சரிபார்த்து ஓ.கே. என்றெழுதிய லீ சதர்பீல்டின் கையெழுத்தையும் காண முடிந்தது.

ஏராளமாக இருந்த கணக்கு வழக்குகளில் அவன் ஓவன்ஸ் ஹுக் வொர்த், ஓர் புல்வரைசர், யூனிட் மாடல் எஸ்-48 வரிசை எண் 879904 ஆர் - 7,423.00 டாலர் என்ற கணக்கைத் தேர்ந்தெடுத்து தோர்பி கணக்கிட்டு இருந்த அந்த எழுத்துகளை அழித்துவிட்டுத் தேய்மான கணக்காக 9,898 டாலர் என்றெழுதினான். இதேபோல் இன்னும் நான்கு கணக்குகளையும் மாற்றம் செய்தான். இதையெல்லாம் தோர்பியின் கை வண்ணத்திலேயே அழகாகச் செய்து முடிக்க, நடந்திருக்கும் மாற்றத்தை தோர்பி வந்தாலே கண்டு பிடிக்க முடியாது.

அவன் மேலும் சில வாரங்கள் பொறுமையுடன் காத்திருந்தான். ஃபைலிலிருந்த வரிகளெல்லாம் நிரந்தரப் பேரேட்டில் ஏறிவிட்டன. பின் அவன் துறைத் தலைவரான திரு. போபாக்கை அணுகினான். அப்போது அவன் தயங்கித் தயங்கிப் பேசுவதுபோல் நடித்தான்.

"வரி விவகாரத்தில் தவறா? தேய்மானத்தை அதிகமாகப் போட்டுவிட்டோமா?" போபாக்கின் முகத்தில் எள்ளும் கொள்ளும் வெடித்தது.

"ஆமாம் சார். வருவாய்த் துறை இதைக் கண்டிப்பாகக் கண்டுபிடித்துவிடும். நாம் சரி செய்யாவிட்டால் நம்முடைய எதிர்காலம் இதனால் பாதிக்கப்படும்."

போபாக்கின் நீல நிற விழிகள் உறைந்துபோய் வெறித்தன. அவை உனக்கென்ன தெரியும் என்பதுபோல் பார்த்தன. "எச்சரிக்கைக்கு மிகவும் நன்றி. மாபெரும் திறனாளிகள் உள்ள இடத்தில் நீ மட்டும் இதை எப்படிக் கண்டு பிடித்தாய்"

"பேரேட்டில் அந்தக் கணக்கு விவகாரங்களைப் பார்த்தேன். அவை சரியாக இருக்குமெனத் தோன்றவில்லை. சென்ற வருடக் கணக்கின்படி அதைக் கணக்கிட்டுப் பார்த்தேன். விவரங்கள் சரி இல்லை."

"ஜீனியஸ்" என்று போபாக் களைப்புற்று முணுமுணுத்தார். "இந்தக் கணக்கு வழக்குகளை யார் போட்டது?"

"ஆ... எட் தோர்பி" விட்னே தயங்கினாற்போல் தோன்றினாலும் வெளிப்படையாகப் போட்டு உடைத்து விட்டான்.

போபாக் நாற்காலியின் மேல் சாய்ந்துகொண்டார்.

"இதோ பார், தோர்பி இக்கம்பெனியில் பனிரண்டு வருடங்களாக இருக்கிறார். இவருக்கு அவர் வேலையைப் பற்றி நன்றாகவே தெரியும். அவருக்கும் மேலாக ஸதர் ஃபீல்ட்டும் அதைச் சோதித்துவிட்டார். அவர் கம்பெனியில் உயர்ந்த அதிகாரி. இவற்றை நான் பார்த்துக்கொள்கிறேன். நம்மால் இதுபோன்ற விஷயங்களைத் திரும்பத் திரும்ப சோதனையிட இயலாது. உன்னுடைய அறிவுத் திறனுக்கு என் வந்தனங்கள். எனினும் நீ அனுபவமின்மையால் பேசுகிறாய் என்றே நினைக்கிறேன்."

முகத்தில் திருப்தியின்மையைக் காட்டிக்கொண்டே விட்னே வெளியேறினான். உண்மையில் உள் மனதில் திருப்தியடைந்துகொண்டான். தான் போட்டத் தூண்டிலில் போபாக் மாட்டவில்லையெனினும், கூடிய விரைவில் பெரிய அதிர்ச்சி ஏற்படப் போகிறது. வருமான வரித் துறை அதையெல்லாம் பார்த்துக்கொள்ளப் போகிறது. வருமான வரித் துறை மெதுவாகவே செயல்படும். இருப்பினும் யாரிடமிருந்து விவரம் பெறுகிறார்களோ அவர்களின் பெயர் முகவரியை வெளியிடுவதில்லை. விட்னே வருமான வரித் துறைக்கு ஓர் அஞ்சல் அனுப்பினான்.

ஒரு வார காலத்தில் இரண்டு பேர் கிழக்கத்திய கெமிக்கல்ஸுக்கு விஜயம் செய்து, போபக்கின் துறையில் இருந்த பைல்களை ஆராய்ந்தனர். சில மணி நேரம் கழித்து தன்

உயர் அதிகாரிகளால் காறி உமிழப்பட்ட போபாக் சிவந்த முகத்துடன் வெளியே வந்து, பதிலுக்கு தோர்பியையும், ஸதர்ஃபீல்டையும் மென்று துப்பினார்.

"அந்தத் தவறுகளை நான் எப்படிச் செய்தேனென்றே தெரியவில்லை. ஒன்றுமே புரியவில்லை" என்று தோர்பி முணுமுணுத்துக்கொண்டார்.

போபாக், விட்னேவைத் தனியாக அழைத்துப் பேசினார். "ஈஸ்டர்ன் இதுபோன்ற தவறுகளை மன்னிப்பதே இல்லை - குறிப்பாக வருமான வரி விஷயத்தில்! உங்கள் பேச்சை முன்பே நான் கேட்டிருக்க வேண்டும் அப்படிக் கேட்டிருந்தால் நிலைமை இவ்வளவு மோசமாகப் போயிருக்காது. நீங்கள் புத்திசாலி மனிதர். யாராலும் இந்தத் தவறைக் கண்டுபிடிக்க முடியாது. தோர்பி அவருடைய முன்னேற்றத்தைத் தவறவிட்டு விட்டார். சதர்ஃபீல்டையும் நம்ப முடியாதுபோல் தோன்றுகிறது. இதோ பார் விட்னே! நான் உங்களுக்குப் புதிய பொறுப்பு மிகுந்த வேலையைத் தரலாமென்று நினைக்கிறேன்."

"தேங்க்யூ சார்" என்று சந்தோஷமாகச் சொன்ன விட்னே அடுத்து அறுபடப்போவது போபாக்கின் கழுத்துதான் என நினைத்துக்கொண்டான்.

அந்தத் துறையில் பதவி உயர்வுக்கு தோர்பியின் தருணங்கள் கடந்து போய்விட்டன. அதேபோல்தான் ஸதர் ஃபீல்டுடையதும். போபாக்கின் நிலையும் பலவீனமாகிவிட்டது. கிழக்கத்திய கெமிக்கல்ஸ் இதுபோன்ற மாபெரும் தவறுகளை எந்தத் துறையில் நிகழ்வதையும் சகிக்காது.

விட்னே அடுத்த சில மாதங்களுக்குத் தன் பணியில் மூழ்கிப்போனான். அவன் அறிவு மிகுந்தவனாகிவிட்டான் என்பதில் ஐயமில்லை. தோர்பியின் மூளையில் இருந்தவை எல்லாம் இப்போது அவனுக்குச் சொந்தம். அதனால் கற்றுக்கொண்ட வித்தையால் விண்ணப்பிப்பதில் கஷ்டம் ஏதுமில்லை. மேலும் அவனுக்கு மேலிருந்த போபாக்கின் காவல் நாய் போலானான்.

அவன் துறையிலிருந்த பலரின் சிறு சிறு தவறுகளையும் போபாக்கிடம் கோள் சொல்வதைத் தன் பழக்கமாக்கிக் கொண்டான். அதே சமயம் தோர்பியின் வேலைப்

பொறுப்பிலிருந்தும் நிறைய பெற்றுக்கொண்டான். தோர்பியே மேலதிகாரி. ஆனால், அதிகாரத்தை அவர் இழந்துக்கொண்டே வந்தார். இப்போதெல்லாம் விட்னே தோர்பியிடம் பழகாமல் சற்று எட்டவே நின்று கொண்டான். ஏனெனில் அவரிடம் அவனுக்கு இனிமேல் வேலையில்லை.

விட்னே அலுவலகரீதியாகப் பதவி உயர்வு பெற்றான். இது கிடைப்பதற்கு முந்தைய நாளே பர்சானல் அலுவலகத்திலிருந்து செய்தியாளன் அவன் மேஜையில் கடித உறை ஒன்றை வைத்துச் சென்றான். அதனுள் இருந்த கடிதத்தில் முன்னோர் பற்றிய குறிப்புகள் அந்தரங்கம் என அச்சிடப்பட்டிருந்தது. 'பாராட்டுகள். உங்கள் முன்னோர் எங்கள் சோதனையில் வெற்றிபெற்று விட்டார்கள். நீங்கள் பதவி உயர்வுக்கு தேர்வு பெற்றுவிட்டீர்கள்.' என்று சொன்னது.

பிரசிடென்ட் மிட்சலின் அறிவற்ற இந்த ஆராய்ச்சியை விட்னே மறந்தேபோயிருந்தான். அவன் அறிக்கையை படித்து அதன் விவரங்களினால் பிரமித்துப்போனான். அவனுக்குத் தன் மூதாதையரைப் பற்றித் தெரியவே தெரியாது. நான்கு தலைமுறைகளுக்கு முன்பு ஸ்டாப்போர்ட் விட்னே என்பவர் மிசெ[illegible]ரியிலுள்ள டர்ன்புல்லில் மரம் அறுக்கும் தொழிற்சாலையை நடத்தி வந்திருக்கிறார். மற்றொருவர், சிலாஸ் விட்னே என்பவர் செவ்விந்தியர்களை எதிர்த்து சண்டை போட்டிருக்கிறார். பார்பரா ஷெர்மேன் என்பவர் காலின் விட்னே என்ற வியாபாரியை மணந்திருக்கிறார். அவர்களுக்கு ஒரு பெண், அவள் பென்சில்வேனியாவில் ஆர்ம்ஸ்வொர்த் நகரத்தில் பின்னல் வேலைகளுக்குப் புகழ் பெற்றிருக்கிறாள்.

அவர்கள் இந்தளவு தோண்டியிருப்பதில் விட்னேவுக்கு திருப்தி உண்டானது. அவர்கள் கடந்த காலத்தை ஆராய்ந்து கொண்டிருக்கட்டும் ஆனால், எதிர்காலம் அவனுடையது.

அவன் மேற்கொண்டு தீவிரமாக உழைக்க ஆரம்பித்தான். அடிக்கடி கூடுதல் மணித் துளிகளை அலுவலகத்தில் செலவிட்டான். காலையில் அலுவலகத்தில் முதல் ஆளாக நிற்பதும் கடைசியாகப் போவதும் அவனே. அவன் தன்னை அர்ப்பணித்து, நம்பக்கூடிய, உயர்ந்த நோக்குடைய ஒரு நிர்வாக ஆளாக தகவமைத்துக்கொண்டே வந்தான். இவை எல்லாம்

போபாக்கின் உயர் அலுவலரும் அத்துறையின் தலைவருமான எஸ்.டி.சாம்ஸன் பார்வைக்கு வரும் என்பதையும் அறிவான்.

அதேசமயம் அத்துறையிலிருந்த மற்றவர்களைப் பற்றி ஆராய்வதையும் நிறுத்தவில்லை. அந்த துறையின் இரு பெரும் தூண்களாக இருந்து வந்த தோர்பியும் ஸதர்ஃபீல்டும் இப்போது அந்த நிலையில் இல்லை. மற்றவர்கள் பதவி உயர்வைப் பற்றிக் கவலைப்படாவிட்டாலும் விட்னே அவர்களிடமும் எச்சரிக்கையாக இருந்தான். போபாக்கின் நல் ஆதாரவைப் பெற்று அவர்களின் பின்புலத்தை துருவிக் கொண்டே இருந்தான்.

இப்படியாகப் பணிமூப்பிலும் அறிவிலும் உயர்ந்த நிலையை அடுத்த ஒரு வருடத்தில் அடைந்த விட்னே, போபாக்கின் பல்லைப் பிடுங்கத் தீர்மானித்தான்.

அவனுடைய திட்டம் எளிமையானது ஆனால், பாதுகாப்பானது. எப்படியெனில் யாராலும் அதை யோசிக்க முடியாது. நடக்க முடியாதது. மற்றொரு முறை அவன் கோட்டைத் தாண்ட ஆரம்பித்தான்.

காப்பி இடைவேளையின்போது அதைக் கொண்டுவரும் வெண் சீருடையணிந்த பணியாளிடம் தனியாகச் சந்தித்துப் பேசினான். அப்போது விட்னே காட்டிய டாலர் நோட்டுகளைப் பார்த்து அவன் கண்கள் விரிந்தன.

"சும்மா விளையாட்டுக்காக. ஆனால், நீ உன் வாயை அழுத்தமாக மூடிக்கொண்டிருக்க வேண்டும். இல்லையெனில் நாமிருவரும் வம்பில் மாட்டுவோம். ஏனெனில் எல்லோரும் ஒரே மாதிரியாக இருக்க மாட்டார்கள்."

அவன் மெதுவாகத் தலையாட்டினான். எனினும் சந்தேகத்தின் சாயல் அவனிடம் தெரிந்தது.

"நீங்கள் எல்லோரும் இதுபோல் செய்வீர்கள் என்பது நிச்சயமாகத் தெரியும் ஆனால், நான் வம்பில் மாட்டிக் கொள்ள விரும்பவில்லை. அந்த மாத்திரைகள் தீங்கற்றவையா?"

விட்னே பொறுமையை இழந்து மெதுவாகச் சீறினான். "கடவுளே! அந்த மாத்திரைகளை நீயேதான் வாங்கப் போகிறாய். இதைவிட வேறென்ன அத்தாட்சி வேண்டும். வேண்டுமானால் மருந்துக் கடைக்காரனை கேட்டுப் பார். ஒரு குழந்தையைக்கூட

அவை தீங்கு செய்ய முடியாதவை. நான் சொல்லும்போது போபாக் குடிக்கும் காபியில் அவற்றைப் போட்டுக் கொடுத்துவிட வேண்டும் அவ்வளவு தான் ஆனால், நான் சொல்வதை நீ மறந்தாயென்றால்…"

பணியாள் சமாதானமடைந்து பணத்தைப் பெற்று கொண்டான்.

அதன் பிறகு காபி இடைவேளையின் சற்று நேரம் கழித்து திரு. போபாக் நாற்காலியிலே அமர்ந்து தூங்குவதைக் கண்டு மொத்த அலுவலகமே ஸ்தம்பித்துப்போனது. தூக்க மாத்திரைகள் நன்றாகவே வேலை செய்தன.

அடுத்ததாக போபாக் மேஜையிலேயே கைகளில் தலையை வசதியாக வைத்துக்கொண்டு ஆழமாகக் குறட்டைவிடத் தொடங்கினார். மற்றவர் நலத்தை விரும்புவதில் தேர்ந்தவனாயிற்றே விட்னே அதனால் போபாக்கை எழுப்ப முயன்றான். ஆனால், அவரோ ஆழ்ந்த உறக்கத்தில் இருந்தார். பிறகு எஸ்.டி.சாம்ஸன் தன் அறைக் கண்ணாடித் தடுப்பிலிருந்து போபாத் தூங்குவதை அருவருப்பாகப் பார்த்தார் என அறிந்துகொண்ட பின் மிக்க சந்தோஷமடைந்தான். சில மணி நேரம் கழித்துத் தூக்கத்திலிருந்து விழித்த போபாக் நடந்தவற்றை அறிந்து பேய்போல் முழித்தார்.

சில வாரங்கள் கழித்து, அதே சம்பவம் மறுபடியும் நடந்தது. "எனக்கு என்ன ஆனதென்றே தெரியவில்லை, பொதுவாக நான் பகலில் தூங்குவதே இல்லை" என்று போபாக் தன்னைத்தானே கடிந்துகொண்டார்.

ஒரு நாள் மதியப் பொழுதில் சாம்சனின் அறைக்கு வரவழைக்கப்பட்ட விட்னே சற்றும் வியப்படையவில்லை. சிம்ஸன் பேசத் தொடங்கினார். "உங்களுக்கு இன்னும் வயதாகவில்லை. மற்றவர்கள் அனுபவம் பெற்றதுபோல் இன்னும் பெறவில்லை. ஆனால், இந்தத் துறையிலேயே நீங்கதான் வேலைகளைச் செய்யும் திறன் படைத்திருக்கிறீர்கள் என்ற முடிவுக்கு வந்திருக்கிறோம். போபாக்கும் தன் பிடியை நழுவ விட்டுவிட்டார். சென்ற வருடம் அந்த வரிக் குழப்பம் மற்றும் அலுவலகத்தில் வேலை நேரத்தில் தூங்கும் அந்த மனிதர்…"

மறுபடியும் முன்னோர்களை பற்றிய அறிக்கை ஒன்று விட்னேவின் மேஜையில் இருந்தது. ஒருவிதமான ஆர்வம் பொங்க விட்னே படித்துப் பார்த்தான். அவனுடைய முன்னோர்களில் ஒருவர் ட்ரேக்கின் கப்பல் படையில் அலுவலராக இருந்திருக்கிறார். தவிர மருத்துவர், நீதிபதி சிலர் மதகுருக்கள் எனப் பட்டியல் நீண்டது. மற்றொரு வரிசையில் கருமான், செருப்பு தைப்பவன் மற்ற கலைஞர்கள் யாவரும் இங்கிலாந்தில் இருந்ததாகச் சொல்லப்பட்டது. இவர்கள் சிறு சிறு தவறுகள் அவ்வப்போது இழைத்ததாகக் கூறப்பட்டுள்ளது. எனினும் அவன் அத்துறையின் தலைவராவதற்குப் பரிந்துரைக்கப்படுகிறது.

போபாக் பொறுப்பு அற்ற ஒரு வேலைக்கு மாற்றப்பட்டார். விட்னே அவரிடம் மரியாதை கலந்த குரலில், " எனக்கும் இதில் கஷ்டந்தான். உங்களுக்குப் பணி மூப்பு உள்ளது, எனவே ஓய்வூதியத் தொகை கொஞ்சம் அதிகமாகவே கிடைக்கும்" என்றான்.

விட்னே மேலும் இரண்டு ஆண்டுகளுக்கு தன் நிலையை ஸ்திரப்படுத்திக்கொள்வதில் செலவிட்டான். தனக்குக் கீழுள்ள ஆட்களின் திட்டங்கள் நன்றாக இருந்தால் அவற்றைத் தன்னுடையது என்று சொல்லிக்கொண்டான். துறையை, கடுமையான விதிகளின் கீழ் நடத்திக்காட்டினான். தன் அசைவுகள் அனைத்தும் மேல் மட்ட அதிகாரிகளால் கவனிக்கப்படும். அவன் சற்று காலம் பொறுத்திருக்க வேண்டும். அதற்காகக் கவலைப்படவில்லை. ஏனெனில் இப்போதே அவன் உயர் மட்ட அலுவலர் பதவியை ஆள்கிறான். அடுத்ததாக மிகப் பெரிய பதவிக்குத் திட்டமிடப் போகிறான்.

இறுதியில் தன் அடுத்த கட்ட நகர்வைத் தேர்ந்தெடுத்தபோது, அவன் வழியை மூன்று பேர், எஸ்.டி.சாம்ஸனோடு சேர்த்து, அடைத்துக்கொண்டு நின்றனர். இவ்விடத்தில் கொஞ்சம் மிரட்டல், உருட்டல் எல்லாம் பயன்படும்.

அவன் காத்திருந்த அவ்வேளையில், விட்னே தனிப்பட்ட உளவாளிகளை வேலைக்கமர்த்தி ஈஸ்டர்னின் உயர் மட்ட அலுவலர்களின் அந்தரங்க விவகாரங்களை வேவு பார்த்தான் எல்லோரும் புனிதராக இருக்க முடியாது. ஆம்! விட்னே

வான்ஷீல்டர் என்கிற மேலதிகாரியின் விஷயத்தில் ஒரு குற்றத்தை நன்கு பிடித்துவிட்டான். வான்ஷீல்டருக்கும் பொன்னிற கேசம் கொண்ட ஒரு விளம்பர மாடல் பெண்ணுக்கும் இடையே தொடர்பு இருந்தது. தன் வீட்டில் புயல் வீசாமல் இருக்க, கம்பெனியில் தன் பெயருக்குக் களங்கம் நேராமல் இருக்க, வான் ஷீல்டர் விட்னேவுக்கு வழியைவிட்டார்.

அந்த துறையிலேயே பெரிய ஆளாகிவிட்டான் விட்னே. தன் முன்னேற்றத்துக்குக் குறுக்கே நின்ற மற்றொருவரையும் குறுகிய காலத்திலேயே ஓரம்கட்டிவிட்டான். ஆர்.ஜே.ஃப்ரெட்ரிக் என்பவரைப் பற்றி பல்வேறு வதந்திகள் உலவின. எல்லாம் விட்னேவுக்கு வேலை செய்த தனியார் உளவு நிறுவனங்கள் மூலம்தான்.

கூடிய விரைவில் ஃப்ரெட்ரிக் ஒரு குடிகாரர், கம்பெனி வாடிக்கையாளரிடமிருந்து லஞ்சம் பெறுகிறார்; குதிரைப் பந்தயத்தில் அவருக்கு ஆர்வம் எனப் பல வதந்திகள் கிழக்கத்திய கெமிக்கல்ச் கம்பெனி முழுவதும் பரவின. அந்தக் குற்றச்சாட்டுகள் வெளிப்படையானவை அல்ல. ஆனால், ஃப்ரெட்ரிக் அவற்றுக்கு எதிராக ஒன்றும் செய்ய முடியவில்லை. வதந்திகள் வெகு விரைவில் கம்பெனி உயர் மட்டத்தை அடையவே, வேறுவழியின்றி அவர் பொறுப்பற்ற பகுதிக்கு மாற்றப்பட்டார். விட்னே திரும்பவும் முன்னேறினாள்.

முப்பது வயதில் அந்த மாபெரும் கம்பெனியின் துணைத் தலைவர் பதவிக்கு அடுத்த ஆள் என்ற முறையில் விட்னே இருந்தான். இந்த முன்னேற்றம் மாபெரும் ஆச்சர்யம்தான். அந்த கம்பெனியிலேயே இளம் வயது மனிதர்களில் அறிவு கூர்மையானவனாகவும் சட்டென்று முன்னுக்கு வரக்கூடிய தேர்ந்த மனிதனாகவும் பார்க்கப்பட்டான்.

பதவி உயர்வுகளுடன் முன்னோர் பற்றிய அறிக்கைகளும் தரப்பட்டன. அவை சில நூற்றாண்டுகள் முற்பட்டவை. எனினும் எந்தவொரு பிரச்னையுமில்லை. விட்னேவும் சிக்கல்களை எதிர்பார்க்கவில்லை. அவ்வளவு பழங்காலத்து விஷயங்களை யாரால் தெரிந்துகொள்ள முடியும்? அப்படியே தெரிந்துகொண்டாலும் அவற்றை நம்பத்தான் இயலுமா?

அலுவலக கேன்டீனில் மிட்சலை சந்தித்தபோது அவன்

மெலிதாக ஆச்சர்யப்பட்டான். அவர் இறுக்கத்தைத் தளர்த்தி அவன் தோளில் கைபோட்டு மென்மையான குரலில் "என்ன விட்னே?" என்றார்.

"யெஸ் சார்." மரியாதை கலந்த குரலில் விட்னே சொன்னான். ஏனெனில் அலுவலகரீதியாகச் சில தொடர்புகளைத் தவிர அவருடன் பேசுவதில்லை. மிட்சல் எப்போதும் தனித்திருக்கும், முரட்டுத்தனமான, தான் என்ற அகம்பாவம் கொண்ட மனிதர். அவரை கம்பெனியின் துணை முதல்வர்கள், கம்பெனி உறுப்பினர்கள், மற்றும் அவர்களுக்குச் சமமான அருகதை உடையவர்கள் மட்டுமே அணுக முடியும்.

"அண்மையில் கிடைத்த உங்களின் முன்னோர் பற்றிய அறிக்கையைப் படித்தேன். அதிலொரு சுவரசியமான சங்கதி இருந்தது. பதிமூன்றாவது நூற்றாண்டில் உங்களுடைய முன்னோர்கள் பழைய இங்கிலாந்தில் இருந்திருக்கிறார்கள். அதேபோல் என்னுடைய முன்னவர்களும் இருந்திருக் கிறார்கள்."

"உண்மையாகவா சார்? அப்படியெனில் ஒருவரையொருவர் அறிந்திருக்க வேண்டும்."

"அப்படித்தான் இருக்க வேண்டும். அப்படியெனில் நாம் இருவரும் பழங்காலத்திலேயே நண்பர்கள், இல்லையா?" என்ற மிட்சல் விட்னேவின் கையைப் பிடித்துக்கொண்டு பதிமூன்றாவது நூற்றாண்டில் விக்கிலிங்டன் வாழ்க்கை முறையைப் பற்றிச் சற்று நேரம் பேசினார்.

விட்னே மாபெரும் உருவங்கொண்ட அந்த மனிதர் சொன்னவற்றை எல்லாம் மரியாதையுடனும் ஆர்வத்துடனும் கேட்டுக்கொண்டிந்தபோதே, இதோ இவர்தான் தன்னுடைய இறுதி இலக்கு என்று நினைத்துக்கொண்டான். இவர்தான் தனக்குத் தேவையான பதவியைத் தக்கவைத்துக்கொண்டு இருக்கிறார். தான் அறுக்கப்போகும் தொண்டைகளிலேயே இவருடையதுதான் மிக முக்கியம். நெடுங்காலம் வாழ்ந்த மன்னன் செத்துப்போய்விட்டான். ஈஸ்டர்ன் கெமிக்கல் தலைவர் ட்ரூ விட்னே! நினைக்கவே இனிப்பாக உள்ளதே.

மற்றவர்களை ஆராய்வதைத் தவிர மிட்சலின் வாழ்க்கையையும், அவரின் பலவீனங்களையும் உளவு பார்த்துக்கொண்டிருந்தான். இந்த முன்னோர் பற்றிய

அணுகுமுறை அவருடைய பலவீனங்களில் ஒன்றாகும். மற்ற உயர் மட்ட அலுவலர்களிடம் இது வரவேற்பு ஏதும் பெறவில்லை என்பது விட்னேவின் கண்டுபிடிப்பாகும். கம்பெனியில் மாபெரும் சாதனைகள் புரிந்த ஒரு மனிதரிடம் இதுபோன்ற சில்லறைத்தனமான விஷயங்கள் இருக்கக் கூடும் என்பதே அவர்கள் நினைப்பாகும். சில சமயங்களில் மிட்சல் அவர்களுக்குப் பாடம் நடத்துவார்.

"கடந்த தலைமுறை என்பது செத்துப்போனதல்ல. கடந்த காலம் நமக்குள் வாழ்கிறது. நம் முன்னோரின் குணங்களையே நாம் கொண்டிருக்கிறோம். எனவே அவர்களின் செய்கைகளுக்கு நாம் பொறுப்பெடுக்க வேண்டும்."

அச்சமயங்களில் அதைக் கேட்டுகொண்டிருக்கும் அலுவலர்கள் சலிப்புடன் தலையாட்டுவதை விட்னே கவனித்துக்கொண்டிருந்தான். மிட்சல் மட்டும் பதவியில் இல்லாமல் இருந்துவிட்டால் முன்னோர் அணுகுமுறை கம்பெனியை விட்டே வெளியேற்றப்படும் என்று விட்னே தெரிந்துகொண்டான். இது மிட்சலின் சர்வாதிகாரத்தில் ஒரு முள்ளாகத் தெரிகிறது. ஒருநாள் இல்லாவிட்டால் ஒருநாள் கம்பெனி உறுப்பினர்கள் கையில் அதுவொரு வாளாக மாறப்போகிறது.

ஆனால், மிட்சலின் பதவிக்கு விட்னே இன்னும் தயாராக வில்லை. அதற்கு முன் துணைத் தலைவராக வேண்டும். தனக்கு முன் இருக்கும் துணைத் தலைவர் எஃப்.கிரிஸ்வூல்டின் இடத்தில் அமர வேண்டும்.

கிரிஸ்வூல்டோ எமகாதகராக இருந்தார். அவர் விட்னேவுக்குத் தகுந்தபடி இளமையாகவும் தன் வேலைகளில் சுறுசுறுப்பாகவும் இருந்தார். எப்படிப் பார்த்தாலும் அவர் பணியிலிருந்து ஓய்வு பெற பதினைந்து அல்லது இருபது ஆண்டுகளாவது ஆகும். அவர் பகுத்தறிவும் எதையும் செய்து முடிக்கும் ஆற்றலும், கூரிய அறிவும், அதிகாரம் மிக்கவராகவும் விளங்கினார். கட்டியமைத்திருந்த பெருத்த புகழானது பலத்த அரணாக விளங்கியது. அதனால் அவரை மிரட்டிப் பணியவைப்பதை நினைத்துக்கூட பார்க்க முடியாது. விட்னேவின் உணவளிக்கும் தந்திரத்தால் எத்தனை முயன்றும் ஒரு தகவலும் பெற

முடியவில்லை. முந்தைய தந்திரம் எதுவும் இவரிடம் பயன்படுத்துவது தனக்கே ஆபத்தாக முடியும் என விட்னே நினைத்தான். பயன்படுத்தினாலும் இந்த மனிதரிடம் அது செல்லாத காசாகிவிடும். அந்த அளவுக்கு கிரிஸ்வூல்ட் உயர்ந்த ஓரிடத்தில் ஆஜா£னுபாகுவாக அமர்ந்திருந்தார்.

கிரிஸ்வூல்ட் வழியை அடைத்துக்கொண்டிருந்தார்.

விட்னே தனக்குத்தானே விவாதங்களை நடத்தி இறுதியில் அந்த முடிவெடுத்தான். மற்றவர் நினைத்தும் பார்க்க முடியாத காரியங்களை செய்தே பழக்கப்பட்டவன் அவன். தாண்ட முடியாத கோட்டைகளைத் தாண்டுபவன்தான். அதற்காக இப்படியா? அவன் மாற்று வழியை சிந்தித்தே விட்டான். அதுவொரு தீவிரமான திட்டம், அபாயகரமான செயல். யாரேனும் இதைப் பற்றிக் கேட்டால், அது கற்பனை கூடச் செய்ய முடியாதது எனச் சொல்வர். இருந்தாலும் தான் கொள்ளப்போகும் பரிசுக்கு அது சாதாரண காரியம் தான்.

கிரிஸ்வூல்டுக்கு எதிராக அந்த ஒரு காரியத்தைத் தவிர வேறெதாலும் பயனில்லை. அவனுக்கு துணைத் தலவைர் பதவி மீது பயங்கர மோகம். வலது கை எப்படி அவனுக்கு வேண்டுமோ அதேபோல்தான் அப்பதவியும் வேண்டும்.

விட்னே தன் மனதைத் தயார்ப்படுத்திக்கொண்டதும், வழக்கம்போல் சமயோசிதமாகச் செயல்பட்டான். மிக எச்சரிக்கையுடன் பல வழிகளில் ஆராய்ந்த பின் தனக்குத் தேவையான ஒருவனைக் கண்டுகொண்டான்.

"நான் எக்கச்சக்கமாகப் பணம் தருவேன். ஆனால், எனக்கு இந்தக் காரியம் முழுவதுமாக முடிய வேண்டும். காயம் மட்டுமே போதாது. ஏனெனில் அடிபட்ட மனிதர்கள் குணம் அடையக்கூடும்" விட்னே அந்த நபரிடம் சொன்னான்.

புருவங்களே அற்ற அந்த ஒல்லி மனிதன் விளக்கின் அடியில் இருந்துகொண்டு, "மாமே! நா டப்பு வாங்குறேன். ஒரு ஆளு பின்னாடி போனா அவன் கதை முடிஞ்சுடும். கவலைய விடு" என்று மென்மையான குரலில் பேசினான்.

அந்த பயங்கர விபத்து நடந்ததைக் கேட்டு மொத்த அலுவலகமே அதிர்ந்துபோனது. துணைத் தலைவர் கிரிஸ்வூல்டை அடையாளம் தெரியாத கார் என்று இடித்து

விட்டுச் சென்றது. காரைக் கண்டுபிடிக்க முடியவில்லை.

இன்னொரு முன்னோர் பற்றிய குறிப்பு விட்னேவின் மேஜையை அடைந்தது. விட்னே துணைத் தலைவர் பதவியைப் பெற்றுக்கொண்டு மிக்க வருத்தத்துடன் சொன்னதாவது: "ஃபிராங்க் கிரிஸ்வூல்டின் பதவியை நான் ஆழ்ந்த வருத்தத்துடன் பெற்றுக்கொள்கிறேன். துணைத் தலைமையின் மாண்பை ஏற்றுக்கொள்ளும் அதே நேரத்தில் இச்சூழ்நிலை எனக்கு மிகுந்த கஷ்டத்தைத் தருகிறது. என்னால் முடிந்தவரை இப்பணியைச் செய்து திரு. கிரிஸ்வூல்டின் மதிப்பை உயர்த்துவேன்."

உண்மையில் விட்னேவுக்கு இக்காரியத்தில் துளிக்கூட குற்றவுணர்வே எழவில்லை. அப்படி இருந்தாலும் அது மறைந்தே போய்விட்டது. அவன் ஏறத்தாழ அவன் விரும்பிய இடத்துக்கு அருகே இருக்கிறான். இனிமேல் எதுவுமே அவன் வழியில் நிற்க முடியாது, ஏதாவது மீறி நின்றால் அதையும் ஒரு கை பார்ப்பான்.

அவன் துணைத் தலைமையைப் பெற்றுக்கொண்ட மூன்றாவது வாரத்தில், புதிதாகக் கிடைத்த அதிகாரம் முதலானவற்றுக்குத் தன்னைத் தகவமைத்துக்கொண்டிருந்த சமயத்தில், பிரசிடென்ட் மிட்சலின் அலுவலகத்திலிருந்து அழைப்பு வந்தது. அவன் இதையும் மேல் மட்ட அலுவலருக்கான ஒரு சந்திப்பே என நினைத்துகொண்டே அறைக் கதவைத் திறந்து உள்ளே போனான். அப்போது மிட்சலின் முகத்தில் தாண்டவமாடிய கடுகடுப்பை எதிர்பார்க்கவில்லை. அங்கே அவர்கள் இரண்டு பேரைத் தவிர வேறு யாருமில்லை. அவன் கதவை மூட, தானியங்கிப் பூட்டு பூட்டிக்கொள்ளும் சத்தம் கேட்டது.

"உட்காருங்கள்" என்று மிட்சல் உறுமினார். விட்னே நாற்காலியில் அமர்ந்தான். மிட்சல் கால் முட்டிக்கும் உயரம் குறைந்த மாபெரும் ஜன்னல் அருகே சென்று, நகரத்தின் பரப்பளவை அளந்துகொண்டே மூச்சை இழுத்தார்.

"குளிர்சாதன வசதி நன்றாகவே உள்ளது எனினும் இயற்கைக் காற்றையே தினந்தோறும் சுவாசிக்க விரும்புகிறேன்" அவர் சொல்ல விட்னே அமைதியாக இருந்தான்.

மிட்சல் திரும்பி வந்து மேஜை இழுப்பறையைத் திறந்து ஒரு ஃபைலை எடுத்துப் புரட்டினார். உடனே அவருடைய அடர்ந்த புருவங்கள் மேலே உயர்ந்தன. விட்னேவின் மீது படிந்த அவருடைய ஆழமான பார்வை, ஒரு கணம் அவனை நிலைகுலையச் செய்தது. இதனால் தன் முகத்தைத் திருப்பிக் கொண்ட விட்னே சுவரிலிருந்த மிட்சலின் முன்னோர்களின் ஓவியங்களைப் பார்த்தான்.

"புதிதாகச் சில செய்திகள் வந்திருக்கின்றன. அவை தாமதமாகத்தான் வந்தன. இங்கிலாந்தில் இருக்கும் எமது ஆய்வாளர்கள் செஸ்சியரிலுள்ள விக்கிலிங்டனில் ஒரு பழைய பேழையைக் கண்டுபிடித்திருக்கின்றனர். அந்தப் பேழையில் உனது முன்னோர் சம்பந்தப்பட்ட விஷயம் இருந்திருக்கிறது" என்றார் மிட்சல்.

"என்னுடைய முன்னோர்?" விட்னே இதைச் சற்றும் எதிர்பார்க்கவில்லை.

"ஆமாம். விக்கிலிங்டனில் வில், அம்பு செய்தவரான உனது முன்னோர் காரித் விட்னேயின் மரண வாக்குமூலம். வாக்குமூலத்தின் 1117, ஆகஸ்ட் 12. ஏறத்தாழ எண்ணூறு ஆண்டுகளுக்கு முன்னால். படிக்கிறேன் கேளுங்கள்."

மிட்சல் படித்தார்.

"காரித் விட்னேவாகிய யான், ரொட்டி வணிகரான மிட்சல் பெரும் செல்வந்தரென அறிந்துகொண்டேன். மேற்கொண்டு இருளடர்ந்த வேளையில் அவரிருப்பிடம் சென்று, ஜன்னலூடே பார்க்கையில், அவர் தனிமையில் இருப்பதைக் கண்டுகொண்டு கதவை தட்ட, அவர் திறந்தார். உடனே நான் சுத்தியலால் அவர் தலையில் பன்முறை தாக்க மிட்சல் இறந்துபோனார். பிறகு உள்ளறையில் இருந்த ஏராளமான பொன், பொருட்களைத் தூக்கிக்கொண்டு அங்கிருந்து தப்பி ஓடி அவற்றை மறைத்துவைத்தேன். ஒருவருக்கும் இதுபற்றிச் சந்தேகம் ஏற்படவில்லை. பின்னர் விக்கிலிங்டனில் அந்தச் செல்வத்தையெல்லாம் செவழித்த போதிலும் ஒருவரும் கேள்வி கேட்கவில்லை. ஆனால், இப்போதென் மரணப்படுக்கையில் செய்த குற்றம் என்னை அரித்தெடுப்பதால் இந்த வாக்குமூலத்தை எழுதுகிறேன்."

அவ்விடத்தில் சற்று நேரம் அமைதி நிலவியது. "இதை வைத்துப் பார்க்கும்போது உனது முன்னோர்களில் கொலைகாரரும் உள்ளார் எனத் தெரிகிறது.

கவலைக் குறி தன் முகத்திலோ வார்த்தைகளிலோ தெரியாதவண்ணம் விட்னே பேசினான். மிட்சல் இந்த விஷயத்தை எவ்வளவு கடுமையாக எடுத்துக்கொண்டிருப்பார் என்று அவனுக்குத் தெரியும். அந்த விஷயத்தைச் சாதாரணமாக்க வேண்டும். அவன் சட்டென மெல்லிய குரலில், "கேட்பதற்கே நாராசமாக இருக்கிறதே! அந்தக் கிழவனைத் தள்ளி வைத்துவிட்டேன். அதே சமயம் என்னுடைய மற்ற முன்னோர்களின் நடத்தை நன்றாக உள்ளதே! நான் சொல்வது சரிதானே சார்"

மிட்சலின் கொந்தளிப்பான உணர்ச்சி சற்று மாறவில்லை. "உன் முன்னோர் கொலை செய்த செல்வந்தரின் பெயரைக் கவனித்தாயா? ரொட்டி வணிகர் மிட்சல் என்னுடைய முன்னோர்."

விட்னேவுக்கு மெள்ளப் புரிய ஆரம்பித்தது. அவன் தவிப்புடன் மிட்சலைப் பார்த்தான். எவ்வளவோ பேர் இருக்கும்போது காரித் ஏன் மிட்சலைத் தேர்ந்தெடுத்தான்? அவன் சிரிப்பொன்றை வலிய உதிர்த்தான். "அந்தச் சம்பவம் நடந்தது பனிரண்டாவது நூற்றாண்டில். இதற்காக என் மீது ஒழுங்கு நடவடிக்கை எடுக்க மாட்டீர்கள் அப்படித்தானே?"

"நல்லது. நம் முன்னோர்களின் செயல்களுக்கு நாம் பொறுப்பேற்றுக்கொள்ள வேண்டும். எனினும் அந்தரங்க விவகாரங்களை கம்பெனியோடு முடிச்சுப்போட நான் விரும்பவில்லை. இவ்விடத்தில் பிரதான விஷயம் என்னவென்றால் உங்கள் முன்னோர் செய்திருக்கும் கொலை துணைத் தலைமைப் பொறுப்பைத் தவற விட்டுவிடுகிறது. நீங்கள் உடனடியாக அப்பொறுப்பிலிருந்து விலக வேண்டும்."

"அக்காரணத்தாலா என்னை விலகச் சொல்கிறீர்கள்?"

"நம்முடைய நிகழ்கால விதிகளின்படி இந்தப் பதவியை நீங்கள் வகிக்க முடியாது. ஆனால் இதற்குக் கீழுள்ள பதவியை நீங்கள் வகிக்கலாம். சாரி விட்னே."

விட்னேவின் உள்ளத்தில் கசப்பு அலைகள் இரைச்சலுடன்

அடித்தது. இவ்வளவு தூரம் வந்தும் பற்பல அபாயங்களைச் சந்தித்தும் இந்த மனிதன் கொண்டிருக்கும் சிறுபிள்ளைத்தன புத்தியால் வாழ்வே பறிபோகிறதே... திடீரென்று ஒரு விநாடியில் - இவனோடு சண்டை போட்டால் என்ன என்று தோன்றியது. கம்பெனி உறுப்பினர்களிடம் புகார் மனு கொடுத்து மற்ற கம்பெனி அலுவலர்களையும் ஒன்று சேர்த்து இவனுக்கெதிராக போராட்டம் நிகழ்த்த வேண்டும். பிறகு அதெல்லாம் வேலைக்காகாத விஷயம் என்று புரிந்தது. மிட்சல் ஒரு அசைக்க முடியாத மாமனிதன். ஈஸ்டர்ன் கெமிக்கல்ஸ் அவரின் தலைமையின் கீழ்தான் அபரிதமான வளர்ச்சியைக் கண்டது. மற்ற பெரிய மனிதர்களைப் போலவே இவனிடமும் சில கிறுக்குதனங்கள் உள்ளன. இல்லை, மிட்சலை இப்போது வீழ்த்த முடியாது. அவனுக்கு சில வருடங்களாவது பிடிக்கும்.

யோசித்தவை எல்லாம் பயனற்றவை எனக் கண்டு கொண்டதும் விட்னே, "சரி அதெல்லாம் பழங்காலத்தில் நடந்தன. தற்காலத்தைப் பற்றி பேசுவோம். என்னுடைய ஒட்டுமொத்தத் திறமை என்ன? ஈஸ்டர்ன் கம்பெனியில் நான் உழைத்த உழைப்பென்ன? அவற்றையெல்லாம் தாங்கள் கணக்கில் எடுத்துக்கொள்ளவில்லையா?" என்று கேட்டான்.

மிட்சல் மெதுவாக எழுந்து ஜன்னலருகே சென்று நகரத்தைப் பார்த்தார். இறுதியில், "ஆம், உண்மைதான். நான் ஏற்கெனவே சொன்னதுபோல் வேறு சில பொறுப்புகளை வகிக்கலாம். ஆனால், துணைத் தலைமைக்குக் கீழ்தான்."

மிட்சல் பேசிக்கொண்டிருந்தபோதே விட்னேவின் மனதில் திட்டம் ஒன்று பளிச்சிட்டது. அந்த மனிதன் ஜன்னலிலிருந்து ஓரடியோ இரண்டடியோதான் தள்ளி இருந்தான். ஜன்னல் வேறு நன்கு திறந்திருந்தது. நீளமாக இருந்த ஜன்னலின் கீழ் ஓரம் அவன் முட்டி உயரமே இருந்த. ஒரே ஒரு அழுத்தமான தள்ளு போதுமானது. விட்னே, அதுவொரு விபத்து என்றே சொல்லிவிட வேண்டும். வேறு எவரால் அதை நிரூபணம் செய்ய முடியும். ஜன்னலின் முன் நின்று ஆழ மூச்சுவிடும் மிட்சலின் பழக்கம் அலுவலகம் முழுக்க நன்கு தெரியும். வருடக்கணக்கில் ஜன்னலருகே நின்ற அவர் திடீரென்று தோன்றிய மண்டைக் கிறுகிறுப்பால் தவறி விழுந்து விட்டார்.

அவன் மேஜையில் இருக்கும் அந்த அறிக்கையை அழித்துவிடலாம். மிட்சல் போய்விட்ட நிலையில் வேறு யாரும் சந்ததி பற்றிக் கவலைப்படப்போவது இல்லை. கம்பெனி உறுப்பினர் முதல் அடி மட்ட ஊழியர்கள் வரை அந்த முட்டாள்தனத்தைத் தூக்கி எறியவே விரும்புவார்கள். அவன் துணைத் தலைவர் பதவியை தக்கவைத்துக் கொள்ளலாம். ஏன், காலியாக இருக்கும் மிட்சலின் பதவிக்கும் விண்ணப்பிக்கலாம்.

விட்னே மெதுவாக எழுந்தான். ஆம் இதை அவன் செய்யத்தான் போகிறான். கிரிஸ்வூல்டுக்கு முன்னரே செய்த காரியம்தானே அது. இந்த முறை முடிவெடுப்பது சுலபமாகி விட்டது. ஒரே ஒரு தள்ளல் அவ்வளவுதான். அவன் விரும்பியது எல்லாம் கிடைத்துவிடும்.

விட்னே ஓரடி எடுத்து வைத்துப் பின் மிட்சலை நோக்கிப் பாய்ந்தான். அந்த மாமனிதன் தன் காலடி ஓசையைக் கேட்பானென்றோ அவ்வளவு விரைவாகத் திரும்புவான் என்றோ எதிர்பார்க்கவில்லை.

தன் கைகள் மிட்சலின் உலக்கைக் கைகளுக்குள் மாட்டிக் கொண்டிருப்பதையும் கண்கள் தன்னுடைய பார்வையோடு கலந்திருப்பதையும் கண்டான். விடுபடப் போராடினான். ஆனால், பயனில்லை. அந்த மனிதர் அதீத பலம் வாய்ந்தவராக இருந்தார்.

"என்னை கொலை செய்வாயா? நீ செய்யப் பார்ப்பாய் என்று நினைத்தேன். என் கொள்கை சரிதானே? உனது சந்ததியில் கொலை செய்யும் தன்மை பொதிந்து உள்ளது, ரத்தம் மட்டுமே சொல்லும்" மிட்சல் அமைதியே வடிவாக பேசினார்.

"என்னை விடுங்களேன்" விட்னே கெஞ்சினான்.

"இதோ ஒரு கணத்தில் விட்டுவிடுகிறேன்."

அவருடைய கண்கள் குற்றவாளியைத் துருவும் நீதிபதியினுடையதைபோல் இருந்தது.

"விட்னே! இப்போதைய சட்டம் உனக்கெதிராக எந்த நடவடிக்கையையும் எடுக்க முடியாது, எனக்கெதிராக நீ செய்ய முயன்ற குற்றத்துக்கு அந்த அளவு தண்டனை வழங்க முடியாது. உன்னை இப்படியே விட்டுவிட்டால் உன் நோக்கத்துக்கு தகுந்தபடி நீ யாரையேனும் கொலைகூடச் செய்வாய்.

இவ்விடத்தில் மற்றொரு விஷயத்தையும் உனக்கு சொல்லியாக வேண்டும். காரித் விட்னே தான் செய்த கொலைக்கு தண்டனை ஏதும் அனுபவிக்கவில்லை.”

ஒரு விநாடி வரை இருவரின் பார்வைகளும் ஒன்று கலந்தன. பிறகு மிட்சல் “நல்லது. நீ சொன்னபடியே உன்னை விட்டுவிட்டேன். ஆனால்...” என்றபடி விட்னேவை ஜன்னலுக்கு வெளியே பிடித்துத் தள்ளினார்.

-மைக்கேல் ஜுராய், 1963

# 8

## ஒலித்த நீதி

ஓர் உயிரை வதம் செய்வது 'கொலை' என்று ஆகாவிட்டாலும் வதை வதைதானே? இந்த வகையில் ஹெர்பர்ட் மிஸ்டர் கோன்ஸை, கொலை செய்தார் என்பதில் சந்தேகம் இல்லை.

ஹெர்பர்ட் இருபத்தொன்பது வயது நிரம்பிய, மெலிந்த முகம்கொண்ட ஒரு தீவிரமான மனிதர். பெரிய நிறுவனம் ஒன்றில் உதவிக் கணக்காளர். கொஞ்ச நாட்களாகவே வேலைப் பளு அதிகம். எனவே சற்றுப் படபடப்பாகவே இருந்தார்.

மிஸ்டர் கோன்ஸை அவர் சாகடித்த அந்த இரவில், ஹெர்பர்ட் தன்னுடைய அபார்ட்மென்டின் முன்னறையில், ஜன்னலைப் பார்த்தாற்போல் அமர்ந்து, அலுவலக வேலையைக் கவனித்துக்கொண்டிருந்தார். சம்பவ இரவு கொஞ்சம் வெப்பம், அதனால் சற்று வெறுப்பு, என ஹெர்பர்டின் பணியைச் சிக்கலாக்கிக்கொண்டிருந்தது. வியர்வை வேறு நெற்றியிலிருந்து உருண்டு கண்களில் தெறித்து மூக்குக் கண்ணாடியை மறைத்தது. மணி 9.30. அவரின் மனைவி ஹெலைனி படுக்கையறைக்குப் படிக்கச் சென்றுவிட்டாள். 10.00 மணிக்கு அவள் வழக்கமாகப் பார்க்கும் டி.வி. ஷோவைப் பார்க்க முடியாது. மீறிப் பார்த்தால் டி.வி. சப்தம் பாவப்பட்ட ஹெர்பர்டின் கவனத்தைத் திசை திருப்பிவிடும் என்பதை அவள் அறிவாள்.



திரு. கோன்ஸ் ஒரு இன்ஷூரன்ஸ் சேல்ஸ்மேன். அந்த இரவில் அந்த அபார்ட்மென்ட் கட்டட வாசலுக்கு அவர் எதற்காக வந்தார் என்பது யாருக்கும் தெரியாது. இரவு 9.45. தன் காரின் கதவைத் திறந்த கோன்ஸ், தன் வண்டிக்கு அடுத்தாற்போலிருந்த கார்

ஒன்று தாறுமாறாக நிறுத்தப்பட்டு இருப்பதைக் கண்டார். அந்த வண்டியை சரி செய்யாமல் தன்னுடையதை வெளியில் எடுக்க முடியாது. சட்டென்று டிரைவர் சீட்டில் அமர்ந்துகொண்டு தொடர்ச்சியாக ஹாரனை ஒலிக்கத் தொடங்கினார். அவ்வாறு செய்தால் அந்த வண்டியின் சொந்தக்காரன் வந்துவிடுவான் என்பது அவர் எண்ணம். ஹாரனின் பெருத்த ஒலி அமைதியான இரவைத் தாறுமாறாகக் கிழித்தது. பத்து நிமிடம் தொடர்ந்தாற் போல் அந்த ராக்கெட் சப்தம் (நீதிமன்றத்தில் அவ்வாறு வர்ணிக்கப்பட்டது) ஒலித்ததும், ஹெர்பர்ட்டின் பக்கத்து போர்ஷனில் வசிக்கும், வயதில் கொஞ்சம் மூத்த நபர், பெயர் தாம்ஸன், தன்னுடைய ஜன்னலில் தோன்றி "ஐயோ அதைக் கொஞ்சம் நிறுத்துகிறீர்களா?" என்று கூறினார்.

"இந்த கார் யாருடையது என்று உமக்குத் தெரியுமா?" கோன்ஸ் அங்கிருந்தே உரத்தக் குரலில் கேட்டார்.

"தெரியாது."

"பிறகு இந்த இரவு முழுக்க என்னை என்ன செய்யச் சொல்கிறீர்?" என்று கேட்ட கோன்ஸ் மேலும் மூன்று முறை ஹாரனை ஒலித்தார். நீண்ட பெட்டிகேஷ் வழக்கில் மண்டை காய்ந்துகொண்டிருந்த ஹெர்பர்ட்டை இந்தச் சப்தம் இன்னும் குழப்பியது.

"இந்தத் தெரு மொத்தத்தையும் எழுப்பப் போகிறீர்களா? நான் காலையில் சீக்கிரம் வேறு எழுந்துபோக வேண்டும்" என்று தாம்ஸன் கூறினார்.

"அது உங்களின் பிரச்னை. என்னுடைய மனைவிக்கு கோபம் மூக்கின் மேல் ஏறுவதற்குள் நான் வீடு செல்ல வேண்டும்" என்ற கோன்ஸ் மீண்டும் மீண்டும் ஹாரனை ஒலித்து ஏற்கெனவே எரிச்சல் ஊட்டிய இரவை இன்னும் நரகமாக்கினார்.



இந்தச் சமயத்தில்தான் ஹெர்பர்ட் தன்னுடைய தலையை ஜன்னலுக்கு வெளியே நீட்டி "இழவெடுத்த சப்தத்தை கொஞ்சம் நிறுத்துங்கள்" என்று கத்தினார்.

கோன்ஸ் தன்னுடைய பதிலை ஹாரன் சப்தம் மூலம் வெளிப்படுத்தினார்.

சென்ற கிருஸ்துமஸ் பண்டிகையின்போது ஹெர்பர்ட்டுக்கு உருண்டையான செராமிக் பேப்பர் வெயிட்டொன்று அலுவலகத்தில் பரிசாகத் தரப்பட்டது. முன் யோசனை ஏதுமின்றி, ஹெர்பர்ட் அதை காரை நோக்கி விட்டெறிந்தார்.

அதுவொரு எதிர்பாராத விபத்தென்று போலீஸே

ஒப்புக்கொண்டது. பேப்பர் வெயிட், டிரைவர் சீட்டுக்கு கொஞ்சம் தள்ளி முன்புறக் கண்ணாடியை உடைக்க, உடைந்த கண்டாடித் துண்டொன்று கோன்ஸின் கழுத்தை அறுத்துவிட அவரின் உயிர் பட்டென்று அடங்கியது; அதேபோல் ஹாரன் சப்தமும்.

ஹெர்பர்ட்டின் வக்கீல், ஹெர்பர்ட்டுக்கும் ஹெலைனிக்கும் தைரியம் சொன்னார். "இதுவொரு சாதாரண வழக்கு. இக்கட்டான அந்த நேரத்தில் சட்டென வெளிப்பட்ட கோபத்தில், தான் என்ன செய்கிறோம் என்று அறியாமலே செய்தது இது. அதனால் கவலைகொள்ள ஒன்றுமில்லை."

ஆனால், அரசாங்க வக்கீலின் வாதமோ வேறு மாதிரியாக இருந்தது. "குற்றம் சாட்டப்பட்டவர் ஒரு பட்டதாரி, பெரிய நிறுவனத்தில் ப்ரொஃபஷனல் வேறு. நல்லது எது தீயது எது என்ற வேறுபாடு தெரியும். இவ்வளவு இருந்தும் தன்னுடைய கோபத்துக்கு அவர் அடிமையாகி இருக்கக் கூடாது. இறந்தவர் அவரைத் தொந்தரவு செய்தார் என்பதை கணக்கில் எடுத்துக்கொள்ளக் கூடாது. ஏனென்றால் ஹாரன் ஒலிப்பது சட்டப்படி ஒரு குற்றமே அல்ல. ஒரு உயிர் அநியாயமாகக் கொல்லப்பட்டுவிட்டது. எனவே கொலைக்கு உண்டான தீர்ப்பை வழங்க வேண்டும்."

நீதிபதி பொறுப்பை ஜூரிகளிடம் விட்டுவிட அவர்களும் பிற்பகலில் காணாமல் போய்விட்டனர். ஹெர்பர்ட் தன்னுடைய செல்லுக்கு திரும்பினார். இரவு மணி 7.00. அப்போது பயந்துபோயிருந்த ஹெலைனிடம் "நம்முடைய வழக்கில் திரை மறைவு ஏதுமில்லை. என்ன காரணத்தால் அவர்கள் நேரத்தை வீணடிக்கிறார்கள் என்று தெரியவில்லை. கவலைப்படுவதற்கு ஏதுமில்லை என்றாலும் ஜூரிகளின் மூடுமந்திரமான போக்குத்தான் வயிற்றைக் கலக்குகிறது" என்று வக்கீல் சொன்னார்.



இரவு மணி 9.00 எந்த முடிவுக்கும் வர இயலவில்லை என்று சொன்ன ஜூரிகள் தங்களின் ஹோட்டல் அறைக்குத் திரும்பிப்

போய்விட்டனர். ஹெர்பர்டின் வக்கீல் முகத்தில் கவலை தோன்ற ஆரம்பித்துவிட்டது.

“எந்த முடிவும் எடுக்காமல் திணறுவதே நமக்கு வெற்றிதான். இந்த வழக்கு பற்றி அரசாங்கம் திரும்பவும் முயற்சி செய்யாது என்பது நிச்சயம். வீட்டுக்குச் சென்று சற்று நேரம் தூங்குங்கள். காலை 10.00 மணிக்கு இதே இடத்தில் பார்க்கலாம்” வக்கீல் ஹெலைனியிடம் சொன்னார்.

மறுநாள் காலை சரியாக 10.13-க்கு நீதிமன்ற கிளார்க்கிடம் ஜூரிகள் ஒரு முடிவுக்கு வந்துவிட்டனர் என்று அரசாங்க ஊழியனால் தெரிவிக்கப்பட்டது. ஹெர்பர்ட் அழைத்து வரப்பட்டார். நீதிமன்றத்தைக் கண்களால் துழாவிய அவர் “என் மனைவி எங்கே?” என்று வக்கீலிடம் கேட்டார்.

“தெரியாது. வந்திருக்க மாட்டார் என்றுதான் நினைக்கிறேன்.”

“ஆனால், ஹெலைனி வராமாலிருக்கமாட்டாளே?”

“அமைதியாக இருங்கள் ஜூரிகள் வருகிறார்கள்.”

ஜூரிகள் வந்து அமர்ந்தனர். அவர்களின் முகத்தில் களைப்பும் தூக்கமின்மையும் தாண்டவமாடியது. அவர்கள் ஒருவரையொருவர் மாறி மாறி முறைத்துக்கொண்டது ஹெர்பர்ட்டின் வக்கீலைக் கொஞ்சம் கலக்கி, புருவங்களை உயர்த்தச் செய்தது. ‘பிரதிவாதி தற்காலிகமாக தன்னிலை இழந்துவிட்டதால்தான் இந்தச் சம்பவம் நடந்தது. எனவே அவர் குற்றமற்றவர்’ என்று தீர்ப்பு வாசிக்கப்பட்டது.

வக்கீல் ஆழ்ந்த பெருமூச்சுடன் ஹெர்பர்டின் கைகளைக் குலுக்கினார். ஹெர்பர்ட்டின் முதலாளி முன்னுக்கு வந்து அவரின் மெலிந்த தோளைத் தட்டிக் கொடுத்தார். தாம்ஸன் தர்மம் வென்றது என்றார். அவருடைய மனைவியோ ஹெர்பர்ட்டைக் கட்டிப்பிடித்துக்கொண்டார்.

ஆனால், ஹெர்பர்ட்டின் கண்கள் நீதிமன்றத்தின் உட்புறத்தை வெறித்துக்கொண்டிருந்தன. தன்னுடைய சந்தோஷத்தை பகிர்ந்துகொள்ள ஹெலைனி அங்கில்லை. பிறகு எல்லோரையும் விலக்கிக்கொண்டு நீதிமன்றத்துக்கு வெளியே வந்தார் - மனைவி வெளியிலிருப்பாள் என்ற எதிர்பார்ப்பில். ஆனால், அவள் இல்லை. உடைந்துபோன மனதுடன் வாடகைக்

காரைப் பிடித்துக்கொண்டு தன்னுடைய அபார்ட்மென்ட்டுக்கு விரைந்தார்.

வீட்டில் ஹெலைனி ஆழ்ந்த தூக்கத்தில் இருப்பதைக் கண்டு திணறலும் கோபமும் அவரைக் கவ்விக்கொள்ள தூக்கத்தில் இருந்து அவளை எழுப்ப உலுக்கினார். "உடம்பு சரியில்லையா? எதற்காக நீதிமன்றம் வரவில்லை? நான் குற்றமற்றவன் என்று கூறிவிட்டார்கள்."

"தெரியும்" ஹெலைனி தூக்கத்திலேயே முனகினாள். பின் அரைகுறை நினைவுடன் அவரை முத்தமிட்டவள், "சாரி டியர் கொஞ்சம் நன்றாகவே தூங்கிவிட்டேன்" என்றாள்.

"என்னது தூங்கிவிட்டாயா? நீ அங்கிருப்பாய் என்று எவ்வளவு எதிர்பார்த்தேன். குறைந்தபட்சம் நம்முடைய காரையாவது கொண்டு வந்து நிறுத்தியிருக்கலாம். ஒருவேளை வேறு ஏதாவது நடந்து..."

"சாரி டியர், கார் ஸ்டார்ட் ஆகாது, பேட்டரி பவர் போய் விட்டது. ஏனெனில் அந்த ஜூரிகள் தங்கியிருந்த ஹோட்டலின் வாயில் முன்னே, நேற்றிரவு முழுவதும் நம்முடைய காரின் ஹாரனை ஒலித்துக்கொண்டிருந்தேன்."

-ரிச்சர்ட் ஹார்ட்விக், 1965

# 9

## பைப் ஸ்மோக்கர்

பொதுவாக மழையில் நடப்பதை நான் பொருட்படுத்துவது இல்லை. ஆனால், இந்த முறை, மழை சரஞ்சரமாய் இறங்கிக் கொண்டிருக்க, நானோ இன்னும் பத்து மைல் தூரம் நடக்க வேண்டியிருந்தது. இதனால் முன்னாலிருந்த கிராமத்துக்கு ஒரு மைல் தூரம் முன்னதாக இருந்த ஒரு வீட்டினருகே நின்று, தோட்டக் கதவு வழியாக உள்ளே நோக்கினேன். ஆனால், உடனே நம்பிக்கையிழந்தேன். காரணம், அந்த வீடு ஆளரவமற்று, திரைச்சீலைகளற்ற ஜன்னல்கள் இழுத்துச் சாத்தப்பட்டிருந்தன.

முதல் மாடியில் ஒரு ஜன்னல் மட்டும் திறந்திருக்க அதனூடே வெற்றுச் சுவர்களும் மாடமும், நெருப்பெரியாக் கணப்பும் பார்வைக்குப் புலப்பட்டன. அந்தத் தோட்டம்கூட புல்லடர்ந்து காடுபோல் காட்சியளித்தது. அதை தோட்டமென்றே சொல்ல முடியாது. ஆனால், நேர் நேராகப் போடப்பட்டிருந்த பாதைகளும், காற்று வீசும்போதெல்லாம், புற்களின் மேல் மழை நீரைச் சிதறடித்த லில்லி மலர்ப் புதர்ச் செடிகளும் அதைத் தோட்டம் என்றுதான் கூறின.



அந்நேரம் லில்லி மலர்ப் புதர்களின் பின்னாலிருந்து ஒருவர் தோன்றி, என்னை நோக்கிப் பாதையில் நடந்து வருவதைக் கண்டு எந்த அளவுக்கு வியப்படைந்து போயிருப்பேன் என்பதை நீங்கள் கற்பனை செய்து கொள்ளலாம். அவர் அங்கிருந்த ஒரே காரணத்தால் மட்டுமே நான் ஆச்சர்யம் அடையவில்லை; அந்தக் கொட்டுகிற மழையில் தலையில் எதுவும் அணியாமல், எந்த நோக்கமின்றி உலவிக்கொண்டிருப்பதைக் கண்டும்தான் வியப்படைந்து போனேன்.

அவர் கொஞ்சம் குண்டாக, ஒரு மதகுருவைப்போல அங்கி அணிந்து, சற்றே வழுக்கையான தலையில் சாம்பல் வண்ண முடியுடனும், சுத்தமாக ஷவரம் செய்து வீங்கின தலையுமாக, வில்லியம் பிளேக் ஓவியங்களில் உள்ளதைப்போல தீவிரப் பார்வை கொண்டவராகத் தெரிந்தார். பெரியவர். அப்போது அவரின் இரண்டு கைகளும் உணர்ச்சியற்றதைப் போல, இரண்டு பக்கங்களிலும் தொங்கிக்கொண்டிருப்பதைக் கண்டேன். அவருடைய உடையும், அவரின் முகத்தில் அருவியென வழிந்த மழையும் அவரை மிக வினோதமாகக் காட்டின. அந்த மழையை அவர் சற்றுக்கூட கண்டு கொண்டதாகத் தெரியவில்லை. ஆனால், நான் கண்டு கொண்டேன். அது என் தலைக்குள் ஊடுருவி முதுகுத் தண்டை சில்லிட வைத்தது.

"எக்ஸ்கியூஸ்மி. நா உள்ள வரலாமா?"

அவர் திடுக்கிட்டுப்போய் புதிர் வழியும் பார்வையால் என்னுடைய பார்வையை மோதினார். "உள்ளே வருவதா?"

"ஆமாம், மழை பெய்யுதே!"

"ஆம், மழை பொழிகிறது. உண்மைதான் ஐயா, தயவு செய்து உள்ளே வாருங்கள்."

தோட்டத்துக் கதவைத் திறந்து, வீட்டின் வாசலை நோக்கிச் சென்ற பாதையில் அவரைப் பின்தொடர்ந்தேன். அவர் வாசலை அடைந்ததும் சற்றே வணக்கமிட்டு என்னை உள்ளே செல்லப் பணித்தார்.

"இந்த இடம் சற்று வசதிக் குறைவாக இருக்கும்" நாங்கள் ஹாலினுள் சென்றதும் இந்த வாக்கியத்தை உதிர்த்தார், "இருப்பினும் தாங்கள் உள்ளே வரலாம். இதோ இடது பக்கத்தில் முதல் கதவு."

அந்த அறை சற்றுப் பெரிதாக, கண்ணாடிகள் பொருத்தப் பட்ட தாழ்வான ஜன்னலை உடையதாக, ஒரு மேஜை, ஒரு பெஞ்ச் மற்றும் கதவருகே ஏற்றப்படாத விளக்கிருந்த சின்னஞ்சிறு மேஜை ஒன்றைக் கொண்டதாக மற்றபடி வெற்றாக இருந்தது.

"தயவு செய்து அமரவும்" அவர் பெஞ்சைச் சுட்டிக்காட்டிய படி சொன்னார். அவருடைய பணிவிலும் மொழியிலும் பழையகாலத் தன்மை தொக்கியிருந்தது. அவர் என்னுடன் அமராமல் நேராக ஜன்னலருகே சென்று மழையில் நனைந்து கொண்டிருந்த தோட்டத்தை உற்றுப் பார்த்துக்கொண்டு இருந்தார். அவரின் கரங்கள், உடலின் இரு பக்கங்களிலும் சோம்பலாகத் தொங்கிக்கொண்டிருந்தன.

"என்னை மாதிரி நீங்க மழையைச் சட்ட பண்ணமாட்டீங்க தானே?" மிக்க அன்புடன் கேட்டேன்.

அவர் சட்டென்று திரும்பினார். அதாவது அவர் தன்னுடைய தலையை மட்டும் திருப்ப முடியாததுபோலவும், அதனால் என்னைப் பார்ப்பதற்காக, ஒட்டுமொத்த உடலையும் திருப்பினார் என்ற எண்ணத்தை என்னுள் அவர் ஏற்படுத்தினார்.

"இல்லை, இல்லை, இல்லை. அது போலில்லை. ஒரு வகையில் சொன்னால் நீங்கள் சுட்டிக்காட்டும் வரை அதை நான் உணரவில்லை."

“ஆனா, நீங்க நனைஞ்சு இருக்கீங்க. டிரஸ்ஸை மாத்திக் கிட்டா நல்லா இருக்குமில்ல?”

“மாற்றுவதா?” அவருடைய பார்வை என்னுடைய கேள்வியைச் சந்தேகப்படுவதுபோல் தோன்றியது.

“உங்களோட ஈர டிரஸ்ஸை மாத்திக்கறது பத்திச் சொன்னேன்.”

“என்னுடைய ஈர உடையை மாற்றுவதா? இல்லை, இல்லை, இல்லை, ஐயா இல்லை. ஆடை நனைந்திருப்பின் திரும்பவும் அவை காய்ந்துவிடும். தவிர, இங்கே வீட்டினுள்ளே மழை பொழியவில்லை அல்லவா?”

நான் அவருடைய முகத்தை ஏறிட்டுப் பார்த்தேன். உண்மையிலேயே பதில் வேண்டுகிறாற் போலத்தான் அந்தக் கேள்வியைக் கேட்டிருக்கிறார் என்பது தெரிந்தது. “இல்லை, இங்க உள்ளே மழை பெய்யலை.” என்றேன்.

“நீங்கள் உண்பதற்கு இங்கு எதுவுமில்லை,” அவர் பணிவுடன் சொன்னார், “கிராமத்திலிருந்து ஒரு பெண்மணி காலையும் மாலையும் வந்து செல்வாள், ஆனால், இந்த இடைப்பட்ட நேரத்தில் என்னால் எதுவும் செய்ய இயலாது.” அவர் தொங்கிக்கொண்டிருந்த கையை மூடி மூடித் திறந்தார். “உங்களுக்கு தேநீர் போன்றவற்றைத் தயாரிக்கத் தெரிந்தால் நீங்களே சமையலறை சென்று தயாரித்துக்கொள்ளலாம்.”

நான் அதை மறுத்துவிட்டு சிகரெட் பிடிப்பதற்கு மட்டும் அனுமதி கேட்டேன்.

“அவ்வாறே செய்யுங்கள். ஆனால், தங்களுக்குத் தருவதற்கு என்னிடம் சிகரெட் இல்லை, எனக்கு முன்பு இங்கே வசித்தவர் சிகரெட் புகைப்பவர். ஆனால், நான் பைப் மட்டுமே பிடிப்பவன்” என்று சொன்ன அவர், தன் பாக்கெட்டிலிருந்து ஒரு பைப்பையும் பையையும் எடுத்தார். அவர் தன்னுடைய கரங்களைப் பயன்படுத்துவதைப் பார்க்க கொஞ்சம் தெம்பாக இருந்தது.

நாங்கள் இருவரும் பற்ற வைத்ததும், நான் திரும்பவும் பேச்சைத் தொடங்கினேன். வந்ததிலிருந்து இவ்வளவு நேரமாக ஒரு விஷயத்தை தெளிவாக உணர்ந்துகொண்டு இருந்தேன். அதாவது ஒவ்வொரு முறையும் நான் மட்டுமே பேச்சை துவக்கிக்கொண்டிருந்தேன். நான் ஏதாவது

பேசவில்லையென்றால், உபசாரம் செய்த விசித்திரமானவர், சூழ்நிலையின் அமைதியை உடைப்பதற்கு எவ்வித முயற்சியும் செய்யாமல், கரங்கள் இரண்டு பக்கங்களிலும் தொங்க, தோட்டத்தையோ என்னையோ வெறித்துக்கொண்டு இருந்தார்.

அந்த வெற்று அறையைப் பார்வையால் துழாவியபடி. "நான் என்ன நெனைக்கிறன்னா, நீங்க கொஞ்ச நாளைக்கு முன்னாடிதான் இங்க குடியேறினீங்க. இல்லையா?" என்று கேட்டேன்.

"குடி வந்ததா?" அவர் சற்றே திரும்பி, தன் தீவிரமான விரும்பத்தகாத பார்வையை என்மேல் வீசினார்.

"இந்த வீட்ல குடிவந்ததை பத்திக் கேட்டேன்."

"இல்லை. அப்படி இல்லை ஐயா! நான் இந்த வீட்டில் சில வருடங்களாக இருக்கிறேன். அல்லது இப்படிக்கூட சொல்லலாம். நான் இங்கே சுமார் ஒரு வருட காலமாக இருந்து வருகிறேன். அதற்கும் முன்னால் வேறொருவர் இந்த வீட்டில் ஐந்து வருடம் வசித்தார்... ஆம், அவர் காலமாகி ஏழு மாதங்களாகிவிட்டன. ஆம், அது உண்மைதான்." அப்போது ஒரு மெலிதான புன்சிரிப்பு அவருடைய முகத்தை அடியோடு மாற்றிவிட்டது.

"நீங்கள் என்னை நம்பமாட்டீர்கள், திருமதி பெல்லோஸ்கூட நான் இங்கே ஏழு மாதங்களாக இருப்பதாகச் சொன்னாள்" என்றார்.

"நீங்க அதுபோலச் சொன்னால், அதை நான் ஏன் நம்பாம இருக்கணும்" என்று பதிலளித்தேன்.



அவர் என்னை நோக்கிச் சில அடிகள் எடுத்து வைத்து தன்னுடைய வலது கையைத் தூக்கினார். நான் தயக்கத்துடன் அதைப் பற்றினேன். அது கனமாக, உணர்ச்சியற்று, சில்லென்று, ஒரு விரும்பத்தகாத உணர்வை என்னுள் ஏற்படுத்தியது.

"நன்றி ஐயா. மிக்க நன்றி. நீங்கள்தான் முதல் ஆள். உண்மையிலேயே நீங்கள்தான் முதன்முதலாக..." அவர் வாக்கியத்தை முடிக்கும் முன்பே நான் கையை விட்டு விட்டேன். அவர் அநேகமாக தன்னைத்தானே மறந்துபோன ஒரு நிலையில் மூழ்கிவிட்டதுபோல் தெரிந்தது. பிறகு அவர் திரும்பவும் பேசினார். "எனக்கு முன்பு இங்கே வசித்தவரின் ஒன்றுவிட்ட சகோதரர் இந்த வீட்டை அவரிடம் விட்டுவிட்டு செல்லாமலிருந்தால் யாவுமே நலமாக இருந்திருக்கும் என்பதில் ஐயமேதுமில்லை. அவர் முன்பிருந்த இடத்தில் சுகமாக வாழ்ந்து வந்தார். அவர் ஒரு மதகுரு என்பதை அறிவீர்களாக." அவர் தன் கைகளை மூடி மூடித் திறந்தபடி தன்னைத்தானே கட்டிக்கொண்டார்.

"இதுதான் அவருடைய ஆடை."

திரும்பவும் அவர் தன்னை மறந்த நிலையில் தொலைந்து போக, மதகுருவின் ஆடைக்குள்ளிருந்த அவருடைய தேகம் மட்டும் என் முன் நின்றிருந்தது. திடீரென அவர்

“பாவமன்னிப்பில் தங்களுக்கு நம்பிக்கை உள்ளதா?” என்று கேட்டார்.

“பாவமன்னிப்பா? அதாவது மத சம்பந்தமான அர்த்தத்திலா கேட்கிறீங்க?” என்று நான் கேட்டேன்.

அவர் ஓரடி முன்னெடுத்துவைத்து என்னைத் தொட்டு விடுமளவுக்கு நின்றார். “நான் சொல்லவருவது என்னவெனில்,” அவர் குரலைச் சற்றுத் தாழ்த்தி, தீவிரமாகப் பார்த்தபடி “ஒரு பாவத்தை, அல்லது ஒரு... ஒரு குற்றத்தை மற்றவரிடம் உரைப்பதன் வாயிலாக நிம்மதி பிறக்கும் என்பதை நம்புகிறீர்களா?” என்று கேட்டார்.

அவர் என்ன சொல்லப் போகிறார்? அந்த அப்பாவிப் பிராணி எதுவும் சொல்ல வேண்டாம் என்றுதான் நினைத்தேன். ஆனால், அவர் தன்னுடைய கேள்வியை இறைஞ்சுகிற தொனியில் கேட்டதால் அதை மறுத்துவிடும் நினைப்பைக் கைவிட்டு விட்டேன். “ஆமாம், அது பத்தி பேசறதால மன பாரத்தைக் குறைச்சுடலாம்” என்று பதிலளித்தேன்.

“தாங்கள் மிக்கக் கருணையுள்ளம் கொண்டவர் ஐயா” அவர் மெலிதான வணக்கத்துடன் சொன்னார். பிறகு அவர் தன் ஒரு கரத்தை சிரத்தையின்றி உயர்த்திக் கீழே போட்டார். “ஆனால், தாங்கள் பொறுமையுடன் கேட்பீர்களா?”

தையல் கடையொன்றில் நிற்கும் மாதிரி பொம்மைபோல் அவர் என் பக்கத்தில் நின்றிருந்தார். அவருடைய கால்கள் என்னுடைய கால் முட்டிகளைத் தொட்டுக்கொண்டிருந்தன. அந்த அளவுக்கு அவர் நெருக்கமாக வந்தது எனக்கு ஒரு மாதிரியாகப் பட தள்ளிவிட்டு விடலாம்போல் தோன்றியது.

“நீங்க அந்த இடத்தில் உட்காரலாமே” என்று நான் அமர்ந்திருந்த பெஞ்சின் மறு முனையைச் சுட்டிக் காட்டினேன். “அப்படி உட்காந்திங்கனா நா வசதியாக் கேக்க முடியும்.”



அவர் தன்னுடலைத் திருப்பி பெஞ்சை ஆர்வத்துடன் உற்றுப் பார்த்தார். பிறகு பெஞ்சின் இரண்டு பக்கங்களிலும் கால்களைப் போட்டமர்ந்து சற்றே என்னை நோக்கிச் சாய்ந்தார். பிறகு அவர் பேசத் தொடங்குமுன் தன்னைத்தானே ஒருமுறை பார்த்துக்கொண்டார். பிறகு ஜன்னலையும் கதவையும் பார்த்தார். அதன்பின் வாயிலிருந்த பைப்பை எடுத்து மேஜையின்மீது வைத்துவிட்டுப் பார்வையை என் மேல் திருப்பினார். "என்னுடைய ரகசியம், அந்த பயங்கரமான ரகசியம் என்னவென்றால் நானொரு கொலைகாரன்!"

அவர் சொன்னது எனக்குத் திகிலூட்டியது. அதே சமயம், அது என்னை ஆச்சர்யத்திலும் ஆழ்த்தியது. அவருடைய அதீதமான விநோதத்தன்மை, ஏதோ ஏடாகூடமான ஒரு விஷயத்தைத்தான் சொல்லப்போகிறார் என்று என்னை ஆயத்தப்படுத்தியிருந்தது. நான் மூச்சை இழுத்துப் பிடித்துக் கொண்டு அவரை வெறிக்க, அவர்கூட கண்களில் பீதியைத் தேக்கியபடி என்னை வெறுத்தார். நான் பேச வேண்டுமென்று அவர் எதிர்பார்த்தாற்போலத் தோன்றியது. ஆனால், என்னால் பேச முடியவில்லை. 'என்னதான் பேசுவது?' பிறகு நான் பேசியது அபத்தமாக

இருந்தது. "ஆக, இதான் உங்க மனச அழுத்திக்கிட்டு இருந்ததா?"

"அது என்னைப் பேய்போல் துரத்துகிறது" பெஞ்சின்மீது வைத்திருந்த இரு கனமான கைகளையும் கோத்துக்கொண்டார். "தங்களுக்குப் பொறுமை உள்ளதா?"

தலையாட்டியபடி, "மேல அது பத்திச் சொல்லுங்க" என்றேன்.

"இந்த வீட்டின் சரித்திரம் மட்டும் அப்படி இல்லாமல் இருந்தால் எதுவுமே நடந்திருக்காது," என்று அவர் தொடங்கினார், "தவிர அந்த மற்றொருவர், எனக்கு முன்பு இங்கிருந்தவர் தேவாலயத்து விடுதியிலேயே தங்கி இருந்திருந்தால் நானும் இங்கே வந்திருக்க மாட்டேன். அதே சமயம் அந்த மற்றொருவர் ஆலயத்து விடுதியில் சுகமாக இல்லை என்பதையும் நான் உரைத்தாக வேண்டும். அங்கே அவருக்குத் தொல்லைகள் பல இருந்தன. அக்காரணந்தொட்டே அவர் இந்த வீட்டில் குடியேறினார்.

துவக்கத்தில் கொஞ்ச நாட்கள் தங்கிப் பார்க்கலாம் என்றுதான் அவர் நினைத்தார். அச்சமயத்தில் இந்த வீட்டில் மரச் சாமானோ பணமோ எதுவுமில்லை. அவர் ஒருவழியாகச் சில பொருட்களை, இதோ இந்த மேஜை, பெஞ்ச், சில சமையலறை சாமான்கள், மாடியிலிருக்கும் மடக்கு மெத்தை முதலியவற்றை வாங்கிப் போட்டார். முதலில் அவர் சிறிது காலம் தங்கிப் பார்க்க வேண்டும் என்ற யோசனையில்தான் இங்கே வந்தார் என்பதை நீங்கள் குறித்து வைத்துக்கொள்ள வேண்டும். தன்னந்தனியாக இருந்த இந்த வீடு அவருக்கு மிகவும் பிடித்து விட்டது. ஆனாலும் நிரந்தரமாகக் குடியேறும் முன்னர் வேறு சில விஷயங்களை அவர் உறுதி செய்துகொள்ள விரும்பினார். சில வீடுகள் பாதுகாப்பான உணர்வைத் தோற்றுவிக்கும். சில நிம்மதியைக் குலைத்துவிடும். அதனால் இந்த வீடு பாதுகாப்பான அம்சத்துடன் உள்ளதா என்பதை அவர் அறிய விரும்பினார்."

அந்த இடத்தில் பேச்சைச் சற்று நிறுத்தியவர், பிறகு உற்சாகத்துடன் சொன்னார். "நண்பரே! தங்களுக்கு நானொரு அறிவுரை சொல்வேன். எப்போதுமே புது வீட்டுக்குச் செல்லும் முன், நன்றாக சிந்திப்பீர்களாக. ஏனெனில் சில வீடுகள் 'அபாயமானவை.'

நான் தலையசைத்தேன். "ஆமாம்! ஈரமான சுவர்கள்,

மோசமான வடிகால் இதுபோல...”

அவர் மறுப்பதுபோல தலையாட்டினார். “அல்ல. விஷயம் அதுவல்ல. அதனினும் சிக்கல் அது. அதாவது வீட்டினுள் நிலவும் அமானுஷ்யத்தைச் சொன்னேன்” அவருடைய வெறித்த பார்வை ஊடுருவுகிறாற்போலிருந்தது. “இந்த வீட்டை தாங்கள் அபாயமாக உணரவில்லையா?”

நான் தோள்களைக் குலுக்கினேன். “காலி வீடுங்க எல்லாமே ஒரு மாதிரியாகத்தானே தெரியும்?” என்று சொன்னேன்.

நான் சொன்ன பதிலை அவர் எதிரொலித்து, “இந்த வீடும் அதுபோல் தோன்றுவதைத் தாங்கள் கவனித்தீர்களா?” என்று கேட்டார்.

அவர் கேட்டதைப் போலத்தான் நானும் மனதில் உணர்ந்திருந்தேன். ஆமாம் இந்த வீடு வினோதமாக இருந்தது. ஆனால், உண்மையில் அந்த வினோதம் அந்த வீட்டால் ஏற்பட்டதல்ல; அவரால் ஏற்பட்டது. அவரின் நடவடிக்கை, பேசுகிற விதம் எல்லாமுமே ஒரு மாதிரியாக இருந்தது. பிறகு, “மத்த காலி வீடுங்க மாதிரிதான் இதுவும் இருக்குது” என்று பதில் அளித்தேன்.

அவர் என்னை வித்தியாசமாக, முறைத்துப் பார்த்தார். “விந்தை! மாபெரும் விந்தை! தாங்கள் அதை உணராதது மாபெரும் விந்தை. ஆம், எனக்கு முன்பு இங்கே வசித்தவர்கூடத் துவக்கத்தில் அதை உணரவில்லை. இந்த அறைகூட - ஆம்! இந்த அறை இருக்கிறதே, இதுதான் இருப்பதிலேயே அபாயமானது. இது அமானுஷ்யமாகத் தோன்ற வில்லையா?”

பெரியவரின் பேச்சு என்னை இருப்புக்கொள்ளவிடாமல் செய்துகொண்டே போக, அந்த இடத்திலேயே பேச்சைத் துண்டித்துக்கொண்டு போய்விட்டிருப்பேன். ஆனால், சூழ்நிலை சரியாகவில்லை. மழை முன்னரைவிட வலுத்திருக்க, இருள் வேறு சூழ ஆரம்பித்தது. அது தவிர, இடி விழும் அபாயமும் உள்ளது.

அந்தப் பெரியவர் பெஞ்சிலிருந்து எழுந்துகொண்டார். “இந்த அறையில் நிலவும் வினோதத்தை இப்போது சுட்டிக் காட்ட முடியுமென்று நினைக்கிறேன். அதை இருட்டில்தான் காட்ட முடியும். இப்போது போதுமான அளவில் இருள் சூழ்ந்துள்ளது.”

அவர் அறையின் ஒரு கோடியிலிருந்த சின்னஞ்சிறு மேஜையின் மேலிருந்த விளக்கை ஏற்றி, அதன் மேல் கண்ணாடிக் குமிழைப் பொருத்தி, எனக்கு இடப்புறமிருந்த மேஜையின்மேல் அதை வைத்தார். "இப்போது மேஜையைப் பார்த்தபடி அமர்ந்துகொள்ளுங்கள்" என்றார்.

நானும் அவர் சொன்னதுபோல செய்தேன். அந்த வெற்று அறையில் எனக்கு முன்னால் திரைச்சீலை இல்லாத ஐந்தாகத் தடுக்கப்பட்ட கண்ணாடி ஜன்னல் இருந்தது.

அவர் தன்னுடைய கனமான கையை என் தோளில் வைத்தபடி, "நீங்கள் இப்போது அமர்ந்திருக்கும் இடத்தில்தான், எனக்கு முன்பு இங்கே வசித்தவர் அமர்ந்துகொண்டு உணவு உண்பது வழக்கம்" என்றார்.

அவர் சொன்னதற்கு நான் பதிலளிக்கவில்லை. திரும்பியும் பார்க்கவில்லை. ஆனால், அவர் என் பின்னால் நின்றிருந்ததால், வயிற்றுக்குள் கலக்கம் பிறந்தது. அவர் அப்போது, "தாங்கள் எதைப் பார்த்தீர்கள் என்பதைச் சொல்கிறீர்களா?" என்று கேட்டார்.

நான் அடிபணிந்து "அந்த ஜன்னலைப் பாக்கறேன்" என்றேன்.

"அவ்வளவுதானா?"

ஜன்னலைத் திரும்பவும் நோக்கினேன். "இல்லை. அதில என்னோட அஞ்சு பிம்பங்களைப் பாக்கறேன்."




"அதுதான், அதுதான். எனக்கு முன்பிருந்தவர் தன்னந் தனியாக அமர்ந்து உணவு உட்கொள்ளும்போது இதையே தான் பார்ப்பார். அவர் அந்த ஐந்து பிம்பங்களும் தனித் தனியாக உணவு உட்கொள்வதைக் கவனிப்பார். அவர் குடி நீரை ஊற்றும்போது அவையும் ஊற்றும். அவர் சிகரெட்டைப் பற்றவைக்கும்போது அவை ஒவ்வொன்றும் ஒவ்வொரு சிகரெட்டைப் பற்ற வைக்கும்."

"அப்படித்தானே ஆகும். ஆக, உங்க நண்பரான அந்த மதகுருவை இதுதான் பயமுறுத்திடிச்சா?"

"ரெவரண்ட் ஜேம்ஸ் பேக்ஸ்டர். அதுதான் அவரின் பெயர். அந்தப் பெயரை மட்டும் தாங்கள் மறந்துவிடக் கூடாது. யாரேனும் தங்களை இந்த வீட்டில் வசிப்பது யாரெனக் கேட்டால் அதற்குத் தாங்கள் ரெவரண்ட் ஜேம்ஸ் பேக்ஸ்டர் என்றுதான் சொல்ல வேண்டும். இந்த விஷயம் யாருக்குமே தெரியாது. நான் நான்..."

"நீங்க சொன்னது வேற யாருக்குமே தெரியாது. அதுக்கு நா உத்திரவாதம்."

"மிக்க சரி," அவர் சட்டென்று தன் குரலைச் சற்றுக் கீழிறக்கி, "இந்த விஷயத்தை நான் சொன்ன முதல் மனிதர் தாங்கள்தான்" என்றார்.

"திரு. பேக்ஸ்டர் காணாமப் போனதைப் பத்தி யாருமே கேக்கலையா?"

அவர் தலையை ஆட்டினார் "இல்லை. அவரை ஆரம்பத்தில் இருந்தே கவனித்துக்கொண்டிருந்த திருமதி.பெல்லோஸுக்குக்கூட இதுபற்றி ஒன்றும் தெரியாது."

நான் தலையைத் திருப்பி அவரின்மேல் விசித்திரப் பார்வை ஒன்றை வீசினேன். "அவங்களுக்கும் தெரியலைனா அதுக்கென்ன அர்த்தம்?"

"அதாவது நான் அவரில்லை என்பதை அவள் அறிய மாட்டாள். அதாவது எங்கள் இருவருக்கும் இடையே அதிகளவு உருவ ஒற்றுமை இருந்தது. தாங்கள் இங்கிருந்து விடைபெறும்போது, அவரின் புகைப்படத்தைக் காட்டுகிறேன், அப்போது தெரியும் தங்களுக்கு."

மழை பெய்கிறதோ இல்லையோ இந்தக் கட்டத்தில் கிளம்புவதாகத் தீர்மானித்துவிட்டேன். நான் இங்கே இருக்க மழையைத் தவிர வேறு காரணம் எதுவும் இருப்பதாகத் தோன்றவில்லை. நான் எழுந்து நின்று, "சரிங்க சார், உங்களோட ரகசியத்தைச் சொல்லி மன பாரத்தை எறக்கிட்டீங்க."

உடனே அந்தப் பெரியவர் படபடத்துப்போனார். அவர் தொங்கி இருந்தத் தன் இரண்டு கைகளையும் கோப்பதும் விடுவிப்பதுமாக செய்தார். அதன் பின் "ஐயா! தாங்கள் விடைபெறும் வேளை இன்னும் வரவில்லை. தாங்கள் பாதிக் கதையைத்தான் கேட்டீர்கள்; மீதியைக் கேட்கவில்லையே. தாங்கள் மேன்மையானவர். நான் மீதியைச் சொல்லி முடிக்கும் வரை சற்றுப் பொறுமை காத்தால்..."

நான் திரும்பவும் பெஞ்சின்மீது அமர்ந்துகொண்டேன். "சரி, நீங்க சொல்றதுக்கு இன்னும் இருக்குதுன்னா சொல்லுங்க."

திரும்பவும் அந்தப் பெரியவர் பேசினார். "எனக்கு முன்பிருந்த அந்த மனிதர் உணவு உண்ணும்போது அந்த ஐந்து பிம்பங்களும் அதேபோல் செய்யும் என்று நான் சொன்னேன் இல்லையா? அதேபோல அவர் சிகரெட் பற்றவைக்கும்போதும் அவை அதேபோல் செய்யும்."

"இயற்கைதானே? இதிலென்ன மாற்றம் இருக்கும்?"

“இயற்கைதான். நீங்கள் சொன்னது போலத்தான் எல்லாமும் இருந்தன. ஆனால், ஒரு நாள் இரவில், அந்த பயங்கர இரவில்...” இந்த இடத்தில் பெரியவர், கண்களில் பீதியைக் காட்டினார்.

“என்னவாச்சு?”

“அன்று ஒரு வினோதமான அதேசமயம் பயங்கரமான சம்பவம் ஒன்று நடந்தது. எனக்கு முன்பு இங்கு வசித்த அவர், வழக்கம்போல சிகரெட் பற்ற வைத்தபடி, அந்த ஐந்து பிம்பங்களையும் கவனித்தபோது, அதில் இடது கோடியிலிருந்த பிம்பம் மட்டும் சிகரெட்டை அல்ல மாறாக பைப் ஒன்றைப் பற்றவைத்ததைப் பார்த்தார்.”

நான் பட்டென்று சிரித்துவிட்டேன். “என்ன சொல்றீங்க?”

அந்தப் பெரியவர் கொதிப்படைந்தாற்போல கைகளை பின்னிக்கொண்டார். “அது சிறுவர் கதைகளில் வருவதுபோல் தான் தோன்றும் என்பதை நானறிவேன். அதே சமயம், அது பயங்கரமானதும்கூட. நீங்கள் அந்தக் காட்சியை நேரில் பார்த்திருந்தால் திடுக்கிட்டுப்போய் இருக்க மாட்டீர்கள்?”

“ஆமாம், அது உண்மையா நடந்திருச்சுன்னா, நா என் கண்ணால அதப் பாத்திருந்தேன்னா பயந்திட்டிருப்பேன்.”

“நல்லது. அப்படித்தான் நிகழ்ந்தது. அதில் எந்தவித ஐயமுமில்லை. அது திகிலூட்டுவதாக இருந்தது.” அந்தப் பெரியவரே அக்காட்சியை நேரில் பார்த்தாற்போல், அவரின் குரலில் நடுக்கம் தெரிந்தது.

“ஆனா சார், நீங்க அதைப் பாக்கல, திரு. பேக்ஸ்டர் சொன்னதா...”

பெரியவர் என்னை முறைத்துப் பார்த்தார். அவரின் கண்கள் ஜொலித்தன. “அந்தச் சம்பவம் நடந்ததை அறிவேன். நானே அதை நேரில் பார்த்தாற்போல் நிச்சயமாக அறிவேன். மேற்கொண்டு கேளுங்கள். இந்தச் சம்பவம் ஐந்து நாட்கள் தொடர்ந்து நடந்தது. அவர் தினமும் இந்தக் காட்சியை திகிலுடன் பார்த்துக்கொண்டிருந்தார்.”

“ஆனா, அவரு வீட்டவிட்டு வெளிய ஏன் போகல?” என்று கேட்டேன்.

“அவருக்குத் தைரியமில்லை. அந்த விஷயம் அதுவாகவே

சரியாகிவிடும் என்ற நினைப்பிலும் அவர் இங்கேயே இருந்து விட்டார்" அவர் கிசுகிசுத்தார்

"ஆனா, அது சரியாகலையா?"

"ஆறாவது நாளிரவு" பெரியவர் மூச்சுத் திணறலுடன், "அந்த ஐந்தாவது பிம்பம் கண்ணாடியை உடைத்துக்கொண்டு போய்விட்டது." என்றார்!

"போயிடிச்சா?"

"ஆம்! ஜன்னலை உடைத்துக்கொண்டு போய்விட்டது. அவர் அந்த வெற்றுச் சட்டத்தை அச்சமுடன் பார்க்க, மற்ற நான்கு பிம்பங்களும் அதே அச்சத்துடன் அவரைத் திரும்பிப் பார்த்தன. அவர் பீதியுடன் அந்த பிம்பங்களைப் பார்க்க அவையும் கண்களில் பீதியைத் தேக்கி அவரையும், அவருக்குப் பின்னாலும் பார்த்தன. பிறகு அவருக்கு மூச்சுத் திணறியது..." பெரியவர் தனக்கே மூச்சுத் திணறல் வந்ததுபோல திணறிக் கொண்டே சொன்னார். "அவர் திணறிக்கொண்டே இருந்தார். காரணம் இரண்டு கைகள் அவருடைய கழுத்தைச் சுற்றி வளைத்து நெரித்தன."

"அந்தக் கைங்க, அஞ்சாவது கண்ணாடியிலேர்ந்து ஒடிச்சிக்கிட்டுப்போன அதே கைங்களா?" நான் விஷமச் சிரிப்பை மறைத்துக்கொண்டு பெரியவரைப்போல், பயத்துடன் இருப்பதைப்போல் காட்டிக்கொண்டு கேட்டேன்.

"ஆம்!" அவர் சீறலுடன் பதில் சொல்லிக்கொண்டே தன்னுடைய கனமான கைகளைக் காட்டி, "என்னுடைய கைகள்" என்றார்.

அன்று முதன்முறையாக பயந்துபோனேன். நாங்கள் ஒருவரையொருவர் பேச்சற்றுப் பார்த்துக்கொண்டிருந்தோம். அவர் இன்னும் மூச்சிரைத்துக்கொண்டிருந்தார். பிறகு அவரை ஆசுவாசப்படுத்தும் எண்ணத்துடன், நான் என்னால் முடிந்தவரை குரலில் அமைதியை வரவழைத்துக்கொண்டு "ஆக, நீங்கதான் அந்த அஞ்சாவது பிம்பம்" என்றேன்.

பெரியவர் மேஜையிலிருந்த பைப்பைச் சுட்டிக் காட்டினார். "ஆம், நான்தான் அந்த பைப் ஸ்மோக்கர்."

எழுந்து நின்றுவிட்டேன். சீக்கிரம் கதவை நோக்கி ஓடும்படி

சட்டென்று உள் மனது கூறியது. அதே சமயம், வேறு ஏதோ ஒன்று என்னை அங்கேயே தடுத்து நிறுத்தியது. ஒரு பயங்கரமான கற்பனையில் தவித்துக்கொண்டிருக்கும் இந்த அப்பாவிப் பெரியவரை தனியே விட்டுச் செல்வது மனிதத்தன்மையற்ற செயல் என்று உதைத்தது. பெரியவரின் சுக்குநூறான மனதை ஒன்று சேர்த்து, அவரைச் சுய உணர்வுக்குக் கொண்டுவரும் நோக்கத்துடன், நான் புத்திசாலித்தனமாக கேள்வி ஒன்றைக் கேட்டேன்!

“எல்லாம் சரிதான்! ஆனா, அந்தப் பொணத்தை என்ன பண்ணீங்க?”

இதைக் கேட்டதும் பெரியவர் மூச்சை இழுத்துப் பிடித்துக் கொண்டார். அவரின் முகம் கோணிக்கொண்டது. பிறகு அவர் தன்னுடைய கைகளை முஷ்டியாக்கி வலிப்பு வந்தவர்போல, தன் மார்பில் குத்திக்கொண்டே, வலி நிறைந்த குரலில் சொன்னார்.

“நான்… நான்தான் அந்தப் பிணம்…”

-மார்ட்டின் ஆர்ம்ஸ்ட்ராங்

# 10

## பெண்ணா, புலியா?

பழங்காலத்தில் ஒரு மன்னன் வாழ்ந்து வந்தான். அவன் குணத்திலே பாதியளவு காட்டுவாசி இயல்பை நிகர்த்தவன். எவனாலும் காண முடியாத கற்பனைகளைச் செய்து பார்ப்பவன். அவனுடைய போக்கு மற்றவர்களை விஞ்சி நிற்க, அக்கற்பனைகளைச் செயலாகச் செய்து பார்த்து விடுவான். யோசித்து முடிவுக்கு வந்துவிட்டானென்றால் உடனே அது நடைமுறைக்கு வந்துவிடும். அவனுடைய அரண்மனையிலும் மற்றும் அரசியல் தளத்திலும் எல்லா விஷயங்களும் சரியாகப் போனால் அவன் இயல்பு சாந்தமாக காணப்படும். ஆனால், சிக்கல் ஏதும் எழுந்துவிட்டால் வழக்கத்தைவிட அதிக அமைதியுடன் காணப்படுவான். எப்படியெனில் அவன் பொது விளையாட்டரங்கில் மனிதனையும் கொடூர விலங்குகளையும் வைத்து விளையாட்டுக் காட்டுவானே, அதுபோல் கோணலாகி இருப்பதையும் நேராக நிமிர்த்திவிடுவதில் வல்லவன். அரசனின் பந்தய அரங்கம் வட்ட வடிவில் கட்டப்பட்டு, அதில் எண்ணிறைந்த நிலவறைகளும், கண்காணாத ரகசிய வழிகளும் நிறைந்திருக்கும். அவ்வரங்கில்தான் குற்றவாளி நிறுத்தப்பட்டு தெய்வீகத் தீர்ப்பால் தண்டிக்கப்படுவான். அல்லது குற்றவாளி அல்லவெனில் பரிசுகளால் மகிழ்விக்கப் படுவான். அந்தத் தீர்ப்பு எவராலும் மாற்ற முடியாத, அப்பழுக்கின்றி, தெய்வீகத்தன்மையுடன் காணப்படும்.



மன்னனின் ஆர்வத்தைக் கிளறும் அளவுக்கு ஒருவன் தவறு செய்ததாக குற்றம் சாட்டப்பட்டால், உடனே நாடெங்கும் இத்தகவல் பரப்பப்பட்டு, குறிப்பிட்டதொரு நன்னாளில் அவனுடைய தலையெழுத்து மன்னன் விளையாட்டரங்கில் தீர்மானிக்கப்படும். நாட்டு மக்கள் யாவரும் பந்தயக் களத்தில் குழுமியதும், மன்னன் தன் பரிவாரங்களுடன் அரங்கின் உயர்ந்த இடத்தில் அமர்ந்ததும், அவன் கையை உயர்த்தி சைகை செய்ய, அரங்கின் அடிப் பகுதியில் இருக்கும் கதவு திறக்கப்பட்டு குற்றவாளியென சொல்லப்படுபவன் வெளியில் வருவான்.

அவனுக்கு நேர் எதிரே இருக்கும் இடத்தில் இரண்டு கதவுகள் அச்சு அசலாக ஒன்றுபோல் இருக்கும். அவன் அவ்விடம் சென்று தனக்கு விருப்பப்பட்ட கதவைத் திறக்கலாம். திறக்க வேண்டும். எந்தக் கதவைத் திறக்க வேண்டும் என்பதில் அவனுக்கு வழிகாட்டுதலோ பிறர் யோசனையோ இருக்காது. மாறாக எவராலும் மாற்ற முடியாத அப்பழுக்கற்ற தெய்வீகத் தீர்ப்பால் மட்டுமே அவன் வழிநடத்தப்படுவான்.

ஒரு கதவைத் திறந்தால் அதன் உள்ளிருந்து பசித்த புலி

ஒன்று வெளியில் வரும். இதுவரை காணாத கொடூரமும், குரூரமும் கொண்ட அது, குற்றம் சாட்டப்பட்டவன் மேல் பாய்ந்து துண்டுகளாகக் கிழித்துபோட்டுவிடும். இவ்வாறு செய்த குற்றத்துக்கு தண்டனை தரப்பட்டு விடும். அக்கணத்தில் குற்றம்சாட்டப்பட்டவனின் விதி இப்படியாக தீர்மானிக்கப் பட்டவுடன் துக்கத்தை வெளிப்படுத்தும் நினைவாக மணிகள் ஒலிக்கப்படும். அரங்கின் பக்கவாட்டில் கூலிக்கு மாரடிக்கும் மனிதர்கள் அழுது புலம்புவார்கள். மக்கள் கூட்டம் குனிந்த தலையுடனும் கனத்த இதயத்துடனும் தன் வீடு நோக்கி மெள்ள நடக்கும். அவர்கள் இந்தளவு அழகும் துடிப்பும் கொண்ட அல்லது இந்தளவு வயதும் மரியாதையும் கொண்ட அந்நபரின் விதி பயங்கர முடிவை சந்திக்க நேர்ந்ததே என வருந்துவார்கள்.

அதே சமயம் குற்றம் சாட்டப்பட்ட அந்நபர் மற்றொரு கதவைத் திறந்தால் உள்ளிருந்து ஒரு பெண் வருவாள். அரண்மனையிலிருந்து மன்னனால் தேர்ந்தெடுக்கப்பட்ட அந்தப் பெண் எல்லா வகையிலும் அவனுக்குப் பொருத்தமான வளாக இருப்பாள். அவனுடைய அப்பாவித்தனத்துக்குப் பரிசாக உடனடியாக அப்பெண்ணுடன் அவனுக்குத் திருமணம் நடத்தி வைக்கப்படும். அவனுக்கு, முன்பே மனைவி இருக்கிறாளா குடும்பம் இருக்கிறதா அவன் வேறு பெண்மீது ஆசைப்படுகிறானா என்றெல்லாம் பார்க்கப் படுவதில்லை. தான் ஏற்பாடு செய்திருக்கும் தண்டனையிலோ பரிசிலோ இவ்வகையான விவகாரங்கள் தலையிடுவதை மன்னன் விரும்புவதில்லை. அக்காரியம் உடனடியாக பந்தயக் களத்திலேயே செய்யப்படும். அரசன் அமர்ந்திருக்கும் மேடையின் கீழே மற்றொரு கதவு திறக்கப்பட்டு அதன் உள்ளிருந்து ஒரு மதகுருவும், இசைக் கருவிகளோடு குழுவினரும், தங்கக் கொம்புகளுடன் நடனப் பெண்மணிகளும் பக்கம் பக்கமாக நிற்கும் மணமக்களை அடைவார்கள். திருமணம் சகலவித சடங்குகளோடு சந்தோஷமாக நடக்கும். பிறகு மங்கல மணிகள் முழங்க மக்கள் ஆரவாரம் செய்ய, குழந்தைகள் பூக்களைத் தூவ அந்த அப்பாவி மனிதன் மணமகளை தன் வீட்டுக்குக் கொண்டு செல்வான்.



இதுதான் அம்மன்னனுடைய, கொஞ்சம் காட்டுவாசித்தனம் கலந்த நீதி விஷயங்களை நடைமுறைப்படுத்தும் செயல். அதன் வெளிப்படையான அணுகுமுறை மிகவும் நியாயமானது. குற்றம் சாட்டப்பட்டவனுக்கு எக்கதவைத் திறந்தால் பெண் வருவாளென்று தெரியாது. திருமணம் செய்துகொள்ளப்போகிறோமா அல்லது கிழித்தெறியப்படப் போகிறோமா என்று சற்றும் அறியாமலேயே விருப்பப்பட்ட கதவை அவன் திறக்கலாம்.

குழுவின் இம்முடிவு நியாயம் மட்டுமல்ல, ஒளிவுமறைவற்ற நேர்முகத்தன்மையானதும்கூட. குற்றம் கூறப்பட்டவன் குற்றவாளி எனத் தெரிந்தால் உடனடியாகத் தண்டிக்கப் படுவான். அப்படி அல்லாமல் அவன் நேர்மையானவன் எனத் தெரிந்தால் அவன் விரும்புகிறானோ இல்லையோ உடனே பரிசளிக்கப்படும்.

அரசனின் பந்தயக் களத் தீர்ப்பிலிருந்து ஒருவரும் தப்பிக்க இயலாது.

இந்த நடுநிலைத் தீர்ப்பு நாடு முழுவதும் பிரபலம். தீர்ப்பு

தினத்தன்று மக்கள் யாவரும் ஒன்றாகக் கூடுவார்கள். அப்போது தான் காணப்போவது சின்னாபின்னமாகப்போகும் ஓர் உடலா அல்லது மகிழ்விக்கும் திருமணமா என்பது தெரியாது. இந்த நிச்சயமற்றத் தன்மை ஒருவித எதிர்பார்ப்பை மக்கள் மனங்களில் ஏற்படுத்தியது. இவ்வாறு மக்களிடையே பயங்கரத்தையோ மகிழ்ச்சியையோ ஏற்படுத்தும் இந்நிகழ்வு நியாயம் என்ற உணர்வையும் ஏற்படுத்தியது. ஏனெனில் குற்றம் சாட்டப்பட்டவனின் விதி அவனுடைய கைகளிலேயே உள்ளதன்றோ?

அந்தக் காட்டுவாசி அரசனுக்கு ஒரு மகள் இருந்தாள். அவள் அவனைப்போலப் பகட்டும், அதிகாரப் பண்புகளையும், பெரும் உணர்ச்சிமிக்க குணங்களையும் கொண்டு விளங்கினாள். இதுபோன்ற கதைகளில் வருவதுபோல அவன் அவளைத் தன் கண்மணியாகக் கருதினான்; அதிக நேசம் செலுத்தினான்.

அவனுடைய அரசவையில் ஓர் இளம் மனிதன் ரத்தத் துடிப்பும், அழகும் கீழ் மட்ட அந்தஸ்து கொண்டவனாகவும் அந்தப்புர அழகிகளால் விரும்பப்படுபவனாகவும் இருந்தான். ராஜாவின் பெண்ணுக்கும் அவனிடம் காதல் உண்டு. ஏனெனில் அவன் பேரழகு உடையனாகவும், நாட்டிலேயே ஈடு இணை இல்லாத வீரம் கொண்டவனாகவும் விளங்கினான். அதனால் அவள் தன் காட்டுவாசி இயல்புக்கேற்ப அவனை காதலிக்க அவனும் காதலிக்க, காதல் பலப்பட்டுக்கொண்டே வந்தது.

காதல் விவகாரம் பல மாதங்களுக்குத் தொடர்ந்து நடக்க திடீரென்று ஒரு நாள் அரசன் அதன் இருப்பைக் கண்டுபிடித்தான். உடனே அவன் தயங்காமல், தன் மாளிகையிலே இதுபோன்ற காரியமா என்று தட்டுத் தடுமாறாமல் காரியத்தில் இறங்கினான். இளைஞன் சட்டென்று சிறையில் தள்ளப்பட்டு, அரசனின் பந்தயக் களத்தில் அவனுடைய தீர்ப்புத் தேதியும் குறிக்கப்பட்டது. ஆம், இதுவொரு முக்கியமான வழக்கு. மன்னனும் அவனுடைய மக்களும் இவ்வழக்கின் நிலவரத்தை ஊன்றி கவனித்துக்கொண்டே வந்தனர். இதுபோலவொரு சம்பவம் எங்குமே நிகழ்ந்ததில்லை. அதுவும் அரசனின் மகளை ஒருவன் காதலித்த சம்பவம் ஒருபோதும் நிகழ்ந்ததில்லை.

பேரரசின் ஒட்டுமொத்த புலிக்கூண்டுகளும் சோதனை இடப்பட்டு அதில் இருப்பதிலேயே அதி பயங்கர வல்லமையும், குரூரமும் கொண்ட புலி ஒன்று தேர்வு செய்யப்பட்டது. மற்றும் தேர்ந்தெடுத்த அறிஞர்களால் நாடு முழுக்க உள்ள நங்கைகள் அறிவிலும் அழகிலும் சோதிக்கப்பட்டனர். ஏனெனில், ஒருவேளை அவன் தலையெழுத்து மாறி அவன் மற்றொரு கதவைத் திறந்தால்? குற்றம் சாட்டப்பட்டவன் என்ன குற்றம் செய்தான் என்பது எல்லோருக்கும் தெரிந்த ஒன்று. அவன் இளவரசியைக் காதலித்தான். அவனோ அவளோ மற்ற யாரோ இதை மறுக்கவில்லை.

ஆனால், மன்னன் தன் சொந்த விஷயம் என்பதற்காகத் தீர்ப்பில் தலையிட விரும்பவில்லை. அந்தத் தீர்ப்பு எப்பக்கம் திரும்பினாலும் அவ்விளைஞன் ஓரங்கட்டபடுவான். இளவரசியை காதலித்த அவ்வாலிபன் குற்றத்துக்கு ஏற்ப தண்டனையைப் பெறுவானா? அல்லது மேன்மை மிகு வாழ்வைத் தரும் பரிசைப் பெறுவானா என்பதில் அரசனுக்கு பேரார்வம் இருந்தது.

குறிப்பிட்ட நாளும் வந்தது. வெகு தூரத்திலிருந்தும் அருகிலிருந்தும் மக்கள் படையெடுத்து வந்தனர். விளையாட்டு அரங்கின் உள்ளே வந்து குழுமினர். நேரம் ஆக ஆக உள்ளே நெரிசலாகிவிட பிறகு வந்தவர்களெல்லாம் வெளியே கூடினர். அரசனும் பரிவாரங்களும் உயர்ந்த இடத்தில் அமர்ந்தனர். அவனுக்கு எதிரே அச்சு அசலாக இருந்த இரண்டு கதவுகள் பயங்கரமாகக் காட்சியளித்தன. எல்லாம் தயாராக இருந்தன. உடனே சைகை தரப்பட்டது.

அரசனுக்கு அடியில் இருந்த கதவு திறக்கப்பட, இளவரசியின் காதலன் வெளியில் வந்தான். உயரமும் அழகும் நிறமும் கொண்டிருந்த அவனுடைய தோற்றம், ஆச்சர்யத்தையும் அதே சமயம் கவலையையும் கூடியிருந்த மக்களிடையே ஏற்படுத்தியது. மக்களில் பாதிப் பேர், இவ்வளவு பேரழகு வாய்ந்தவன் நம்மிடையே வாழ்ந்து இருக்கிறான் என்பதை அதுவரை அறியவில்லை. இளவரசி அவனைக் காதலித்ததில் ஆச்சர்யம் ஏதுமில்லை. ஐயோ! இவன் இப்படியொரு பயங்கரத்தில் வந்து மாட்டிக் கொண்டானே!

விளையாட்டரங்கின் மத்தியில் வந்த அந்த வாலிபன்,

பாரம்பரியப்படி அரசனுக்கு வணக்கம் செலுத்தத் திரும்பினான். ஆனால், அவன் நோக்கம் மன்னனுக்கு வணக்கம் செலுத்துவதல்ல; மாறாக அவன் வலதுபுறம் அமர்ந்திருந்த இளவரசியை பார்ப்பதுதான்.

அவளுடைய ரத்தத்திலும் சுபாவத்திலும் காட்டுமிராண்டித் தனம் கலந்திருந்தது. இல்லையானால் அவள் ஒருவேளை இங்கே வந்திருக்க மாட்டாள். அவளுடைய தீவிரமான கொந்தளிக்கும் இயல்பே நடக்க இருக்கும் தர்மசங்கடமான பயங்கர சம்பவத்தைக் காண்பதற்கு அவளைச் செலுத்தியிருக்க வேண்டும். பந்தயக் களத்தில் தன் காதலனுக்குத் தீர்ப்பு வழங்கப்படப் போகிறது என்பதைக் கேள்விப்பட்ட நொடி முதல் அவளால் வேறெதையும் யோசிக்க முடியவில்லை. அந்த பெரும் சம்பவமும் அதோடு தொடர்புள்ள வேறு பல விஷயங்களும் அவள் நினைவில் உழன்றன. பெரும் அதிகாரமும், செல்வாக்கும் கொண்டு விளங்கிய இளவரசி வேறெவரும் செய்ய துணியாத காரியத்தைத் துணிந்து செய்துவிட்டாள். ஆம் அந்த கதவுகளின் ரகசியத்தைத் தெரிந்துகொண்டுவிட்டாள். எந்தக் கதவுக்குப் பின்னே வேங்கை இருக்கும், எந்தக் கதவுக்குப் பின்னே மங்கை இருப்பாள் என்ற ரகசியத்தை அறிந்துகொண்டுவிட்டாள். கனமான கதவுகளுக்குப் பின்புறம் அழுத்தமான தோல்கள் தொங்கிக்கொண்டிருக்க, அங்கிருந்து எழும் சிறு சப்தமும் வெளியில் கேட்க முடியாதபடி இருக்க, அவற்றில் ஒன்றைத் திறக்க நெருங்கும் நபர் உள்ளே இருப்பது பெண்ணா, புலியா என அறிய முடியாமற்போகிறான். ஆனால், பொன்னும், பெண்களுக்கே உரிய சக்தியும், அந்த ரகசியத்தை இளவரசியிடம் கொண்டு வந்து சேர்ந்துவிட்டன.



எந்தக் கதவுக்குப் பின்னால் வெட்கமும், தேஜஸும் கொண்ட பெண்ணிருப்பாள் என்பது மட்டுமல்ல, அவள் யார் என்பதும் இளவரசிக்கு தெரிந்துபோனது. தான் குற்றமற்ற அப்பாவி என அந்த இளைஞன் நிரூபணம் செய்தால், அதற்குப் பரிசாக வரும் பெண், அரசனின் சபையிலிருந்து நேர்ந்தெடுக்கப்பட்டவள் அறிவும் பேரழகும் கொண்டவள்; அவளை இளவரசி ஆரம்பத்திலிருந்தே வெறுத்து வந்தாள்.

இளவரசி கற்பனை செய்தாளோ நிஜமாகப் பார்த்தாளோ அந்தப் பெண் தன் காதலனை அன்பொழுகப் பார்ப்பதை அடிக்கடி கண்டு வந்தாள். சிலசமயம் காதலனும் அவளைத் திரும்பிப் பார்ப்பதைக் கண்டுகொண்டாள். அவ்வப்போது அவர்கள் இருவரும் பேசுவதை கவனித்து வந்திருக்கிறாள். ஏதோ சம்பந்தமில்லாத விஷயங்களைப் பற்றித்தான் பேசியிருக்க வேண்டும். அந்தப் பெண் அழகானவள்தான். ஆனால், இளவரசியின் காதலன் மேலேயே பார்வையை வீசுவது என்றால் எவ்வளவு நெஞ்சுரம் இருக்க வேண்டும். கொடூரத்தனமான கொதிக்கும் ரத்தமும், காட்டுமிராண்டித் தனமான முன்னோர் குணங்களையும் கொண்ட இளவரசி, கதவுக்கு பின்னே இருந்த

வெட்கமும் பயமும்கொண்ட அந்த மங்கையை மிகவும் வெறுத்தாள்.

காதலன் திரும்பி நின்று அவளைப் பார்த்ததும், அவனுடைய கண்கள் அவளுடையதைப் பார்த்ததும், கூடியிருந்த ஜனங்களைக் காட்டிலும் வெளுத்துப்போன முகத்தைக் கொண்டிருந்த இளவரசி ஸ்தம்பித்து அமர்ந்திருந்தாள். இரு மனங்களும் ஒன்றென்று கலந்துவிட்ட நிலையில், அவளை அவன் பார்த்த அந்த விநாடியில், எந்தக் கதவுக்குப் பின்னே பெண்ணிருப்பாள் என்ற ரகசியத்தை அவள் அறிந்துகொண்டுவிட்டாள் என்பதை அறிந்தான். அவள் அதை அறிய வேண்டும் என்றே எதிர்பார்த்தான். அவளுடைய உள்ளத்தை, அதனுள் உறையும் குணங்களைப் பரிபூரணமாக அறிந்த அவன், அரசன்கூட அறியாத அந்த ரகசியத்தை அறியும் வரை அவள் தூங்கியிருக்க மாட்டாள் என்பதையும் அறிவான். அவன் உயிர் பிழைக்கும் ஒரே நம்பிக்கை அவளே. அந்த நம்பிக்கையுடன் அவளைப் பார்த்த அந்நேரத்தில் ரகசியத்தை அவள் அறிந்துகொண்டுவிட்டாள் என்பதை அறிந்தான்.

பிறகு கவலையான முகத்தில் விரைவான கேள்வி தெரிந்தது. எது?

அக்கேள்வி அங்கிருந்தே கத்திக் கேட்பதுபோல் இளவரசிக்குத் தெளிவாகப் புரிந்தது. ஒரு நொடி நேரத்தையும் இழக்கக் கூடாது. கேள்வி மின்னல்போல் கேட்கப்பட்டது. பதிலும் அவ்வாறே சொல்லப்பட வேண்டும்.

அமர்ந்திருந்த மெத்தை நாற்காலியின் வலதுபுறக் கைப் பிடியின் மேல் அவளுடைய கை இருந்தது. அவள் அந்தக் கையைச் சற்று உயர்த்தி வலதுபுறம் காட்டினாள். காதலனைத் தவிர வேறு யாரும் அதைப் பார்க்கவில்லை. எல்லோருடைய கண்களும் அவன் மேல் பொதிந்திருந்தன.

அவன் திரும்பி பந்தய அரங்கின் வெற்று நிலத்தில் உறுதியான தப்பட்டிகள் கொண்டு நடக்க ஆரம்பித்தான். எல்லோர் இதயங்களும் நின்றுபோயின. மூச்சு உள்ளேயே நின்றுவிட்டன. கண்கள் மட்டும் அசையாமல் அவனைப் பார்த்துக்கொண்டிருந்தன.

கொஞ்சம்கூடத் தயக்கமேயின்றி வலதுபுறக் கதவை நோக்கிச்

சென்று அதைத் திறந்தான்.

இக்கதையின் மையக் கருவுக்கு வந்துவிட்டோம். கதவைத் திறந்ததும் புலி வந்ததா அல்லது பெண் வந்தாளா?

இந்தக் கேள்வியை நாம் மேன்மேலும் ஆழமாக யோசிக்கும் போது, அதற்குண்டான விடையும் கடினமாகிறது. பெரும் பெரும் ஆசைகள் கொண்ட இதயத்தைத் துருவும்போது கேள்விக்கான விடையும் புரியாமல்போகிறது.

நியாயமிகு வாசகர்களே நன்றாக யோசியுங்கள். இந்தக் கேள்வி உங்களுடையது அல்ல. மாறாகக் கொதிக்கிற ரத்தமும், காட்டுவாசி இயல்பும் கொண்ட இளவரசியுடையது. அவளுடைய ஆத்மா பொறாமையிலும் அவநம்பிக்கையிலும் துடித்துக்கொண்டிருக்க அவள் அவனை இழப்பாள். ஆனால், யாரிடம் இழப்பாள்?

எத்தனை முறை தூக்கத்திலும் கனவிலும் பயங்கர சாவு மணி அடிக்க, தன் கைகளால் முகத்தைப் பற்றிக்கொண்டு கதறி இருப்பாள். எத்தனை முறை தன் காதலன் அக்கதவைத் திறந்ததும் புலி ஒன்று பாய, அக்காட்சியை நினைத்து நினைத்து அழுதிருப்பாள்.

அதே நேரம் மறு கதவைத் திறக்கும் அவனை எத்தனை முறை கண்டிருப்பாள். அவன் அந்த பெண் இருக்கும் கதவை திறந்து சந்தோஷத்துடன் சிரிக்கும் அக்காட்சியை தன் பயங்கரக் கற்பனையில் பார்த்து, பற்களை கடித்துத் தலை மயிரை பிய்த்துக்கொண்டிருப்பாள். வெற்றி பெற்ற தருணத்தில் அந்த மங்கையின் மின்னலிடும் கண்களையும் பூரித்துப்போன கன்னங்களையும் யோசித்து யோசித்து இளவரசியின் ஆத்மா கவலையால் எரிந்திருக்கும். உயிர் மீண்டு வந்த இன்பத்தால் அவன் அவளை வழி நடத்தும் காட்சி; சுற்றியிருக்கும் மக்களின் கூட்டம் எழுப்பும் ஆரவார ஒலி; மங்கல மணி ஓசை; அவளுடைய கண் முன்னாலேயே அவர்கள் இருவரும் மணமக்கள் ஆதல்; பூக்கள் நிறைந்த பாதையில் அவள் அவன் பின்னே செல்ல; அப்போது எழும் பெருத்த கரவொலியின் பின்னணியில் அவள் அழுது புலம்பும் ஓசை மறைந்துவிடும்!

இவ்வளவு வேதனை தேவைதானா? அவனை இப்படியே சாகவிட்டுவிட்டு, ராஜாங்க இன்பத்தில் தான் மூழ்கிப்போனால்

என்ன? அதே சமயம் கொடூரமான புலி, உயிர்போகும் கத்தல், ரத்தம்...

முடிவெடுத்த விநாடியில் உடனடியாக சைகை காட்டப்பட்டது. ஆனால், எடுத்த முடிவு பல நாள் போராட்டத்துக்கு பின்னரே எடுக்கப்பட்டது. அவன் தன்னைக் கேள்வி கேட்பான் என்பது அவளுக்குத் தெரியும். கேள்விக்கு விடையாக எந்தக் கதவைக் காட்ட வேண்டும் என்பதை முன்னரே தீர்மானித்து வலது புறக் கதவை நோக்கிக் கை காட்டினாள்.

அவளுடைய முடிவு சாதாரணமாக எடுத்துக்கொள்ள முடியாது. அந்த முடிவு என்னவாக இருக்கும் என்பதை நான் ஒருவனே தீர்மானம் செய்ய முடியாதே?

எனவே, திறந்திருந்த கதவின் உள்ளிருந்து வந்தது பெண்ணா? அல்லது புலியா?

-ப்ராங்க் ஆர்.ஸ்டாக்டன்

# 11

## உச்சகட்ட உலகம்

இது நிஜத்தில் உங்களுக்கு நடந்தது. உங்களுக்கு என்று சொல்லும்போது நிச்சயமாக உங்களையே குறித்தேன். இந்த வார்த்தைகளைஜீ படித்துக்கொண்டிருக்கும் நீங்கள்தான் அது. உங்களைப் பற்றி நான் அறிவேன்! அறிவேனென்றால் அது ஆழமாக அந்தரங்கமாக இருக்கும். ஆனால், நான் அறிந்த அந்த விஷயத்தை நீங்கள் மறந்துவிட்டீர்கள்.

வினோதமாக உள்ளதா? என்னை நம்பவில்லையா? அப்படியெனில் இதைத் தொடர்ந்து படித்தால் உங்களுக்கு நான் நிரூபணம் செய்வேன். அப்போது நான் சொல்வதை எல்லாம் நீங்கள் சரியென ஒப்புக்கொள்வீர்கள்.

துவக்கமாக, 1937 ஆகஸ்ட் 4, இரவு எட்டு மணிக்கு நீங்கள் எங்கிருந்தீர்கள்? ஞாபகம் வரவில்லையா? நண்பனே! வரும். கண்டிப்பாக வரும். இதைத் தொடர்ந்து படிக்கும்போது, அவ்விரவின் விவரங்களை ஞாபகப்படுத்திக்கொள்வது எவ்வளவு முக்கியம் என்பதை உணர்ந்துகொள்வீர்கள்.

அன்று வெப்பமாகவும் பிசுபிசுப்பாகவும் இருந்தது. அதனால் வீட்டில் இருப்புக்கொள்ளாமல் தவித்து, இறுதியில் சிகரெட் வாங்கத் தெரு முனையிலிருக்கும் கடைக்கு நடந்து போகலாம் எனத் தீர்மானிக்கிறீர். தவிர சுத்தமான காற்றை சுவாசிக்க, இதைத் தவிர எதுவும் முக்கியமல்ல என்று நினைக்கிறீர்.

இளைஞன் ஒருவன் உங்களைத் தடுத்து நிறுத்தி நெருப்புக் கேட்கிறான். இதைக்கூட நீங்கள் மறந்துவிட்டீர் என நிச்சயமாகச் சொல்ல இயலும். ஏனெனில் ஏராளமானோர் உங்களை நெருப்புக் கேட்பது வழக்கந்தானே? பிசுபிசுப்பான அந்த இரவில், நூற்றுக்கணக்கான நபர்களிலிருந்து அந்த இளைஞனை

வேறுபடுத்திப் பார்க்க எந்த முகாந்திரமும் இல்லை.

நீங்கள் அவனுக்குத் தீப்பெட்டியைத் தருகிறீர்கள். இருளில் அதைக் கொளுத்தியபோது உண்டான வெளிச்சத்தில், அவனுடைய சிறுபிள்ளைத்தனமான முகத்தைக் கவனிக்கிறீர். மற்றவர்களைவிட வசீகரமாக அவன் தோன்றுகிறான்.

இதோ இவனிடத்தில் பழகினால் நன்றாகவே இருக்கும் என உங்களுக்கு நீங்களே சொல்லிக்கொள்கிறீர்.

பிறகு நீங்களும் சிகரெட்டைப் பற்றவைத்துக்கொண்ட பிறகு, இளைஞன் உங்களைக் கவனிப்பதை உணர்ந்து கொள்கிறீர். அவனும் உங்களின் தோற்றத்தில் வசீகரிக்கப் பட்டான் என்று நம்பிக்கை கொள்கிறீர்.

அவன் உங்களின் பக்கம் நடந்தவாறே, "என்ன ஒரு வெப்பமான இரவு?" என்று வார்த்தையை விடுகிறான்.

எனவே நீங்கள் இருவரும் நோக்கம் எதுவுமின்றி நடை போட்டவாறு, வானிலையைப் பற்றிச் சில நிமிடங்கள் வரை பேசுகிறீர்.

மேற்கொண்டு அதைப்பற்றி ஏதும் சொல்ல இயலாததால், அந்த அந்நியன், "உங்களுக்கு இன்றிரவு ஏதேனும் வேலை இருக்கிறதா?" என்று கேட்டான்.

இந்தக் கேள்வி உங்களைத் தூண்டிவிட்டிருக்க வேண்டும். அவன் எதற்காகக் கேட்கிறான்? நீங்கள் அவன் முகத்தையே கூர்ந்து பார்க்க, தெரு விளக்கின் வெளிச்சம் கடந்து செல்லும் உங்கள் இருவரையும் நொடிநேரம் ஒளியில் குளிப்பாட்டுகிறது. நீங்கள் அவனுடைய கேள்விக்கு உண்மையான பதிலைச் சொல்லத் தயார்ப்படுத்திக்கொள்கிறீர்.



"இல்லை, செய்வதற்கு ஏதுமில்லை, எதற்காகக் கேட்கிறீர்?"

அவன் சற்று வெட்கப்பட்டுக்கொண்டே சிரித்தான். "இங்கிருந்து நாலைந்து தெருக்கள் தள்ளி, சித்து வேலை செய்யும் யோகி ஒருவர் உள்ளார். நான் அவரைத்தான் பார்க்கப்போகிறேன், இடையில் உங்களை சந்தித்தேன். நீங்களும் என்னுடன் வந்தால் நன்றாக இருக்கும்."

அதில் திரை மறைவு சதி உள்ளதுபோல் தெரிந்தது.

"அவர் அதற்குக் கட்டணம் ஏதும் வசூலிக்கிறாரா?" நீங்கள் கேட்கிறீர்கள்.

அந்த இளம் வயது மனிதன் சிரித்தான். நட்பைக் கூறும் சிரிப்பு. "இல்லை கட்டணம் ஏதும் இல்லை. ஒரு உண்மையான யோகியானவன் தன் வித்தையை வைத்துப் பொருள் ஈட்டுவதில்லை. அதையெல்லாம் அரைகுறைகள்தான் செய்யும்."

கட்டணம் ஏதுமில்லை என்று தெரிந்துகொண்ட உங்களுக்கு சுமை இறங்கிவிடுகிறது. "அப்படியெனில் நான் வருகிறேன்."

"வாருங்கள்" அவன் அழைக்கிறான்.

அவன் உங்களை ஒரு கட்டடத்துக்கு அழைத்துச் செல்கிறான். அது ஒரு பிரவுன் நிற, மூன்று அடுக்குக் கட்டடம். அதனுள்ளே என்ன இருக்கிறதென்பது தெரியாது. ஓர் ஆஜானுபாகுவான சமையற்காரன் கதவைத் திறக்கிறான். அவன் உங்களை ஐயத்துடன் மேலும் கீழும் பார்க்கிறான். பிறகு உங்களையும் உம்

நண்பனையும் வரவேற்பரைக்கு அழைத்துப்போகிறான். அங்கே வயதை அறிய முடியாத கூன் போட்ட உருவம் உங்களிருவரையும் வரவேற்கிறது. அவ்வுருவத்துக்கு தலையில் முடியே இல்லை. மஞ்சளான அத்தலை ஏதோ ஆட்டுத் தோல் கொண்டு மூடினாற்போல இருக்கிறது. அவனுடைய கண்கள் ஓரிடத்தில் நில்லாமல் அங்கேயும் இங்கேயும் சுழல்கின்றன. மற்றும் கறுத்தும் சுருங்கியும் காணப்படுகின்றன. பிறகு அவன் உங்களையும் நண்பனையும் ஓரப் பார்வை பார்க்கிறான்.

"நல்லது" என்று அவன் நடுங்குகிற உரத்தக் குரலில் தொடங்கினான். அப்போது அவன் கண்கள் உங்களிடமிருந்து உம் நண்பனை நோக்கிப் பாய்கிறது.

"மாஸ்டர்" இறுக்கமாக வணக்கமடித்த நண்பன், "இதோ! நீங்கள் கேட்ட நபரை அழைத்து வந்திருக்கிறேன்" என்று கூறுகிறான்.

"நல்லது செய்தாய் மகனே!" அந்தக் குட்டையான கூன் மனிதன் தன் தோள்கள் நடுங்க "நீ போகலாம்" என்கிறான்.

ஸ்தம்பிப்பும் கோபமும் ஏற்பட உம்மை அழைத்து வந்தவன் பக்கம் நீங்கள் திரும்புகிறீர். அதேநேரம் நுண்ணிய வேறுபாடு அவனுள் ஏற்பட்டாற்போல் தெரிகிறது. அவ்வறையின் பிரகாசமான ஒளியில் தெருவை பார்த்தாற் போல் நின்ற அவன் முகத்தில் சந்தோஷக் களையே இல்லை.

அவனுடைய கருமையான விழிகளில் முடிவெடுத்த தன்மை தெரிந்தது. அவனுடைய புருவங்கள் அடர்த்தியாக முடிச்சிட்டாற்போல் இருக்கின்றன. அவனுடைய கார் வண்ணத் தலைக் கேசம் நெற்றியின் இரு பக்கங்களிலும் குத்திட்டு நிற்க ஏதோ கொம்புகள் முளைத்ததுபோல் இருக்கிறது.



“நீங்கள் சொன்னது...” நீங்கள் கோபத்துடன் பேசத் தொடங்குகிறீர்.

“நான் சொன்னதெல்லாம் ஒரு விஷயமே இல்லை” அவன் தோளைக் குலுக்கியபடி கையசைத்துவிட்டு, கால்களைத் திருப்பி வைத்து அறையைவிட்டு வெளியேறுகிறான். உடனே நீங்கள் அவனைப் பின்தொடர்கிறீர்கள். ஆனால், பின்னே ஒரு குரல் ஒலிக்கிறது, “நில்.”

ஏதோ கண்ணுக்குத் தெரியாத கைகள் உங்களைப் பிடித்துத் திருப்பி, தவளையென உட்கார்ந்திருந்த குள்ளனிடம் இழுத்துச் செல்கிறது.

அவன் மெதுவாகச் சிரித்து பின் அந்தச் சிரிப்பு ஈயென இளிப்பாக மாறியது. “நண்பனே! ஏன் தப்பி ஓடுகிறாய்? நான் உனக்கு உதவவே உள்ளேன்” அந்தக் கூனன் கூறுகிறான்.

“ஆனால்... ஆனால்...” ஏதோ சொல்ல நீங்கள் முயல்கிறீர்.

“அமைதி,” குள்ளன் குரல் கூறுகிறது. அவனுடைய முகத்தில் கண்டிப்பு தெரிகிறது. அவனுடைய குறுகலான கைகள் உன் முகத்துக்கு நேரே வர, அவன், “தூங்குவாய், தூங்குவாய்! இப்போது நீ என் சக்திக்கு உட்பட்டிருக்கிறாய். நான் சொல்வதை

நீ செய்யப்போகிறாய். உறங்குவாய்!" எனக் கூறுகிறான்.

இன்பம் தரும் போர்வை ஒன்று உங்களைப் போர்த்தியது போல் உணர்கிறீர்கள். உங்களுடைய மனம் வழக்கத்தைவிட தெளிவாக இருப்பதை நீங்கள் உணர்ந்தாலும் உங்கள் உடலின் கட்டுப்பாடு நழுவிவிட்டாற்போல் தெரிகிறது.

இப்போது தோல் போர்த்திய முகம் கொண்ட மாஸ்டரின் குரல் சாதாரணமாக மாறியது. அவன் பறவைக் கால் போலிருந்த கை விரல்களை ஒன்று தேய்த்தபடி, "இப்போது வரப்போவதை நீ இன்பமுடன் அனுபவிக்கப்போகிறாய். இந்த இன்பத்தின் உச்சகட்டம் முழுவதும் உன்னுடையதே. ஏனெனில் என்னுடைய வயதான உடல் அதையெல்லாம் அனுபவிக்க முடியாது - பார்ப்பதைத் தவிர. எனவேதான் உன்னை இங்கே அழைத்துவரச் செய்தேன். இவ்வாறு நீ அனுபவிக்கப்போகும் சுகங்களை தூர இருந்து பார்த்து ரசிப்பேன்" எனக் கூறுகிறான்.

"அப்படியே மாஸ்டர்" உங்களின் குரல் உங்களை மீறி ஒலிக்கிறது.

அந்தக் குட்டை மனிதன் சந்தோஷமாகச் சிரிக்கிறான். கூனலிட்ட இரண்டு தோள்களும் சிரிப்பில் அதிர்கின்றன. "வா! என்னைப் பின்தொடர்."

தூக்கத்தில் நடப்பவன்போல், வரவேற்பறையைக் கடந்து அகலமான ஹாலுக்குள் நுழைந்து, படியேறி ஒரு பெரிய அறைக்குள் நுழைகிறீர். அங்கே தரை மெத்தென்ற கார்ப்பெட் இடப்பட்டிருக்க சுவரெல்லாம் முகம் பார்க்கும் கண்ணாடி களாலும் படங்களாலும் அலங்கரிக்கப்பட்டு இருக்கின்றன. மற்றபடி அங்கிருந்த ஒரே பொருள் படுக்கை மட்டுமே.

அப்படுக்கையில் அழகான பெண்ணொருத்தி அமர்ந்திருந்தாள். அவள் நீலக் கலரில் கவுன் அணிந்திருக்கிறாள். மேனி ஆலிவ் நிறத்தில் பளபளவென்றிருக்கிறது. அவளுடைய நீலமும் கருமையும் கலந்த கூந்தல் ஆடம்பரமாக இருக்க, முகம் வட்ட வடிவில் மின்ன, உதடுகள் வாவென முழுமையாக அழைக்க, மொத்த உருவமே ஜெகஜ்ஜோதியாக இருக்கிறது.



ஆனால், அவள் கண்கள் (நீங்கள் அவற்றை முன்னரே பார்த்துவிட்டீர்கள்) ஒட்டுமொத்தக் காட்சியையுமே அலங்கோலம் செய்கிறது. அவை சிறைபிடிக்கப்பட்ட ஏதோ விலங்குடையதைப்போல் மங்கிப்போய் இருக்கின்றன. உங்கள் கண்களும் அதேபோல் இருக்குமா என்று ஆச்சர்யப்படுகிறீர்கள். அவள் அசைந்தபோது திரைப் படங்களில் மெதுவாக நகரும் காட்சியென மெள்ள அசைந்தாள்.

“அன்பே சற்று எழுந்திரு” கூனன் தன்னிரு கைகளையும் தேய்த்தபடி கூறினான்.

அந்தப் பெண் எழுகிறாள். அவளுடைய பார்வையற்ற பார்வை கூனனின் ஊடுருவும் கண்களைப் பார்க்கின்றன. “சொல்லுங்கள் மாஸ்டர்,” அவளுடைய குரல் எந்த உணர்ச்சியும் இன்றிக் கட்டைத்தனமாக ஒலிக்கிறது. எனினும் அதைமீறி ஒருவித இனிமை தோன்றுகிறது.

“கண்ணே! இதோ உன் பள்ளியறைத் துணை” என்று அந்தக் கூனன் உங்களைப் பார்த்தவாறு, தன் தோலாலான கைகளைக் கொண்டு காட்டுகிறான். நீங்கள் அவ்விடத்தில் ஆடுபோல் நின்றுகொண்டு அவனுடைய ஹிப்னாடிச வித்தையிலிருந்து அசைய மறுத்த உடலை அசைக்க முயல்கிறீர்.

“எழுந்திரு.”

“அப்படியே மாஸ்டர்,” அவள் உங்களைப் பார்த்தவாறு பணிவுடன் எழுகிறாள்.

ஒரு விலங்கின் மந்தமான பார்வையையும் மீறி அவளிடம் ஏதோ அழகு தென்படுகிறது. இளமையாக மென்மையாக, கன்னியாக, தனியாக அவள் இருக்கிறாள்.

வசீகரிக்கப்பட்ட நீங்கள் அவளுடைய தெய்வீகத் தன்மையை உற்றுப் பார்க்கிறீர்கள். இப்போது தப்பிப்போகும் எண்ணம் உங்களுக்கு இல்லை. அந்த மாஸ்டரின் மந்திர சக்தியை உடைக்க வேண்டும் என்று ஆவல் பிறக்கிறது. காரணம் அறையைவிட்டுப் போவதற்கல்ல; மாறாக அவளை நோக்கிப் பாய்வதற்கு.

உங்களின் பார்வை அவள் உருவத்தின் ஒவ்வொரு ஏற்ற இறக்கத்தையும், வளைவையும் பார்த்துக்கொண்டிருக்கும் போது அந்தப் பெண் கட்டிலின் முனையில் அமர்ந்தபடி இரு கால்களையும் குறுக்கிட்டுக்கொண்டு ஒரு செருப்பைக் கழற்றித் தரையில் எறிகிறாள்.

அதனால் உண்டான ஒலியில், ஸ்தம்பித்துப் போயிருந்த அவளுக்கு நினைவு திரும்புகிறது. அவளுடைய அகலமான அழகான கண்கள் குறுகிப் பார்க்கின்றன. அவளுடைய உணர்வுகள் மனிதத்தன்மை கொண்டதாகக மாறுகின்றன. இன்னும் கொஞ்சம் முயற்சித்தால் அவள் மீண்டு விடுவாள்.



எனினும் அந்த நிகழ்வு சற்றுநேரந்தான் நீடித்தது. மாஸ்டர், கழுகின் கால்களைப் போன்ற கைகளை நீட்டி, "அன்பே! நீ சற்று நேரம் உறங்குவாய்" என மந்திர வார்த்தையை ஏவுகிறான்.

இப்போது அவளுடைய கண்கள் பழையபடி வெற்றுப் பார்வை பார்க்கின்றன. அவள் இப்போது மற்றொரு செருப்பையும் கழற்றுகிறாள்.

கூனன் முரட்டுத்தனமாக இளித்தபடி, "ஆருயிரே! இப்போதைக்கு இது போதும் என்று நினைக்கிறேன்," என்று சொல்லிவிட்டுப் பிறகு உம் பக்கம் திரும்பி, "பையா! இனி இவள் உன் சொந்தம்" என்கிறான்.

அவன் மந்திர சக்தி இயக்க, அதேநேரம் உங்களின் கட்டுகள் அவிழ நீங்கள் ஆர்வமாக மெதுவாக நகர்கிறீர்கள். உங்களின் கால்கள் மணலில் புதையுண்டதுபோல் ஆழமாகப் புதைந்து இருக்கின்றன. நீங்கள் நடக்க நடக்க யுகங்கள் நகர்கின்றன. அவளை அடையவே முடியாதெனத் தென்படுகிறது.

இறுதியில் யுகங்கள் கழிந்துவிட்டாற்போல் தோன்றிய அந்தக் கணத்தில், அவளை அடைந்த நீங்கள் உங்கள் விரல்களால் தீண்டுகிறீர். தீண்டிய விநாடியில் உங்கள் உடல் முழுவதும் மின்னல் வெட்டினாற்போல் தோன்றுகிறது. உடனே நீங்கள் முன்னால் பாய்கிறீர்.

ஆனால், கண்ணுக்கு தெரியாத கைகள் உங்கள் தோள்களை பிடித்து பின்னுக்கு இழுக்கின்றன. உங்களுக்கு பின்னால் மாஸ்டரின் கரகரப்பான குரல் ஒலிக்கிறது. "ஐயோ! நீங்கள் இயந்திரத்தனமாக இருக்கிறீர்கள். இது என்னுள் எந்தவித தாக்கத்தையும் உண்டுபண்ணவில்லை."

பின் அவனுடைய கண்ணுக்கு தெரியாத கைகள் உங்கள் முகத்தை அவனுக்காகத் திரும்புகின்றன. "மாஸ்டர்! மாஸ்டர்!" என நீங்கள் கெஞ்சுகிறீர்.

அவனுடைய சரிந்த விழிகள் குறுகி, கீறலிட்ட வாய் அகலமாகத் திறந்து இளிப்பொன்றை உதிர்க்கிறது. "நான் உனக்கு நல்லதே செய்யப்போகிறேன்... அதாவது உனக்கும் எனக்கும். நான் உன் மேல் இருக்கும் ஹிப்னாடிச சக்தியை எடுத்துவிடப் போகிறேன், எனவே நீங்களிருவரும் சாதாரண மானிடப் பிறவிகள்போல் காதல் செய்ய முடியும்." என்கிறான்.

பின் அவள் தன் கைகளை ஆட்டினாள்.

"விழித்துக்கொள்ளுங்கள் நீங்கள் விழிக்கும்படி நான் ஆணையிடுகிறேன்."

உடனே உங்கள் தோள்களின் மேலிருந்த கண்ணுக்குத் தெரியாத கைகள் விலகிக்கொள்கின்றன. ஒருவித நடுக்கம் கடந்துபோகிறது. நீங்கள் ஒரு கையால் உங்கள் கண்களை அழுந்தத் துடைத்துக்கொள்கிறீர். பிறகு மூச்சை ஆழ இழுத்து விடுகிறீர். உங்களிடமிருந்தும் உங்கள் ஆத்மாவிடமிருந்தும் இனம் புரியாத விலங்குகள் மறைந்துவிட்டன. நீங்கள் சுதந்திரமடைந்துவிட்டீர்கள்.

இப்போது அந்த ஆலிவ் நிற அழகியின் பக்கம் ஆர்வம் பொங்கத் திரும்புகிறீர். ஆனால், அவளோ உங்களிடமிருந்தே எட்ட விலகுகிறாள். இச்சமயம் மந்தம் விலகிய அவளுடைய கண்கள் பயத்தைத் தெரிவிக்கின்றன. அவளுடைய இரண்டு சின்னஞ்சிறு கரங்களும் உங்களை அப்பால் போகச் சொல்லும்படி முன்னால் வந்து விழுகின்றன.



அணைக்க வந்த நீங்களோ அவள் நிலைமையைப் புரிந்து கொண்டு அவளைப் பாதுகாக்க முயல்கிறீர்.

உங்களுக்குப் பின்னால் இடியொத்த சிரிப்புடன் குரல் ஒன்று எழுகிறது. "அவளுக்கு உன்னைத் தெரியவில்லை. நீங்கள் சற்று நேரம் தனிமையில் இருக்கும்படி விட்டுவிட்டு போகிறேன். எனவே உங்களுக்குள் பழக்கமாகும்."

கதவு ஒன்று அறைந்து மூடுகிறது. தவிர சாவித் துளையில் சாவியை நுழைத்துப் பூட்டும் ஓசையும் கேட்கிறது.

அந்த யுவதி கட்டிலின் முனையில் அமர்ந்தபடி, உங்களின் வருகையைத் தவிர்க்கிறாற்போல், ஒரு கையால் கண்களை மூடிக்கொள்கிறாள்.

நீங்களோ சுய உணர்வுடன் பழையபடி நல்ல மனிதராக மாறிவிட, "இளம் பெண்ணே!" என்றபடி ஆழ மூச்சு விடுகிறீர். "பயப்படுவதற்கு ஏதுமில்லை. நான் உங்களுக்கு உதவி செய்ய வேண்டும், அவ்வளவே. எனக்கு உங்கள் நண்பனாக இருக்க வேண்டும். என்னை நம்புங்கள். இங்கிருந்து உங்களை

வெளியில் அழைத்துக்கொண்டு போய்விடுகிறேன். அந்தக் கூன் மனிதன் பெருத்த அபாயம் வாய்ந்தவன். அவனை வெல்ல நாம் வழி கண்டுபிடித்தாக வேண்டும்."

அவள் புன்னகை சிந்தி, தலையை மெதுவாக அசைத்தாள். "நான் உங்களை நம்புகிறேன்" அவள் கைகளை உயர்த்தி உங்கள் கைகளைப் பற்றுகிறாள்.

உடனே நீங்கள் அறையின் நான்கு சுவர்களையும் உன்னிப்பாக ஆராய்கிறீர்கள். எங்கேயும் எவ்வித ஜன்னலும் இல்லை. அங்கே இருந்தது தடிமனான ஓக் மரத்தால் செய்யப்பட்ட கதவு மட்டுமே.

"பிரயோஜனமில்லை" அந்த மங்கை சோகம் பொருந்திய, அதேநேரம் கிண்டலான குரலில் கூறினாள். "மாஸ்டர் நம்மைப் பாதுகாப்புடன் சிறை வைத்துள்ளார். நாம் செய்யக்கூடியது எதுவுமில்லை. ஒருவேளை அவர் உங்களை விடுவித்துவிடலாம். ஆனால், என்னை மட்டும் இங்கேயே வைத்துக்கொள்வார்."

"நான் போலீஸுடன் திரும்ப வந்து இந்த இடத்தையே தலைகீழாகப் புரட்டி உன்னைக் காப்பாற்றுகிறேன்." நீங்கள் உறுதி கூறுகிறீர்கள்.

அவள் பதிலுக்கு சோகமாகச் சிரித்தாள். "ஆச்சர்யந்தான்."

"எதற்கு ஆச்சர்யப்பட வேண்டும்? அந்த முட்டாள் கூனன் என்னை விடுவித்துவிட்டால் பிறகு திரும்பவந்து உங்களை மீட்கிறேன்" என நீங்கள் சொல்கிறீர்.

"ஆச்சர்யந்தான்!"

"எதற்காக நீங்கள் ஆச்சர்யந்தான் என்ற வார்த்தையை அடிக்கடி கூறுகிறீர்கள்?"

"ஏனெனில் உம்மைப்போலவே வேறு சில மனிதர்களையும் மாஸ்டர் இங்கே அழைத்து வந்திருக்கிறார். அவர்களும் நீங்கள் சொன்னதைப் போலவே சத்தியம் செய்து சொன்னார்கள். ஆனால், ஒன்றுமே நடக்கவில்லை."



"ஆனால், நான் சொன்னதைச் செய்வேன்."

"ஆச்சர்யந்தான்!"

"நிறுத்து," நீங்கள் சினங்கொண்டு வெடிக்கிறீர்கள். "கிளிப்பிள்ளைபோல சொல்வதை நிறுத்து, நான் வார்த்தையைக் காப்பாற்றுபவன். அதே சமயம் உன்னைப் போல் அழகு வாய்ந்தவளைப் பார்த்ததே இல்லை. அதற்காகவே திரும்ப வருகிறேன்."

"மாஸ்டர் ஹிப்னாடிச வித்தையில் கரைகண்டவர். அவர் உங்களை விடுவிக்கும் முன் எல்லாவற்றையும் மறக்கடித்து விடுவார்."

"உம்மைப் போலொரு அழகியை பார்த்ததையுமா?"

"ஆம், என்னைப்போல் - ஆனால்..."

"என்ன ஆனால்?"

"நீங்கள் என்னை உங்கள் கரங்களில் ஏந்திக்கொண்டால்!"

உடனே ஆவல் கொப்பளிக்க அவளை அணைத்துப் பிடித்துவிட, ஆசை எழும்ப, அவள் உதடுகளில் வெகு நேரம் முத்தமிடுகிறீர். அவளும் வேகம் கொண்டு முத்தமிடுகிறாள்.

பின் அவளைக் கைகளிலிருந்து விடுவித்தபின் உணர்ச்சி வசப்பட்டுக் கூறுகிறீர். "இனிமேல் மாஸ்டர் என்ன

வேண்டுமானாலும் செய்து கொள்ளட்டும். அந்த முத்தத்தை நான் ஒருபோதும் மறக்கப்போவதில்லை."

அப்போது உங்கள் இருவரையும் தவிர வெற்றிடமாக இருந்த அறையில் சிரிப்பொன்று எதிரொலித்தது.

திடுக்கிட்ட நீங்கள் எழுந்து சுற்றுமுற்றும் பார்க்கிறீர். ஆனால், அறையில் யாருமே இல்லை. அந்த ஆலிவ் நிறக் கட்டழகி மட்டுமே இருந்தாள்.

திரும்பவும் அதே சிரிப்பு எதிரொலித்தது. எங்கிருந்தோ அல்ல, எங்கேயும் இல்லாமல்.

"எங்கே உள்ளீர்கள் மாஸ்டர்?" நீங்கள் அழுகிறீர்.

"ஆ! நீ மரியாதை என்றால் என்னவென்று கற்றுக் கொண்டாய். அதனால் என்னை மரியாதையுடன் விளித்ததை கேட்டுக்கொண்டேன். நீங்கள் தந்தீர்களே முத்தம் அது எனக்கு சந்தோஷத்தைத் தந்தது. அதே நேரம் நீ எனக்கு நன்றி சொல்ல வேண்டும்" கரகரப்பான அக்குரல் கூறியது.

"முடியாது" என நீங்கள் எம்பி குதிக்கிறீர்.

"எங்களைப் போகவிடுங்கள், அல்லவெனில் போலீஸைக் கூப்பிடுவேன். அதேநேரம் நீங்கள் உள்ள இடத்தையும் சொல்லிவிடுங்கள்."

"அறையிலிருக்கும் கண்ணாடிகளின் பின்புறத்தில் இருக்கிறேன். அவையெல்லாம் எக்ஸ்ரே கண்ணாடிகள். உனக்கு அவை கண்ணாடிகளாக உன் உருவைக் காட்டும். ஆனால், எனக்கோ இந்த அறையைக் காட்டும்."

"உங்கள் குரல்?"

"நான் மைக்ரோபோனிலிருந்து பேசுகிறேன். ஒலிபெருக்கிகள் கண்ணாடியின் பின்புறமுள்ளன. இப்போது நான் அறைக்குள் நுழையப்போகிறேன்."

"நீங்கள் மட்டுமே இங்கே வந்தால் உங்கள் கழுத்தை முறுக்கிப்போட்டுவிடுவேன்."

"நான் அதற்கெல்லாம் பயப்பட மாட்டேன்."



நடுங்கிய அந்தப் பெண்ணை நீங்கள் அணைத்துப் பிடித்து ஆசுவாசப்படுத்துகிறீர்.

கதவு திறக்கும் ஓசை கேட்கிறது. அந்தக் கூனன் உள்ளே நுழைகிறான். உடனே நீங்கள் அவனை நோக்கிப் பாய்கிறீர்.

ஆனால், கவலைப்படாத அவன் உங்களை நோக்கிக் கைகளை நீட்ட, ஏதோ இரும்பு தாக்கியதைபோல் நீங்கள் கட்டிலில் அந்தப் பெண்ணின் மேல் பொத்தென விழுகிறீர்.

அசிங்கமான அந்தக் கிழவன் உங்களை நோக்கி முன்னேறியவாறு "உறங்கு, உறங்கு!" எனக் கூறுகிறான்.

உடனே நீங்கள் பலமற்று தொய்வடைந்துபோகிறீர்.

"எழுந்திரு" கர்ணகடூரமாக அவன் கூறினான்.

நீங்கள் எழுகிறீர்.



"பின்னால் வா!"

தூக்கத்தில் நடப்பவனைப்போல் நீங்கள் பின் தொடர்கிறீர்.

உங்கள் பின்னால் அந்தப் பெண்ணின் குரல் கெஞ்சுகிறது. "காதலரே! வெளியே போகும்போது இந்த வீட்டின் எண்ணைக் குறித்துக்கொள்ளுங்கள். பின், திரும்ப வாருங்கள்."

காதல் மிகுந்த சக்தி வாய்ந்தது. கண்ணுக்கு தெரியாத கைகள் உங்களைக் கட்டிப்போட்டாலும் அழுகிற குரலில் நீங்கள், "உன்னைக் காப்பாற்றுவேன்" என்று கூறுகிறீர்.

அவளுடைய மலரை நிகர்த்த விழிகள் நன்றிப் பெருக்கில் மலர்ந்தன. "நான் உங்களுக்காகக் காத்திருப்பேன்."

பிறகு கூனனைப் பின்பற்றித் தெருவிலிருக்கும் கதவை நோக்கிப் போகிறீர்.

வாசலில் மாஸ்டர் உங்களைப் பார்த்து, "நீ இந்த வீட்டில் நடந்ததை மறக்க மாட்டாய், அப்படித்தானே? இப்போது நான் சொல்கிறேன், எல்லாவற்றையும் மறப்பாய். படியிறங்கித் தெருவில் நடந்து முனைக்குச் சென்று வலது பக்கம் திரும்பு. அங்கே உனக்கு விழிப்பு ஏற்படும். அதே சமயம் நடந்தது எதுவும்

உனக்கு நினைவிருக்காது, போய் வா தோழனே!” என்று வசியப்படுத்துகிறான்.

நீங்கள் வெளியே போனதும் கதவு சாத்திக்கொண்டது.

அதே சமயம் உங்கள் காதுகளில் அந்தப் பெண்ணின் குரல் ரீங்காரமிட்டுகொண்டிருக்கிறது. “உங்களுக்காகக் காத்திருக்கிறேன்.”

இப்போது நீங்கள் கொஞ்சம் வலிமையை உணர்ந்து, அந்த வீட்டின் கதவு எண்ணை ஞாபகமாகக் குறித்துக் கொள்கிறீர்.

சந்துமுனைக்குச் சென்று திரும்புகிறீர். ஆனால், எல்லாமே மறந்துவிடுகிறது! எல்லாமுமே! அந்த வீடு, கிழவன், அழகான மங்கை.

வார்த்தையைக் காப்பாற்றுபவன் நான் என அந்தப் பெண்ணிடம் சூளுரைத்தீர்களே என்னவாயிற்று அது? அந்தப் பெண்ணைக் காப்பாற்றப் போகவில்லை.

உங்களிடம் நான் அறிந்த விஷயத்தை எல்லாம் சொல்லி முடித்துவிட்டேன். அதே சமயம் துரதிர்ஷ்டவசமாக எனக்கும் அந்த வீட்டின் எண் தெரியாது. உங்களைக் காதலித்த அந்தப் பெண்ணைக் காப்பாற்ற விரும்பினால், முதலில் முகவரி தெரிய வேண்டும். உங்களுக்குத் தெரியும். ஆழ்ந்து முயற்சி செய்வாய் தோழனே!

ஞாபகம் வரவில்லையா?

-ரால்ஃப் மிலன் ஃபார்லே, 1938

விகடன்
பிரசுரம்

Printed Books



இப்போது புது பீதி ஒன்று அவளை ஆட்கொண்டது. நிலவறையில் இருக்கும் பெண்ணின் பிணத்தை அப்புறப்படுத்தி வேறு எங்கேயாவது ஒளித்துவைக்க வேண்டும். பிறகு காவல் துறையினர் அந்தப் பெண்ணுக்கும் இந்த வீட்டுக்கும் தொடர்பு ஏற்படுத்த மாட்டார்கள்.

இப்போது அவன் பென்னுக்காக உள்ளுக்குள் குமுறினாள். அவன் மட்டும் வீடு வந்துவிட்டால், வீடு வந்து அந்தச் சவத்தை அப்புறப்படுத்தி வேறு எங்கேயாவது மறைத்து விட்டால்... பிறகு காவல் துறையினர் இந்த வீட்டைக் கொலையோடு சம்பந்தப்படுத்த மாட்டார்கள். அதைச் செய்யக்கூடிய அளவுக்கு அவனிடம் பலம் இருந்தது.

அந்தப் பிணத்தை அப்புறப்படுத்தும் அளவுக்கு அவளிடம் சக்தி இருந்தாலும், செய்வதற்கு தைரியம்தான் இல்லை. காரணம் வீட்டுக்கு வெளியே - அது நிஜமோ கற்பனையோ - யாரோ ஒரு கொடியவன் உலவிக்கொண்டிருக்கிறான். நிலவறையின் கதவு தானாகத் திறந்திருக்காது. ஒருவேளை அது அப்படியே திறந்திருந்தாலும் கொலையாளி இதை ஒரு வாய்ப்பாக எடுத்துக் கொண்டு தன் குற்றத்தை அப்பாவி பென் மேல் செலுத்த இதைச் செய்திருக்கிறான்.

அவள் அங்கே கூனிக் குறுகியபடி வெடவெடத்தாள். ஏதோ ஒரு பெரிய பொறி அவளை முடக்கிவிட்டாற்போல் தோன்றியது. ஒரு பக்கம் புயலும் தொடர்பற்ற தொலைபேசியும், மறு பக்கம் வெளியே உலவும் கொடியவனும் பெட்டியிலிருக்கும் பிணமும் இவற்றுக்கு இடையில் அவள் மாட்டிக்கொண்டு ஏதும் செய்ய முடியாமல் தவிக்கிறாள்.

ISBN 978-81-8476-544-1
9788184765441

ALFRED HITCHCOCK MARMA KATHAIGAL
₹ 110
(1ST EDITION)